# சங்க இலக்கியங்களில் பரிசில்

பாரதிதாசன் பல்கலைக்கழகத் தமிழ்
முனைவர் (Ph.D.) பட்டத்திற்காக
அளிக்கப்பெறும் ஆய்வேடு

ஆய்வாளர்:
**நா.அனிதா**
(பதிவு எண் : 011198/Ph.D.2/Tamil/Full Time/Re-Regn/July 2014)

நெறியாளர்:
**முனைவர் ஆ.இளங்கோவன்,** எம்.ஏ., எம்.ஃபில்., பிஎச்.டி.,
தமிழ் இணைப்பேராசிரியர்



தமிழ் உயராய்வு மையம்
தமிழவேள் உமாமகேசுவரனார் கரந்தைக் கலைக் கல்லூரி
தஞ்சாவூர் 613 002

மார்ச் 2016

**முனைவர் ஆ.இளங்கோவன்,**
எம்.ஏ., எம்.ஃபில்., பிஎச்.டி.,
தமிழ் இணைப்பேராசிரியர் & ஆய்வு நெறியாளர்,
தமிழ் உயராய்வு மையம்,
தமிழவேள் உமாமகேசுவரனார் கரந்தைக் கலைக் கல்லூரி,
தஞ்சாவூர் – 613 002.

# நெறியாளர் சான்றிதழ்

**சங்க இலக்கியங்களில் பரிசில்** என்னும் தலைப்பில் அமைந்த இவ்வாய்வு, பாரதிதாசன் பல்கலைக்கழகத்தின் முனைவர் (பிஎச்.டி.) பட்டத்திற்காக **நா.அனிதா** அவர்களால் என் மேற்பார்வையில் தன்னியலாகச் செய்யப்பட்டதாகும். தமிழவேள் உமாமகேசுவரனார் கரந்தைக் கலைக் கல்லூரித் தமிழ் உயராய்வு மையத்தில் அவர் செய்த இவ்வாய்வின் மீது இதற்குமுன் வேறெந்தப் பட்டமும் அளிக்கப்பெறவில்லை எனச் சான்றளிக்கிறேன்.

இடம் : கரந்தை
நாள் :

(ஆ.இளங்கோவன்)
நெறியாளர்

**நா.அனிதா,**
முனைவர் பட்ட ஆய்வாளர்,
தமிழ் உயராய்வு மையம்,
தமிழவேள் உமாமகேசுவரனார் கரந்தைக் கலைக்கல்லூரி,
தஞ்சாவூர் – 613 002.

# ஆய்வாளர் உறுதிமொழி

**சங்க இலக்கியங்களில் பரிசில்** என்னும் தலைப்பில் **முனைவர் ஆ.இளங்கோவன்** அவர்கள் மேற்பார்வையில் பாரதிதாசன் பல்கலைக்கழகத்தின் முனைவர் (பிஎச்.டி.) பட்டத்திற்காக நிகழ்த்தப்பட்ட இவ்ஆய்வேடு நான் மேற்கொண்ட ஆராய்ச்சியின் பயனாகும். இவ்ஆய்வேடோ, இதன் பகுதிகளோ இதற்குமுன் வேறு எந்தப் பட்டத்திற்கோ ஆய்வரங்கிற்கோ அளிக்கப்பெறவில்லை என்றும், இஃது என் சொந்த முயற்சியால் உருவாக்கப்பட்டது என்றும் உறுதி அளிக்கிறேன்.

இடம் : கரந்தை
நாள் :

(**நா.அனிதா**)
ஆய்வாளர்

## நன்றியுரை

சங்க இலக்கியங்களில் பரிசில் என்ற தலைப்பில் ஆய்வு செய்திட அனுமதியளித்த பாரதிதாசன் பல்கலைக்கழகத்திற்கு என் நன்றியறிதலைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

ஆய்வினைச் செம்மையாகச் செய்து நிறைவேற்ற உதவிய என் நெறியாளர் **முனைவர் ஆ.இளங்கோவன்** அவர்களுக்கு என் நன்றியையும் வணக்கத்தையும் தெரிவித்துக் கொள்கிறேன். இப்பணியில் தொடர்ந்து நான் முழுமையாக ஈடுபட உதவிய கல்லூரி முதல்வர் **முனைவர் இரா.இராசாமணி** அவர்களுக்கும், தமிழ்த்துறைத் தலைவர் **முனைவர் த.மலர்க்கொடி** அவர்களுக்கும் என் பணிவான வணக்கங்கள். தமிழ்த்துறைப் பேராசிரியப் பெருமக்களின் வாழ்த்திற்கும் ஊக்கத்திற்கும் என் நன்றியறிதலைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

தம் நூலக நூல்களைப் பெருமளவிற்கு உதவி இவ்ஆய்விற்குத் துணைபுரிந்த **பேரா.அரங்க.சுப்பையா** அவர்களுக்கும், எம் கல்லூரி நூலகர் மற்றும் அலுவலகப் பணியாளர் அனைவர்க்கும் என் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

என் பெற்றோர், சகோதரர், கணவர், மகன் ஆகியோர்க்கு நன்றியும் வாழ்த்தும் என்றும் உரியன. இவ்ஆய்வில் உதவிய தோழர், தோழியர்க்கும் என் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

என் ஆய்வேட்டினைத் திருத்தமுறத் தட்டச்சு செய்து கொடுத்த **நாகு கணினி அச்சகத்தார்க்கு** என் உள்ளார்ந்த நன்றியை உரித்தாக்குகின்றேன்.

**நா.அனிதா**

# சுருக்கக் குறியீட்டு விளக்கம்

| | | |
|---|---|---|
| அகம். | - | அகநானூறு |
| ஆ.ப. | - | ஆறாம் பதிப்பு |
| இ.ப. | - | இரண்டாம் பதிப்பு |
| உ.ஆ. | - | உரையாசிரியர் |
| உ.ஆர். | - | உரையாசிரியர்கள் |
| உ.வே.சா. | - | உ.வே.சாமிநாதையர் |
| எ.ப. | - | எட்டாம் பதிப்பு |
| ஐங். | - | ஐங்குறுநூறு |
| கலி. | - | கலித்தொகை |
| கா. | - | காட்சி |
| குறள். | - | திருக்குறள் |
| குறி. | - | குறிஞ்சி |
| குறுந். | - | குறுந்தொகை |
| சிலம்பு. | - | சிலப்பதிகாரம் |
| சிற். | - | சிற்றிலக்கியம் |
| சிறு. | - | சிறுபாணாற்றுப்படை |
| செ.ப. | - | செம்பதிப்பு |
| சேனா. | - | சேனாவரையர் |
| சொல். | - | சொல்லதிகாரம் |
| திரு. | - | திருமுருகாற்றுப்படை |
| தொ. | - | தொகுதி |
| தொல். | - | தொல்காப்பியம் |
| தொ.ஆ. | - | தொகுப்பாசிரியர் |
| நச்சர். | - | நச்சினார்க்கினியர் |
| நற். | - | நற்றிணை |
| நன். | - | நன்னூல் |
| நா.ப. | - | நான்காம் பதிப்பு |
| நூ. | - | நூற்பா |
| ப. | - | பக்கம் |
| பக். | - | பக்கங்கள் |
| பட். | - | பட்டினப்பாலை |
| பதி. | - | பதிகம் |
| பதிற். | - | பதிற்றுப்பத்து |

| | | |
|---|---|---|
| பரி. | - | பரிபாடல் |
| ப.ஆ. | - | பதிப்பாசிரியர் |
| ப.ஆர். | - | பதிப்பாசிரியர்கள் |
| ப.ப. | - | பத்தாம் பதிப்பு |
| பா. | - | பாடல் |
| புறம். | - | புறநானூறு |
| பெரும். | - | பெரும்பாணாற்றுப்படை |
| பொரு. | - | பொருநராற்றுப்படை |
| பொருள். | - | பொருளதிகாரம் |
| மது. | - | மதுரைக்காஞ்சி |
| மலை. | - | மலைபடுகடாம் |
| மரு. | - | மருதம் |
| ம.ப. | - | மறுபதிப்பு |
| மு.கு.நூ. | - | முன்னர்க் குறிப்பிட்ட நூல் |
| மு.ப. | - | முதன்மைப் பதிப்பாசிரியர் |
| மூ.அ. | - | மூன்றாம் அச்சு |
| மெய். | - | மெய்ப்பாட்டியல் |
| மேலது. | - | மேலே குறிப்பிட்ட நூல் |
| மொ.பெ. | - | மொழிபெயர்ப்பு |
| p. | - | page |

# பொருளடக்கம்


| இயல் | | பக்கம் |
|---|---|---|
| | முன்னுரை | 1 |
| 1 | பரிசில் – வரலாற்றுப் பார்வை | 13 |
| 2 | பரிசில் வழங்குவோர் | 50 |
| 3 | பரிசில் பெறுவோர் | 109 |
| 4 | பரிசில் பொருட்கள் | 135 |
| 5 | பரிசில் வழங்கும் சூழல்கள் | 181 |
| | முடிவுரை | 225 |
| | துணைநூற் பட்டியல் | i |

# முன்னுரை

உலகில் சிறந்த விழுமியங்களையும் தொன்மங்களையும் குறிப்பிடும் மொழிகளுள் குறிப்பிடத்தக்க மொழியாகத் தமிழ் விளங்குகிறது. தமிழின் சிறப்புக் கூறுகள் கிரேக்கம், இலத்தீன், சமஸ்கிருதம் போன்ற மொழிகளிலும் காணப்படுகின்றன. ஹோமரின் ஒடிசி, பிரெஞ்சு மொழிக் காவியங்கள், தமிழ் சங்க இலக்கியங்கள் போன்றவற்றைப் பழமைக்கு ஒப்பிட்டுக்கூறலாம். தமிழர் தொன்மையைக் குறிக்கும் நிலையில் பரிமேலழகரின் கருத்தொன்று சான்றாகிறது. “பழங்குடி” என்ற சொல்லுக்கு விளக்கம் தரும்போது அவர் “பழங்குடி என்பது தொன்றுதொட்டு வருகின்ற குடி; சேர சோழ பாண்டியர் என்றாற் போலப் படைப்புக் காலந்தொட்டு மேம்பட்டு வருதல்”[1] எனக் குறிப்பிடுகிறார். இவ்வாறு உலகப்பழமை வாய்ந்த இலக்கியங்களுக்குச் சான்றாகத் தமிழ் இலக்கியங்கள் பேசப்படுகின்றன. சங்கத் தமிழ்ச் செய்யுட்களில் இயற்கைக் கருத்துக்களைப் போலச் சமயக் கருத்துக்களும் கூறப்பட்டுள்ளன. சிவன், திருமால் போன்ற தெய்வங்கள் சங்க இலக்கியங்களில் பதிவாகியிருப்பதால் இவ்விலக்கியங்களின் தொன்மை விளங்குகிறது.

> சங்க இலக்கியங்களில் அறிமுக நிலையிலிருந்த சிவன், திருமால் வழிபாட்டு முறைகள் சங்கம் மருவிய காலத்தின் இறுதியில் இருபெரும் பக்தி இயக்கங்களாகக் கால்கொண்டன[2]

என்று ‘காரைக்காலம்மையார் படைப்புகள்’ நூலின் ஆசிரியர்கள் கூறுகின்றனர். இதுபோல உலக மகா காப்பியங்களுக்கும், தமிழ்க் காவியங்களுக்கும், இந்தியக் காவியங்களுக்கும் தொடர்பு உள்ளதை ஆராய்ச்சியாளர்கள் கூறுகின்றனர். உலக காவியங்களின் தன்மைகள் தமிழில் உள்ளதை இவர்கள் கூற்று உறுதி செய்கின்றது.

> பழங்காலத்தில் கிரேக்கச் சமுதாயத்தில் போற்றிப்பாடல்களும் தன்னுணர்ச்சிப் பாடல்களும் இசைக்கப்பட்ட முறையை ஓரளவு உணர்ந்தால் தமிழில் அத்தகைய பாடல்கள் எங்ஙனம் பாடப்பெற்றன என்பதை அறிய இயலும்[3]

என்று கதிர்.மகாதேவன் கூறுகிறார்.

*இலக்கிய வளமும் வரலாற்றுத் தொன்மையும் படைத்த தமிழ் மக்களுக்கென்று தனிப்பண்பாடு உள்ளது. மிகப் பழங்காலத்திலேயே செழுமையான (குறைவற்ற) பண்பாட்டுக் கூறுகள் தமிழில் வளர்ந்துள்ளன. சிந்துசமவெளி நாகரிகத்திற்கு ஒப்பத் தமிழர் நாகரிகம் காணப்பட்டதென்பது வரலாற்றுக் குறிப்பாகும். "கல்தோன்றி மண்தோன்றா காலத்தே வாளோடு முன்தோன்றி மூத்தகுடி"[4] என்று குடிப்பெருமை கூறப்படுவதால் நாகரிகமும் பண்பாடும் மிகுந்த சமூகமாகத் தமிழ்ச் சமூகம் விளங்கி வந்துள்ளதை உணரமுடிகிறது. அரசு அமைப்புச் செயல் திட்டங்கள், ஊராட்சி முறை, வரி விதிப்புகள், விலக்குகள் போன்றவை சங்க காலத்திலேயே இருந்ததையும் காணமுடிகிறது. ஆட்சித் தத்துவம், இலக்கிய வளர்ச்சி போன்றவையும் தொன்மைப் பண்பாட்டுக்கு எடுத்துக்காட்டாக விளங்குகின்றன. அதனால் பழந்தமிழர் சிறப்புக்கள் அனைத்தும் அவர்தம் கல்வியால் அமைந்தது என்கின்றனர்.[5]*

*வளர்ச்சியடைந்த தமிழ்ச் சமூகத்தில் மிகத் தனிச் சிறப்புடைய வாழ்க்கை முறையைக் காணமுடிகிறது. அகம், புறம் என்ற வாழ்வியல் முறையை இதில் அடக்கலாம். சங்க இலக்கியங்களும் அக இலக்கியங்கள், புற இலக்கியங்கள் என இருவகையாகப்படுதலைத் தனிச் சிறப்பாகக் கூறுவர். இவ்விலக்கியங்களில் சிறந்த விழுமியங்கள்* (Excellency) *கூறப்படுகின்றன. இவை பொதுவானவையாகவும் தமிழர்க்கே உரியவையாகவும் காணப்படுகின்றன. சமுதாய வளர்ச்சிக்கும் பிற நாகரிக வளர்ச்சிக்கும் இந்த விழுமியங்கள் உதவுகின்றன. இவற்றின் அடிப்படையில் பிற மொழி இலக்கியங்களையும் பண்பாட்டுக் கூறுகளையும் ஒப்பிட முடிகிறது.*

*சங்க இலக்கியங்களில் அகக்கூறுகள், நீதிக்கருத்துக்களைப் போலவே வரையறுக்கப்பட்டிருக்கின்றன. ஆண்கள், பெண்களுக்குத் தனித்தனி வாழ்க்கை ஒழுக்கங்கள் கூறப்பட்டிருக்கின்றன. இவை விதிகளைப் போல் அல்லாமல் மன உணர்வு நிலையிலேயே பதிவாகியுள்ளன. கூறப்பட்ட விழுமியங்களுள் மக்களுக்கு உரியனவும், மன்னர்களுக்கு உரியனவும் எனப் பல கூறப்பட்டன. "யாதும் ஊரே யாவரும் கேளிர்"[6] போன்ற கருத்துக்கள் எல்லார்க்கும்*

உரியவை. “நன்னடை நல்கல் வேந்தர்க்கு கடனே”[7] என்பது மன்னர்க்கு உரியது. விருந்தோம்பல், போற்றார்ப் பொறுத்தல், நன்றியுணர்வு போன்ற விழுமியங்கள் யாவர்க்கும் உரியன.

யாதானும் நாடாமால் ஊராமால் என்னொருவன்
சாந்துணையும் கல்லாத வாறு[8]

என்பது யாவர்க்கும் உரியது எனலாம். கொடை வீரத்தின் சீராகவும் சிறப்பாகவும் விளங்கியது.[9] இவ்வாறு பொதுவான விழுமியங்களுள் பரிசில் (கொடை) வழங்கல் குறிப்பிடத்தக்கதாகும். சங்க இலக்கியங்களில் பரிசில் பற்றிய ஆய்வாக இவ்வாய்வு அமைந்துள்ளது. பரிசில் பொது விழுமியம் ஆயினும் சிறப்பாக மன்னர்க்கு உரியதாகக் காணப்படுகின்றது. “புகழ் வீரத்தாலும் செல்வத்தாலும் கொடையாலும் நிறுவப்பட்டு, புலவர்தம் பாடல்களால் அழியா இடம்பெறுகின்றது என்பதை அறியலாம்”[10] என்கிறார் கதிர்.மகாதேவன்.

## ஆய்வுத் தலைப்பு

**சங்க இலக்கியங்களில் பரிசில்** என்னும் பொருளில் இவ்வாய்வு அமைந்துள்ளது.

## ஆய்வு நோக்கம்

பரந்துபட்ட சங்கப் பாடல்களில் பரிசில் என்னும் ஒரு விழுமியம் சங்ககால அரசியலைத் தாங்கி நிற்கும் நிலைமையை விளங்கிக் கொள்வது தேவையாகிறது. குறிப்பாகப் புறப்பகுதி விழுமியங்களை ஆராயும் போது அவற்றிற்கும் அரசியலுக்கும் உள்ள உறவை அறிந்து கொள்ளுதல் இவ்ஆய்வின் நோக்கமாக அமைந்துள்ளது.

## தலைப்புத் தேர்வு

எம்.ஃபில். ஆய்வு முடிந்த பின்னர் மேற்கொண்டு முனைவர் பட்ட ஆய்வு செய்வதற்கு முனைந்த நிலையில் சங்க இலக்கியங்களைப் பற்றி ஆய்வு செய்யும் சூழ்நிலை உருவானது. தமிழ்ச் செம்மொழி என்று அறிவிக்கப்பட்டதும், இதுபற்றிய கருத்தரங்கங்கள், பயிலரங்கங்கள் ஆகியன

பல்கலைக்கழகம், கல்லூரிகளில் நிகழ்ந்து வருகின்றன. இந்தப் போக்கு, சங்க இலக்கிய ஆய்வு குறித்த பார்வையை மேலும் தூண்டிற்று. இதனைத் தொடர்ந்து சங்க இலக்கியம் பற்றிய ஆய்வுகள், பொதுவான நூல்கள் ஆகியவற்றைத் தேடிப் படிக்கும் வாய்ப்புக்களும் கிடைத்தன. அந்த வகையில் அ.தட்சிணாமூர்த்தி ஆராய்ந்து எழுதியது ‘சங்க இலக்கியங்கள் உணர்த்தும் மனித உறவுகள்’ என்ற பெயரில் நூலாக வெளிவந்திருந்தது. அதில் ‘சங்க காலச் சமூகம்’, ‘ஆண் பெண் உறவு’, பெற்றோர், தலைமக்கள், தனிமனிதன், மன்னர் குடிகள், வேந்தர்கள், குறுநிலத் தலைவர்கள், போர்வீரர்கள், புலவர்கள், கலைஞர்கள், வள்ளல்கள் ஆகியவர்கள் இடையே உள்ள மனித உறவுகள் பற்றி விரிவாக எழுதப்பட்டிருக்கிறது. பாடுபொருளில் பரிசுகள் பற்றிய குறிப்புக்கள் பரவலாகத் தரப்பட்டிருந்தன. இக்குறிப்புக்களை அடிப்படையாகக் கொண்டு சங்ககாலச் சமூகத்திற்கும் கொடைப்பண்பிற்கும் இருந்த உறவு பற்றியும் பரிசில் தேவை குறித்தும் மேலும் ஆழமாக ஆராயப் பின்புலம் இருந்ததை அறியமுடிந்தது. அதன் அடிப்படையில் ‘பரிசில்’ பற்றிய ஆய்வு தேர்வு செய்யப்பட்டது. இதற்கு முன்னர் புலவர், புரவலர் பற்றிய ஆய்வுகள் வெளிவந்து பரிசில் பற்றிக் குறிப்பிட்டுள்ளன. முழுமையும் பரிசில் தேர்வு செய்யப்பட்டுக் கொடுத்தோர், கொள்வோர், பொருள், சூழல், ஏதுக்கள் போன்றவற்றை விரிவாக ஆராயும் வகையில் மற்ற ஆய்வுகளிலிருந்து இவ்ஆய்வு வேறுபடுகிறது.

### கருதுகோள்

பரிசில் வழங்கல் என்னும் ஒரு செயல்முறை அரசியல் கூறாக மட்டுமின்றிச் சமூகப் பண்பாட்டு உறவாகவே அமைந்திருக்கிறது என்பதை இவ்வாய்வு கருதுகோளாகக் கொண்டுள்ளது. அரசு பொறுப்பிலிருக்கும் அரசர் முதலாயினார் மட்டுமின்றி எளியோரும் பிறரைப் பாராட்டுதலையும் பிறர்க்கு உதவுதலையும் (பொருள்) செய்துள்ளனர். சங்க இலக்கியங்கள் இதனை வெளிப்படுத்துவதன் மூலம் இக்கருத்தை உணர்ந்து பார்க்க முடிகிறது.

**அணுகுமுறை**

செய்யுட்களில் வரும் பரிசில் குறித்த செய்திகளையும் சார்புடைய தகவல்களையும் விளக்கி எழுதுவதற்கும் புலவர், மன்னர் போன்றோர் நடவடிக்கைகளைச் சுட்டி எழுதுவதற்கும் முறையே விளக்கமுறைத் திறனாய்வும், வரலாற்றுமுறைத் திறனாய்வும் பயன்படுத்தப்பட்டுள்ளன.

**முன்னாய்வுகள்**

1956இல் கா.கோவிந்தன் ‘சங்ககால அரசர் வரிசை’ என்ற நூலை எழுதியுள்ளார். இந்நூல் அரசர்களைக் கால வரிசையில் குறிப்பிடுகிறது. அரசர்களைப் பற்றிய வரலாறுகளைக் கூறுகிறது. 1956இல் வ.சுப.மாணிக்கம் ‘சங்க இலக்கியத்தில் அகத்திணை’ ஆய்வை வெளியிட்டுள்ளார். தலைவன், தலைவியர், நற்றாய் போன்ற இலக்கியப் பாத்திரங்களின் தன்மைகள் இதில் விவரிக்கப்பட்டுள்ளன. பெற்றோர், மக்களுக்கு வழங்குதல், பொதுமக்கள் பிறர்க்கு வழங்குதல் போன்ற செய்திகளை அறிந்து கொள்ள இந்நூல் உதவுகிறது. 1980இல் தயாபரசுந்தரியின் ‘சங்க இலக்கியங்களில் கொடைக் கோட்பாடுகள்’ ஆய்வு வெளிவந்துள்ளது. இது மன்னர்கள் வழங்கிய கொடை முறைகளை / தொண்டு மனப்பான்மையை விளக்குகிறது.

1980இல் கு.வெ.பாலசுப்பிரமணியனின் ‘சங்க இலக்கியத்தில் புறப்பொருள்’ ஆய்வு வெளிவந்துள்ளது. இது புலவர் பெருமை, அரசர் பெருமை, அரசர்கள் வழங்கிய கொடைப் பெருமை, துறை விளக்கம், கிரேக்கப் புறப்பொருள் பண்புகள் போன்ற செய்திகளை விளக்குகிறது.

2001இல் அ.தட்சிணாமூர்த்தியின் ‘சங்க இலக்கியங்கள் உணர்த்தும் மனித உறவுகள்’ நூல் வெளிவந்துள்ளது. இந்நூல் பெற்றோர், மக்கள், அரசர்-புலவர், வீரர் போன்றோரின் சமூக உறவுகள் ஆகியவற்றை எடுத்துக் கூறுகிறது. மேலும் பின்குறிப்பாகப் பல ஆய்வுக் குறிப்புகள் இதில் தரப்பட்டுள்ளன. அக்குறிப்புக்கள் இவ்வாய்விற்குப் பயன்பட்டுள்ளன.

*2001இல் வெளிவந்த வ.குருநாதன் எழுதிய, 'சங்ககால அரச வரலாறு' என்னும் இந்நூல் சேர, சோழ, பாண்டியர் மூவர் வரலாற்றையும் தொகுத்துக் கூறுகிறது. 2003இல் அ.ஐம்புலிங்கம் எழுதிய 'சங்க கால வேந்தர்களின் சமுதாயப் பணி' என்னும் நூல் வெளிவந்துள்ளது. மூவேந்தர்களின் சமூகப்பணியைக் கூறி அவர்கள் வழங்கிய பரிசிலையும், கொடையையும் உணர்த்துவதாக இந்நூல் அமைந்துள்ளது.*

*2006இல் அரங்க இராமலிங்கம் வெளியிட்ட, 'சங்க இலக்கியத்தில் வேந்தர்' நூல் வெளிவந்துள்ளது. வேந்தர், புலவர்களுக்குரிய அடிப்படைப் பண்புகள், ஆட்சிமுறைகள், பரிசில் குறித்த விவரங்கள் இதன்கண் தரப்பட்டிருக்கின்றன.*

**ஆய்வுப்பரப்பும் எல்லையும்**

*பத்துப்பாட்டு, எட்டுத்தொகை என்னும் இருதிறத்து இலக்கியங்களையும் அவற்றில் காணப்படும் விழுமியங்களையும் அடிப்படையாகக் கொண்டு இவ்வாய்வு நிகழ்த்தப் பெறுகிறது. மேலும் அவ்விலக்கியங்களில் இருந்து வேறு சில இலக்கியக் கருத்தாடல்களும் பயன்படுகின்றன. இந்த அளவில் இவ்வாய்வு முறைப்படுத்தப்படுவதால் மேற்சுட்டிய இலக்கியங்களும், விழுமியங்களும் ஆய்வின் பரப்பாக அமைகின்றன. ஆய்வு எல்லை ஆய்வுப் பரப்பின் கருப்பகுதியாக இருப்பது வெளிப்படை. சங்க இலக்கிய விழுமியங்கள் பலவற்றுள் பரிசில் வழங்குதல் என்ற ஒரு பகுதி பதிவாகியிருக்கும் இடங்கள் இவ்வாய்வின் எல்லையாகக் கொண்டு ஆராயப்படுகிறது.*

**முதன்மை ஆதாரம்**

*நற்றிணை முதலாக கலித்தொகை ஈறாகச் சொல்லப்படும் எட்டுத்தொகை நூல்கள் எட்டும், பத்துப்பாட்டில் அடங்கியுள்ள பத்து நூல்களும் இவ்வாய்வின் முதன்மை ஆதாரமாக எடுத்துக் கொள்ளப்பட்டுள்ளன.*

**துணை ஆதாரம்**

*பரிசில்கள் பற்றிச் சங்க இலக்கிய அடிப்படையில் வெளிவந்த கட்டுரைகளும், ஆய்வேடுகளும், இதழ்களும், பிற ஆராய்ச்சி ஏடுகளும், அகராதிகளும் இவ்வாய்விற்குத் துணை ஆதாரங்களாகக் கொள்ளப்பட்டுள்ளன.*

**ஆய்வேட்டின் அமைப்பு**

*இவ்வாய்வேடு முன்னுரை, முடிவுரை நீங்கலாக ஐந்து இயல்களைக் கொண்டுள்ளது.*

1. *பரிசில் - வரலாற்றுப் பார்வை*
2. *பரிசில் வழங்குவோர்*
3. *பரிசில் பெறுவோர்*
4. *பரிசில் பொருட்கள்*
5. *பரிசில் வழங்கும் சூழல்கள்*

*என்னும் தலைப்புகளில் இவை அமைக்கப்பட்டுள்ளன.*

***பரிசில் - வரலாற்றுப் பார்வை*** *என்பது முதல் இயலாகும். இது ஒன்பது உட்கூறுகளாகப் பிரிக்கப்பட்டு ஆய்வு செய்யப்படுகிறது. முதலில் பரிசில், கொடை என்னும் சொற்களுக்கு விளக்கம் தரப்படுகிறது. இச்சொற்கள் பற்றிய ஆய்வு நூல்கள், அகராதிகள், அறிஞர்கள் கூறும் செய்திகள் விளக்கப்பட்டுள்ளன. பரிசில் என்ற சொல் பல இலக்கியங்களில் பதிவாகியிருக்கும் நிலை அடுத்துக் கூறப்பட்டுள்ளது. பிற மொழிகளில் காணப்பெறும் இச்சொல்லுக்கு இணையான பதிவுகள் எடுத்துக் கூறப்பட்டுள்ளன. சங்க இலக்கியங்களில் பரிசில் என்னும் சொல் காட்டப்பட்டுள்ள இடங்களும் அதுபற்றிய விளக்கங்களும் அறிமுகம் செய்யப்பட்டுள்ளன. இதனை அடுத்து அற இலக்கியங்களில் பதிவாகியுள்ள "பரிசில்" என்ற சொல் பற்றிய விவரங்கள் விவாதிக்கப்பட்டுள்ளன. திருக்குறள் முதலான அறநூல்களில் இடம்பெறும் பரிசில் தொடர்பான சொற்கள் சுட்டப்பட்டுள்ளன.*

இடைக்கால இலக்கியங்களாகிய பக்தி இலக்கியங்களில் "பரிசில்" சொல் இடம்பெறும் சூழ்நிலை விவாதிக்கப்பட்டுள்ளது. இதில் சைவ, வைணவ இலக்கியங்களில் கூறப்படும் பரிசில் சொற்கள் தொகுத்துக் கூறப்பட்டுள்ளன. ஐம்பெருங்காப்பியங்களில் இச்சொல் பற்றிய பதிவு இடங்கள் குறிப்பிடப்பட்டுள்ளன. சிற்றிலக்கியங்கள் "பரிசில்" சொல்லுக்குத் தந்துள்ள இடங்கள் விளக்கப்பட்டிருக்கின்றன. நவீன இலக்கியங்களில் பாரதியார், பாரதிதாசன், கவிமணி தேசிக விநாயகம் பிள்ளை ஆகியோர் பாடல்களில் பரிசில் இடம்பெற்றுள்ளமை வரிசைப்படுத்தப்பட்டுள்ளது. இயல் இறுதியில் தொகுப்புரை தரப்பட்டுள்ளது.

**பரிசில் வழங்குவோர்** என்பது இரண்டாம் இயல். இதில் மன்னர், குறுநில மன்னர், வேளிர், சீறூர் மன்னர், புலவர்கள் போன்றோர் பரிசில் கொடுப்பது குறித்தும் இவர்களுடைய வரலாறு குறித்தும் பேசப்படுகிறது. ஆடுகோட்பாட்டுச் சேரலாதன், இமயவரம்பன், இளஞ்சேட்சென்னி, உதியஞ்சேரலாதன், கடல்பிறக்கோட்டிய செங்குட்டுவன், கரிகாற்பெருவளத்தான், கருங்கையொள்வாள் பெரும்பெயர்வழுதி, களங்காய்கண்ணி நார்முடிச்சேரல், இளஞ்சேரல் இரும்பொறை, குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவன், சேரமான் கோதை, சோழன் நலங்கிள்ளி, தலையாலங்கானத்துச் செருவென்ற பாண்டியன் நெடுஞ்செழியன், செல்வக்கடுங்கோ வாழியாதன், தகடூர் எறிந்த பெருஞ்சேரல் இரும்பொறை, பல்யானை செல்கெழு குட்டுவன், பாலை பாடிய பெருங்கடுங்கோ, யானைக்கட்சேய் மாந்தரஞ்சேரல் இரும்பொறை, சேரமான் வஞ்சன், பல்யாக சாலை முதுகுடுமிப் பெருவழுதி ஆகிய மன்னர்கள் வரலாறும் எடுத்துக் கூறப்பட்டுள்ளன. இதனையடுத்துக் குறுநில மன்னர்களின் வரலாறும், கொடைத் தன்மைகளும் கூறப்படுகின்றன. இவர்கள் இருபத்து இருவர் (22). இவர்களின் அரசியல் வரலாறு, பரம்பரை வரலாறு, நிலப்பகுதி, கொடை வழங்கிய வரலாற்று நிகழ்வுகள், இம்மன்னர்களின் தனிச்சிறப்புக்கள் ஆகியவை விளக்கப்பட்டுள்ளன.

வேளிர் மரபினர் மன்னர்களைப் போலவே வரலாற்றுச் செய்திகளையும், கொடைச் செய்திகளையும் கொண்டுள்ளனர். இவர்களின் வரலாறும் கொடையளி செய்த முறைகளும் எடுத்துக் கூறப்பட்டுள்ளன. வேளிர் ஆண்ட பகுதிகள், தனிச்சிறப்புக்கள் விளக்கப்பட்டுள்ளன.

இவர்களையடுத்துச் சீறூர் மன்னர்கள் குறிப்பிடப்பட்டுள்ளனர். இவர்களின் பெயர் அமைந்த முறை, அரசாண்ட நிலப்பகுதிகள், தனிச்சிறப்புக்கள், கொடைத்தன்மைகள் ஆகியன விளக்கப்பட்டுள்ளன.

இவர்களையடுத்துத் தமிழ்ப் புலவர்கள் கொடை வழங்கியதும், தனிச் சிறப்புக்களும், வரலாறும் இப்பகுதியில் விளக்கப்படுகின்றன. புலவர்களுள் கபிலர், பெருஞ்சித்திரனார் என்ற இருவர் பற்றிய செய்திகள் கூறப்படுகின்றன.

திணைசார் மக்கள் குறிப்பிட்ட சில நிலப்பகுதியில் வாழ்ந்த ஆயர் முதலான மக்கள். இவர்கள் அளித்த கொடை குறித்தும், இவர்களுடைய வாழ்நிலை, அரசியல் நிலை ஆகியவை குறித்தும் இலக்கிய வகையில் இவர்கள் குறிப்பிடப்பட்டுள்ள நூல்கள் குறித்தும் விளக்கப்பட்டுள்ளது. இயல் இறுதியில் தொகுப்புரை இடம்பெற்றுள்ளது.

**பரிசில் பெறுவோர்** என்பது மூன்றாம் இயலாகும். சங்க இலக்கியங்களில் பரிசில் பெறுவோர் பல வகையினராய்க் காணப்படுகின்றனர். அஃறிணைப் பொருள்களுக்கும் பரிசில் வழங்கப்பட்ட செய்திகள் இதன்கண் கூறப்பட்டுள்ளன. தெய்வமும், தேவரும் பரிசு பெற்ற செய்திகள் சுட்டப்பட்டுள்ளன. காவியங்களில் புராணச் செய்திகளாக வரும் கொடைச் செய்திகள் சங்க இலக்கியத்தின் வழி வெளிப்படுத்தப்படுகின்றன. பரிசிலர், பொதுமக்கள், மன்னர்கள், வீரர்கள் போன்றோரின் பண்புகளும் அவர்கள் பொருள் பெறும் நிகழ்வுகளும் கூறப்படுகின்றன. இறுதியில் தொகுப்புரை இடம்பெற்றுள்ளது.

**பரிசில் பொருள்கள்** என்பது நான்காம் இயல் ஆகும். இது சங்க இலக்கியங்களில் பரிசிலாக வழங்கப்பட்ட பொருள்கள் பற்றியும், அதன் தன்மைகள், மதிப்பு, சிறப்புக்கள் குறித்தும் பேசும் இயலாக அமைகிறது. முதற்கண் அணிகலன்கள் பரிசாக வழங்கப்பட்ட தகவல்கள் விளக்கப்படுகின்றன. அணிகலன்கள் பொன் அணிகலன்கள், பொற் பூக்கள் எனப் பல வகைப் பெயர்களில் வழங்கப்பட்டது குறிக்கப்பட்டுள்ளது. இதனையடுத்துப் பலவகை ஆடைகள் பரிசிலாக வழங்கப்பட்ட செய்திகள் ஆராயப்படுகின்றன. இதுபோலவே உணவுப் பொருள்களை வழங்கிய செய்திகளும் இதன்கண் எடுத்துரைக்கப்பட்டுள்ளன. ஊர், நாடு ஆகிய இடங்கள், அவற்றிலிருந்து கிடைக்கும் வருவாய் ஆகியன பரிசுப் பொருள்களாக வழங்கப்படுவது விளக்கப்பட்டுள்ளது. போருக்குப் பயன்பட்ட யானை முதலானவையும் சில போர்க் கருவிகள் பரிசளிக்கப்பட்ட செய்திகளும் விளக்கப்பட்டுள்ளன.

மேற்குறித்த பொருள்களன்றி வேறு சில பொருள்கள் பரிசளிக்கப்பட்ட வரலாறும் இவ்வியலில் விளக்கப்பட்டுள்ளது. உணவுப் பொருள்கள் வகைப்படுத்திக் கூறப்பட்டுள்ளன. இதுபோலவே போர்ப் பயன்படு பொருள்களும் வகைப்படுத்தப்பட்டுள்ளன. பெயர் சுட்டி வரும் உணவுகளும், உணவு எனப் பொதுப் பெயரால் வருவனவும் பரிசுப் பொருள்களாக இடம்பெற்றுள்ளன. அகம், அறிவு, உள்ளம் சார்ந்த பொருள்கள், விலங்கு சார்ந்த பொருள்கள் போல்வன பரிசில்களாக வழங்கப்பட்ட செய்திகள் இறுதிப்பகுதியில் விளக்கப்பட்டுள்ளன. இயல் இறுதியில் தொகுப்புரை தரப்பட்டுள்ளது.

**பரிசில் வழங்கும் சூழல்கள்** என்பது ஐந்தாம் இயலாகவும், இவ்வாய்வின் இறுதி இயலாகவும் உள்ளது. இதன்கண் கொடைப் பொருள்கள் வழங்குவதற்கு ஏற்பட்ட சூழ்நிலையும் வழங்கப்பட்ட இடங்களும், காலநிலையும், இவை போன்ற பிற செய்திகளும் விளக்கப்படுகின்றன. இயலின் முதற்கண் பரிசு வழங்குதலுக்கும் அதனைப் பெறுதற்கும் உரிய காரணங்கள் (ஏதுக்கள்) விளக்கப்பட்டுள்ளன. அடுத்துப்

பரிசு வழங்கப்பட்ட இடங்கள், அதற்கான சூழ்நிலை ஆகியன விளக்கப்படுகின்றன. ‘ஏதுக்கள்’ பலவாய் நிற்றல் விளக்கப்படுகிறது. இதனையடுத்துப் பரிசுகள் ‘வழங்கப்படும் இடங்கள்’ பற்றிய தரவுகள் விவாதிக்கப்படுகின்றன. பரிசு வழங்கப்பட்ட இடங்கள் வகைப்படுத்தப்பட்டுள்ளன. பரிசு வழங்கப்பட்ட பொழுதுகளும் அதற்கான காரணங்களும் விளக்கப்படுகின்றன. பொழுதுகள் காலை, மாலை போன்ற வரையறைகளைக் கொண்டுள்ளதும் சுட்டப்பட்டுள்ளன. பொருள் கொடுப்பார்க்கும் கொள்வார்க்கும் இடையே உள்ள நட்பு முதலான உறவுகள் பலவும் விளக்கப்பட்டு அவற்றிற்கேற்பப் பொருள்கள் வழங்கப்பட்டமை எடுத்துரைக்கப்பட்டுள்ளது. இயலிறுதியில் தொகுப்புரை தரப்பட்டுள்ளது.

இறுதி இயலை அடுத்து முடிவுரை தரப்பட்டுள்ளது. முடிவுரைக்குப் பின் துணைநூற் பட்டியல் இணைக்கப்பட்டுள்ளது. இவ்வாய்வில் சங்க இலக்கியப் பதிவுகளாகிய சான்றாதாரங்கள் இயல்களில் ஆங்காங்கே அடைப்புக் குறியில் பாடல் எண்களுடன் தரப்பட்டுள்ளன. உரையாசிரியர் கருத்துக்கள், துணைச் சான்றாதார நூற்கருத்துக்கள் போன்றவை அவ்வவ்விடத்தில் குறியீட்டு எண் கொடுத்து அவ்எண்களுக்குரிய விளக்கங்கள், இயல் இறுதியில் சான்றெண் குறிப்புப் பகுதியில் எண்ணிட்டுத் தரப்பட்டுள்ளன. ஐஞ்சிறுகாப்பியங்களில் முழுவதும் கிடைக்காமையால் அவற்றில் இடம்பெறும் கொடைக் குறிப்புக்கள் முதல் இயலில் இடம்பெறவில்லை.

**பரிசில் வழங்குவோர்** என்ற இயலில் மன்னர்கள் பற்றிய பாடல்கள் ஆங்காங்கே குறிப்பிடப்பட்டு, அடைப்புக்குறியில் பாடல் எண்கள் தரப்பட்டுள்ளன. இப்பாடல்கள் இவர்களின் கொடை தவிர்த்த மற்றச் சிறப்புக்களைக் கூறுவன. இம்மன்னர்களின் கொடைச்சிறப்புக் கூறப்படும் பாடல்கள் மட்டும் மன்னர்கள் வரலாற்றை அடுத்து அட்டவணையில் தரப்பட்டுள்ளன. ‘பரிசில்’ என்ற தலைப்பில் தொடர்புடைய கொடை, ஈதல், வழங்கல், அளித்தல், தருதல் போன்ற சொற்கள் பயன்படுத்தப்பட்டன. இவை கொடை மனப்பான்மையில் அமைவதால் பரிசில் வழங்குவதில் இணைக்கப்பட்டன.

## சான்றெண் குறிப்புகள்

1. **குறள்**.955.
2. கதிர்முருகு, கு.சுபாஷிணி (உ.ஆர்.), "முன்னுரை", **காரைக்காலம்மையார் படைப்புகள்,** ப.1.
3. கதிர்.மகாதேவன், **பழந்தமிழர் வீரப்பண்பாடு,** ப.64.
4. பொ.வே.சோமசுந்தரனார் (உரை.), **புறப்பொருள் வெண்பாமாலை,** ப.39.
5. கதிர்.மகாதேவன், மு.கு.நூ., ப.68.
6. **புறநானூறு,** 182.
7. மேலது., பா.312.
8. **குறள்**.397.
9. கதிர்.மகாதேவன், மு.கு.நூ., ப.139.
10. மேலது., ப.139.

# இயல் 1

## பரிசில் – வரலாற்றுப் பார்வை

*சமூகம் பல்வேறு பண்பாட்டுக் கூறுகளைக் காலந்தோறும் உருவாக்கிக் கொள்கிறது. காலப்போக்கில் அவற்றுள் சில மாறுவதும் தோன்றுவதுமாக வரலாறு இயங்குகிறது. தமிழ்ச் சமூகத்திற்கும் இந்த இயங்கியல் பொருந்தும். சங்க கால நிலவுடைமைச் சமூகத்தின் வெளிப்பாடாகச் சங்க இலக்கியங்கள் அமைகின்றன. பொருளுடையோர், பொருளற்றோர் எனச் சமூகம் வர்க்க அடிப்படையில் இருந்ததை இவை உணர்த்தும். அரசர்களும், பொருளுடையோரும் வளமான வாழ்க்கையைப் பெற்றிருந்தனர். சங்க இலக்கியப் பொருண்மைகள், அறம், பொருள், இன்பம் என்பன. மக்கள் வாழ்வில் இவை கடைப்பிடிக்கப்பட்டதாக அறியமுடிகிறது. இப்பொருண்மைகள் பொருளுடையார்மாட்டுச் சிறந்து விளங்கின. இப்பொருண்மைகளில் அரசர், அமைச்சர் போன்றோர் இயங்கினாலும் இவர்கள் சமூகத்தில் ஆதிக்கம் செலுத்துவோராய் இருந்தனர். இவர்கள் குறிப்பிட்ட சில சமூக அறங்களைப் பின்பற்றி வந்தனர். சமூகம் முடியாட்சி அரசியலில் உட்பட்டிருந்தது. புலவர்களும் கல்வியாளர்களும் மக்களுள் உயர்வர்க்கத்தினர் பின்பற்ற வேண்டிய ஒழுகலாறுகளையும் அறங்களையும் எடுத்துரைத்தனர். அதற்கேற்ப நீதிகள் இயற்றப்பட்டன. "அறம் பாடிற்றே ஆயிழை கணவ"[1] என அறநூல்கள் பேசப்பட்டன. கல்விக்கு உதவுவதும் கற்றாரை மதித்தலும் 'அறம்' எனப்பட்டன. "உற்றுழி உதவியும் உறுபொருள் கொடுத்தும், பிற்றைநிலை முனியாது கற்றல் நன்றே"[2] எனக் கல்விக்குச் செலவிடலும் கற்றலும் அறம் எனப்பட்டன. ஈண்டுச் செலவிடல் 'பொருள்' என்பதையே குறிக்கிறது. "வறியார்க் கொன்றீதல் ..."[3] என்ற இடத்துப் பொருளெழுதும் பரிமேலழகர், ஈதல் என்பது 'பொருளையே' எனக் குறிக்கிறார்.[4]*

*சங்க காலம் முதல் பிற்காலம் வரை 'ஈதல்' என்பதற்குப் பொருளீதல் என்றே பொருள் எழுதப்பட்டது. அரச நடைமுறைகளில் பொருள் வழங்குதல்*

மிகவும் போற்றப்பட்டதையும் அறியமுடிகிறது. "இல்லவர் ஒழுக்கம் போல் இருங்கழிமலர் கூம்ப"[5] என்று கலித்தொகை கூறுகிறது. பொருளில்லார் நிலையைக் கூறிப் பொருளால் செய்யப்பெறும் நன்மையும் அதன் தேவையும் உணர்த்தப்பட்டன. சமூக அமைப்பில் சாதி அதன் வடிவமாகவும் வர்க்கம் அதன் உள்ளடக்கமாகவும் இருக்கிறதெனப் பிற்காலத் தத்துவவியலார் குறிப்பர்.[6] பொருளில்லார் பாட்டாளி வர்க்கம் சார்ந்தவர்கள்.

பொருளியல் வாழ்க்கையே வாழ்க்கை எனக் கொண்ட காலம் சங்க இலக்கியக் காலம் எனக் கருதப்பட்டது. பொருளே வாழ்க்கை என்றும் பொருளில்லா வாழ்வு வாழ்வில்லை எனவும் வருத்திக் கொண்ட இக்கால கட்டத்தில் பொருளைப் பிறர்க்குக் கொடுத்து உதவுதலே சிறப்புடைத்து எனும் மெய்ப்பொருள் மெய்யியல் வகையில் நம்பப்படுவதாயிற்று. இந்த நிலையில் பொருளறம் செய்தலின் நோக்கம், அதன் சமூக மதிப்புப் போன்றவற்றை விளக்குவதாக இவ்வியல் அமைக்கப்படுகிறது. பரிசில், கொடை என்பன 'பொருள் வழிச் செய்யும் அறம்' எனச் சான்றோர் கருதுவதால் இவ்வியல் இச்சொற்களின் பொருண்மையை விளக்கித் தொடங்குவதாகவும் அமைக்கப்பட்டுள்ளது.

இயலின் உள்ளடக்கத்தின் அடிப்படையில் பின்வரும் உட்கூறுகளாக இவ்வியல் பிரிக்கப்படுகின்றது.

1.1. பரிசில் / கொடை - சொற்பொருள் விளக்கம்

1.2. பிறசொற்களும் பிறமொழிச் சொற்களும்

1.3. பரிசில் / கொடை – சங்க இலக்கியச் சொற்பதிவுகள்

1.4. அறநூல்களில் பரிசில்

1.5. பக்தி இலக்கியங்களில் பரிசில்

1.6. காப்பியங்களில் பரிசில்

1.7. சிற்றிலக்கியங்களில் பரிசில்

1.8. நவீன இலக்கியங்களில் பரிசில்

மேற்குறித்த பதிவுகள் வரிசையாக ஆராயப்படுகின்றன.

### 1.1. பரிசில் / கொடை - சொற்பொருள் விளக்கம்

*பரிசு என்னும் சொல் 'இல்' விகுதி பெற்றுப் பரிசில் என வழங்கப்படுகிறது. ஒருவரின் சிறப்புக்களைப் பாராட்டி அதற்காக வழங்கப்படும் பொருள்களைப் பரிசு அல்லது பரிசில் என வழங்கினர். "பரிசில்" என்பது பரிசு எனவும் வழங்கப்பட்டது.*[7] *"பரிசில்" தொழிற்பெயராகவே கொள்ளப்படுகிறது.*

*"கொடை" மிகப் பழமையான சொல். சங்க இலக்கியப் பயிற்சியுடையது.*[8] *இது கொடு என்னும் அடிச்சொல்லையும் 'ஐ' என்னும் விகுதியையும் கொண்ட தொழிற்பெயர். 'ஐ' தொழிற்பெயர் விகுதிகளுள் ஒன்று. தமிழ் இலக்கணத்தில் 'ஐ' விகுதி தொழிற்பெயரை உணர்த்துவதற்கு எடை, தொழுகை, உடுக்கை போன்ற சொற்களைக் காட்டுகின்றனர்.*[9] *ஐ விகுதி செயப்படு பொருளாகவும், புடைபெயர்ச்சியாகிய தொழில் பெயராகவும் வருவதாக இலக்கண உரை கூறுகின்றது.*

> உடுக்கை என்பது, உடுக்கப்படும் பொருளை உணர்த்துவதால் ஐகார விகுதித்து என்றும், உடுத்தல் எனப் புடைபெயர்ச்சியை உணர்த்துவதால் கைவிகுதித்து என்றும் தெரிந்துணர்ந்து கொள்க[10]

*என்கிறார் சங்கரநமச்சிவாயர். "கொடை" என்பது பெருமிதம் என்னும் மெய்ப்பாடு என்கிறது தொல்காப்பியம்.*[11] *நா.கதிரைவேற்பிள்ளையின் தமிழகராதி கொடை என்னும் சொல்லிற்குக் "கொடை-ஈகை, அஃது புண்ணியத் தோற்றம் நான்கினுமொன்று"*[12] *என்கிறது.*

*புலவர் முதலானோர் பழங்காலத்தில் அரசர்களிடம் பொருள் பெற்று வாழ்ந்தனர். பரிசில் வழங்குதல் ஒரு சாரார்க்கும், பெறுதல் மற்றொரு சாரார்க்கும் அமைந்த வாழ்க்கை முறையைச் சங்க இலக்கியத்தில் காணமுடிகிறது. பரிசில் என்ற சொல் பற்றி ஆராயும் அ.தட்சிணாமூர்த்தி பின்வருமாறு எழுதுகிறார்.*

> புலவரையும் கலைஞரையும் பரிசர் என்று சுட்டாது பரிசிலர் என்றே சுட்டியுள்ளமையான், பரிசில் என்பதையே அடிச்சொல்லாகக் கொள்ள வேண்டும். பரிசம் என்னும் சொல் செல்வம் என்னும் பொருளில்

> வழங்கப்பட்டது (343:5). இதற்கும் பரிசில் என்பதற்கும் உறவிருப்பதாகத் தோன்றுகின்றது[13]

என்பது அவர் கூற்று. இதன்வழிப் "பரிசம்" என இக்காலத்து வழங்கும் சொற்கும் பழந்தமிழ்ச் சொல்லாட்சிக்கும் உள்ள உறவையும் பழமையையும் அறியமுடிகிறது. மேற்குறித்த பொருண்மைகளில் பரிசில் வழங்கல், அதனைப் பெறுதல் ஆகியவற்றின் சொற்பொருண்மைகள், வளர்ச்சிநிலை ஆகியன இவ்வியலில் விளக்கப்படுகின்றன.

## 1.2. பிறசொற்களும் பிறமொழிச் சொற்களும்

கொடை, பரிசில் என்னும் இருசொற்களும் தமிழ்ச் சொற்கள். மேலும் ஈகை, வழங்கல், வரிசை போன்ற சொற்களும் தமிழில் காணப்படுகின்றன. ஈ, தா, கொடு என்ற மூன்றும் "கொடுத்தல்" என்னும் செய்கையின் அடையாளமாகக் காணப்படுகின்றன. பொதுவாக இவ்விரு சொற்களுக்கும் (கொடை, பரிசில்) இணையான வழக்குச் சொற்களாக நன்கொடை, தானம், ஈகை, வெகுமதி, சன்மானம், இனாம், இலவசம், மொய், மெய்ப்பணம், சுருள், சுருள் பணம், கைச்சுருள், அழைப்புச் சுருள், பணமுடி, பணமுடிப்பு ஆகியவற்றைத் தற்காலத் தமிழ்க் களஞ்சியம் கூறுகிறது.[14] இவற்றுள் தமிழ், வடமொழிச் சொற்கள் கலந்துள்ளன. தானம் என்பதை விளக்கும் பரிமேலழகர்,

> தானமாவது அறநெறியான் வந்த பொருள்களைத்
> தக்கார்க்கு உவகையோடும் கொடுத்தல்[15]

எனக் குறிப்பிடுகிறார்.

ஈண்டு அவர் பயன்படுத்தியிருக்கும் "கொடுத்தல்" என்பது தானம், கொடை என்ற இரண்டையும் குறிக்கும். ஆங்கில மொழியில் கொடை என்னும் சொல்லிற்கு வின்சுலோ அகராதி, கொடை - Giving or a gift, Present, donation, 2. Liberal giving[16] என்று பொருள் கூறுகிறது. தமிழ் லெக்சிகன், Donation, gift என்ற இரு ஆங்கிலச் சொற்களைப் பொருளாகக் கூறுகிறது.[17] கிரியாவின் தற்காலத் தமிழ் அகராதி contribution, gift[18] என்ற சொற்களைக் கூறுகிறது.

பொதுவாக, பொது வழக்கிற்குப் பயன்படும் அகராதிகளும், இச்சொல்லை விவரித்து எழுதுகின்றன. இலக்கியத்திலும் பழங்காலத்திலேயே பரிசில், கொடை என்ற சொற்கள் இடம்பெற்றுள்ளன. பரிசில் என்பதை gift, donation என வின்சுலோ அகராதியும்,[19] Gift, Donation, Present எனத் தமிழ் லெக்சிகன் அகராதியும்[20] ஆங்கிலத்தில் பொருளுரைக்கின்றன. கிரியாவின் தற்காலத் தமிழகராதி பரிசிலுக்கு Gift என்பதைக் காட்டுகிறது.[21]

### 1.3. பரிசில் / கொடை – சங்க இலக்கியச் சொற்பதிவுகள்

பரிசில்/கொடை, பரிசு போன்ற சொற்கள் மிகுந்த இலக்கியப் பயிற்சி உடையவை. பழந்தமிழ் இலக்கியங்களில் இவை பரவலாக இடம்பெற்றுள்ளன. சங்க இலக்கியங்களுள் நற்றிணை, குறுந்தொகை, புறநானூறு, பரிபாடல், பதிற்றுப்பத்து, சிறுபாணாற்றுப்படை, திருமுருகாற்றுப்படை, பெரும்பாணாற்றுப்படை, மலைபடுகடாம் ஆகிய இலக்கியங்களில் “பரிசில்” என்ற சொல் காணப்படுகிறது.[22] “பரிசு” என்ற சொல் கலித்தொகையில் இடம்பெற்றுள்ளது.[23]

கொடை என்ற சொல்லும் இதனைச் சார்ந்த பிற சொற்களும் அகநானூறு, ஐங்குறுநூறு, கலித்தொகை, நற்றிணை, பதிற்றுப்பத்து, புறநானூறு, பெரும்பாணாற்றுப்படை, மலைபடுகடாம் ஆகிய இலக்கியங்களில் காணப்படுகின்றன.[24] கொடைக்கடன், கொடைமடம், கொடையர், கொடையோடு போன்றவை இணைந்த சொற்களாகக் காணப்படுகின்றன.[25] கொடை, பரிசில் என்னும் சொற்களுடன் இணைந்து வரும் ‘அளி’ என்பது பற்றியும் இங்குக் குறிப்பிட வேண்டியுள்ளது.

“அளி” என்ற சொல்லும் கொடுத்தல் என்னும் பொருளில் சங்க இலக்கியத்தில் இடம்பெற்றுள்ளது. இவ்வடிச்சொல்லுடன் விகுதிகள் இணைந்து வரும் பிறசொற்களும் உள்ளன. அதாவது, ‘அளி’ என்ற சொல்லுடன் இணைந்த அளித்தல் முதலான முப்பதுக்கும் மேற்பட்ட சொற்கள் சங்க இலக்கியத்தில் காணப்படுகின்றன.[26]

## 1.4. அறநூல்களில் பரிசில் (பதினெண் கீழ்க்கணக்கு)

இலக்கிய ஆய்விற்கு இலக்கிய வகைமைகள், மிகுந்த பயன்பாடு உடையன. சங்க இலக்கியம், பக்தி இலக்கியம், அற இலக்கியம் என வகைமை செய்திருப்பது இதனை உணர்த்தும். மனமுவந்து ஒன்றை வழங்கும் கொடைப்பண்பு, ஈகைப்பண்பு போன்றவை அறமாகக் கருதப்பட்டு அறநூல்களில் பேசப்படுகின்றன. அறநூல்கள் எனப்படும் நீதிநூல்களில் (பதினெண்கீழ்க்கணக்கு) இப்பொருண்மை குறித்த சொற்பதிவுகள் இங்கு விளக்கப்படுகின்றன.

ஈகை, ஈதல் ஆகிய சொற்களும் (கொடை) இப்பொருளைச் சுட்டுவன. அறத்தைப் பாகுபடுத்திக் கூறும் தலையாய நூலாகிய திருக்குறளில் ''ஈகை'' எனும் அதிகாரம் இடம்பெற்றுள்ளது.[27] ஈகை என்பது தொழிற்பெயர். இதனுடைய வினையடி ''ஈ'' என்பதாம். தொல்காப்பியர் ''ஈ'' என்னும் சொல் முன்னிலை ஒருமையில் வருவதையும், இதனுடன் வேறு சில சொற்கள் வருவதையும் குறிப்பிடுகின்றார்.

ஆய்விற்குட்பட்ட அறநூல்களில் ஈகை என்ற தனிச்சொல் வருமிடங்களாவன:

| சொற்கள் | நூல் | பாடல் எண் |
|---|---|---|
| ஈகை | திருக்குறள் | 221, 382, 953 |
| | பழமொழி நானூறு | 384 |
| | முதுமொழிக் காஞ்சி | |
| | - அறிவுப்பத்து, | 2, 4, 5 |
| | துவ்வாப்பத்து, | |
| | எளியபத்து | |

மேற்குறித்தவற்றில் ஏழு இடங்களில் ''ஈகை'' இடம்பெற்றுள்ளது. மற்றவை 'ஈகை' என்ற வினையடியைக் கொண்டு ஒன்றைப் பிறர்க்கு அளித்தல் (வழங்குதல்) என்ற பொருளிலேயே ஆளப்பட்டுள்ளன.

| சொற்கள் | நூல் | பாடல் எண் |
|---|---|---|
| ஈக | திணைமாலை நூற்றைம்பது | 12 |
| | திரிகடுகம் | 7 |
| ஈத்ததை | பழமொழி நானூறு | 227 |
| ஈத்தவன் | பழமொழி நானூறு | 346 |
| ஈத்துண்பான் | ஏலாதி | 32, 46, 47 |
| ஈத்தும் | திருக்குறள் | 800 |
| ஈத்துவக்கும் | திருக்குறள் | 228 |
| ஈதல் | நாலடியார் | 146 |
| | இனியவை நாற்பது | 16, 19, 23 |
| ஈதல் | கார்நாற்பது | 7 |
| | திருக்குறள் | 230, 231, 1006 |
| ஈதலே | திருக்குறள் | 222, 1054 |
| ஈந்த | திரிகடுகம் | 41 |
| | சிறுபஞ்சமூலம் | 73 |
| ஈந்தார் | சிறுபஞ்சமூலம் | 78 |
| | ஏலாதி | 9 |
| ஈந்தாரை | பழமொழி நானூறு | 378 |
| ஈந்தான் | ஏலாதி | 42, 43, 49, 70 |
| ஈந்து | ஏலாதி | 44 |
| ஈய்த்து | ஏலாதி | 55 |
| ஈய்ந்தார் | ஏலாதி | 56, 63, 78 |
| ஈய | பழமொழி நானூறு | 379 |
| ஈயாய் | திணைமொழி ஐம்பது | 42 |
| ஈயும் | நான்மணிக்கடிகை | 37 |
| | திரிகடுகம் | 68 |
| | திருக்குறள் | 1061 |
| ஈவது | சிறுபஞ்சமூலம் | 94 |
| ஈவர் | திருக்குறள் | 1035 |
| ஈவார் | பழமொழி நானூறு | 376 |
| | திருக்குறள் | 232, 1057 |
| ஈவாரை | திருக்குறள் | 79 |
| ஈவான் | சிறுபஞ்சமூலம் | 79 |
| | ஏலாதி | 45 |
| ஈவானாயின் | ஏலாதி | 41 |

இவ்வட்டவணை ஈகை என்னும் பொருள் குறித்து நீதிநூல்களில் பயின்ற சொற்களைக் குறிக்கின்றது.

நீதி நூல்களின் நோக்கம், ஈகை போன்ற அறங்கள் பலவற்றை எடுத்துக் கூறுதலாகும். இவற்றுள்ளும் தொடக்கக்கால நூல்களில் "ஈகை" பதிவுகள் குறைவாகவும் மற்ற நூல்களில் மிகுதியாகவும் காணப்படுகின்றன. ஈகை அறம் பிற அறங்களினும் சிறந்ததெனச் சொற்களின் அடைமொழிகளால் தெரிகின்றது.

"கொடை" என்ற சொல் பழந்தமிழ் இலக்கியப் பதிவுகளை மிகுதியாகக் கொண்டது. "கொடை" என்பதை அறநூல்கள் அறமாகக் கருதுவதால் அவை இதனை மிகுதியும் பயன்படுத்தியுள்ளன. நீதிநூல்கள் முடியாட்சிக் காலத்தவை. கொடை மன்னர்கள் செய்யக் கூடிய அறமாகக் கருதப்பட்டது. "கொடை" அரசனுக்குப் பெரும்புகழைத் தருவது.

**"கொடை" சொல் வெளிப்படையாக வந்த இலக்கியப் பதிவுகள்**

| சொற்கள் | நூல் | பாடல் எண் |
|---|---|---|
| கொடை | முதுமொழிக் காஞ்சி - பழியாப்பத்து | 8 |
| கொடைக்கடன் | நாலடியார் | 184 |
| கொடைப்பயன் | நாலடியார் | 65 |
| கொடையளிக்க | ஆசாரக்கோவை | 66 |
| கொடையினால் | ஏலாதி | 76 |
| கொடையும் | பழமொழி நானூறு | 326 |
| கொடையுவப்பின் | ஏலாதி | 20 |
| கொடையே | ஏலாதி | 6 |
| கொடையோர் | நாலடியார் | 65 |
| கொடைவேந்தன் | பழமொழி நானூறு | 247 |

மேற்குறித்தவற்றுள் தனிச்சொல்லும் இருசொல் சேர்ந்த தொடர்களும் இடம்பெற்றுள்ளன.

கொடுத்தல் முதலான பல சொற்கள் கொடைப் பொருளில் வருவதை நீதிநூல்களில் காணலாம். அவற்றின் பதிவு விவரங்கள் பின்வரும் அட்டவணையில் தரப்பெறுகின்றன.

| சொற்கள் | நூல் | பாடல் எண் |
|---|---|---|
| கொடுக்க | திணைமொழி ஐம்பது | 1 |
| | பழமொழி நானூறு | 341 |
| கொடுத்தல் | ஏலாதி | 68 |
| கொடுத்தலும் | திருக்குறள் | 525 |
| கொடுத்தளிக்கும் | திரிகடுகம் | 71 |
| | ஐந்திணை எழுபது | 11 |
| கொடுத்தார் | நாலடியார் | 5 |
| கொடுத்திருப்ப | பழமொழி நானூறு | 383 |
| கொடுத்து | நாலடியார் | 93, 94, 95, 96, 100 |
| | பழமொழி நானூறு | 256, 239, 375 |
| | ஆசாரக்கோவை | 30 |
| | ஏலாதி | 80 |
| கொடுத்தும் | திருக்குறள் | 794, 867, 925 |
| | இனியவை நாற்பது | 40 |

இவை கொடை கொடுப்போரையும், கொடையையும் சுட்டுவனவாக அமைகின்றன.

“வழங்கல்” என்ற சொல்லும் பரிசு, ஈகை என்ற சொல்லுக்கு நெருக்கமானதாகக் காணப்படுகிறது. பரிசு என்ற பெயருடன் மிகுதியும் வழங்கல் என்பது பயின்று வருகிறது.

**வழங்கல் என்ற சொற்பகுதி**

| சொற்கள் | நூல் | பாடல் எண் |
|---|---|---|
| வழங்கலினிதே | இனியவை நாற்பது | 22 |
| வழங்கலும் | பழமொழி நானூறு | 217 |
| வழங்கி | கைந்நிலை | 13 |
| | பழமொழி நானூறு | 359 |
| | ஏலாதி | 1 |
| வழங்கிய | ஐந்திணை எழுபது | 22 |
| வழங்குங்கால் | பழமொழி நானூறு | 375 |
| வழங்கும் | ஐந்திணை எழுபது | 30 |
| வழங்குமின் | நாலடியார் | 6 |

இவை பொருள், கருணை, அன்பு போன்றவற்றைப் பயன்படுத்தும் பொருளில் வந்துள்ளன. இச்சொற்கள் முன்னிலைச் சொற்களாகவும், முன்னிலைப் படர்க்கைச் சொற்களாகவும், பெயர், பெயரெச்சங்களாகவும் வந்துள்ளன.

*கீழே காணப்பெறும் அட்டவணையில் தனித்தனியாக வரும் சொற்கள் (கொடைப் பொருளில் வரும்) வரிசைப்படுத்தப் பட்டுள்ளன.*

| சொற்கள் | நூல் | பாடல் எண் |
|---|---|---|
| அருளாவென | ஐந்திணை எழுபது | 60 |
| அளித்தாரை | பழமொழி நானூறு | 75 |
| அறம் புரிந்தல்லவை | இனியவை நாற்பது | 21 |
| இரத்தக்கார் | திருக்குறள் | 1051 |
| உதவி | திருக்குறள் | 70, 103, 105 |
| உதவியினறிப | முதுமொழிக்காஞ்சி - அறிவுப்பத்து | 3 |
| எஞ்சாமை | நான்மணிக்கடிகை | 27 |
| ஓம்பப்படும் | திருக்குறள் | 131 |
| கைவிடுக்க | பழமொழி நானூறு | 173 |
| செய்குறி | கார்நாற்பது | 31 |
| செய்த நன்றி | திருக்குறள் | 102 |
| செய்தொழுகு | இனியவை நாற்பது | 33 |
| தருக | நான்மணிக்கடிகை | 77 |
| தரும் | ஏலாதி | 62 |
| தருமே | பழமொழி நானூறு | 400 |
| தானத்தால் | சிறுபஞ்சமூலம் | 36 |
| தானம் | ஏலாதி | 3 |
| | திரிகடுகம் | 23 |
| நல்கி | திணைமாலை நூற்றைம்பது | 16 |
| நல்கினாள் | பழமொழி நானூறு | 382 |
| நல்கினும் | பழமொழி நானூறு | 97 |
| நல்கு | ஐந்திணை எழுபது | கடவுள் வாழ்த்து |
| நல்குதனன்று | திணைமாலை நூற்றைம்பது | 54 |
| நல்கும் | திணைமாலை நூற்றைம்பது | 17 |
| நல்குமே | ஐந்திணை ஐம்பது | 43 |
| நேர்வது | திருக்குறள் | 733 |

| சொற்கள் | நூல் | பாடல் எண் |
|---|---|---|
| பயக்கு | ஐந்திணை எழுபது | 5 |
| பாத்துண்ணும் | திரிகடுகம் | 10, 40, 31 |
| பாத்தூணௌிது | முதுமொழிக்காஞ்சி - எளிய பத்து | 9 |
| மெய்யாவளிக்கும் | இன்னிலை | 14 |
| வண்மை | நான்மணிக்கடிகை | 16 |
| வள்ளண்மை | இன்னா நாற்பது, பழமொழி நானூறு, ஏலாதி | 39, 382 |
| வள்ளியன் | முதுமொழிக்காஞ்சி - பழியாப்பத்து | 9 |
| வேளாண்மை | முதுமொழிக்காஞ்சி - துவ்வாப்பத்து | 6 |

## 1.5. பக்தி இலக்கியங்களில் பரிசில்

### 1.5.1. பன்னிரு திருமுறைகள்

'பன்னிரு திருமுறைகள்' சைவ சமய எழுச்சியின் உயர்நிலையில் எழுந்தவை. பக்தி இயக்கத்தின் வளர்ச்சியால் சைவக் கொள்கைகள் தமிழரிடம் வற்புறுத்தப்பட்டன. சமணம் அல்லாப் பிற சமயங்கள் தமிழகத்தே காலூன்றிய காலகட்டத்தில் அவற்றிற்கு எதிராகச் சைவ சமயக் கொள்கைகள் பரப்பப்பட்டன. இக்கொள்கைகள் பரவுவதற்குச் சமயம் சார்ந்த மனிதநேயம் மிகுந்த சொற்கள் தேவைப்படவே அவற்றைச் சமயக் குரவர்கள் தம் பாடல்களில் பதிவு செய்தனர். இதுவும் சமய வளர்ச்சிக்கு உதவியது. சமயக் குரவர்களின் சொன்னடை, மிகுந்த ஆய்வுப் பரப்பிற்குரியதாகக் காணப்படுகிறது. இசை, சந்தம் போன்றவையும் கலந்து பாடல்கள் பாடப்பெற்றன. "நாளும் இன்னிசையால் தமிழ் பரப்பும் ஞானசம்பந்தன்"[28] என்பது இவ்விடத்து எண்ணத்தக்கது. "பன்னிரு திருமுறைகள்" என்பதிலுள்ள பன்னிரு நூல்களும் ஓர் அட்டவணையில் விவரிக்கப்பட்டுள்ளன.

அக்காலத்தில் வழக்கில் இருந்த சொற்களும், கற்றறிந்தார் போற்றும் சொற்களும் சமயக்குரவர்களால் பதிவு செய்யப்பெற்றன. சமயக்குரவர்களின் சொல்லாட்சி பற்றி, க.வெள்ளைவாரணன் விவரித்துக் கூறியுள்ளார். அவர்களைப் புலமையாளர்களாகவும் அவர் விவரிக்கிறார்.[29] இவர்களின் சொல்லாட்சியைப் புகழ்கிறார்.

> மக்கள் அறியவேண்டிய பொருள்களை அறிவுறுத்தி மனக்கோணலைத் தீர்த்துத் தீமையினை விலக்கி நன்றின்பாற் செலுத்தும் மாண்புடைய சொற்களால் முறைப்பட இயற்றப் பெற்றனவே நூலாகச் சிறப்பித்துப் போற்றப்படுவன[30]

என்று தேவாரப் பாக்களின் சொற்சுவையையும் பொருட்சுவையையும் அவர் விளக்கியுள்ளார்.

> பக்தி இலக்கியம் உருப்பெறுதற்கு அடிப்படையாக அமைந்த சமய வரலாற்றினை ஆராய்ந்தோம் ... பக்தி இலக்கியம் பிற இலக்கியங்களிலிருந்து சிறிது வேறுபட்ட அடிப்படையினை உடையது ... ஒவ்வொன்றிற்கும் சில தனித்தன்மைகள் உண்டு[31]

என்கிறார் ப.அருணாசலம். பக்தி இலக்கியங்கள் சமய ஒழுங்கையும் சமயக் கொள்கைகளையும் இறைச்சிறப்பையும் வெளிப்படுத்தும் நோக்கம் கொண்டவை. சங்க காலத்தை அடுத்துப் பக்தி இலக்கியங்கள் தமிழ் வளர்ச்சிக்குப் பெரிதும் உதவின எனலாம்.

கொடைப் பொருளை உணர்த்தும் சொற்கள் பன்னிரு திருமுறைகளில் பரவலாகக் காணப்படுகின்றன. குறிப்பாகக் கொடை, பரிசில், தருதல், ஈதல், அளித்தல் ஆகிய சொற்கள் இதில் அடங்குவன.

**பரிசிற் பொருளை நேரடியாகச் சுட்டும் சொற்கள்**

| சொற்கள் | நூல் | பாடல் எண் |
|---|---|---|
| அளித்தவனும் | தேவாரம்-திருப்பிரமபுரம்-பஞ்சமம் | 3:14:7 |
| ஈந்தானும் | தேவாரம்-திருவெண்காடு-சீகாமரம் | 2:11:7 |
| ஈந்தும் | திருவாரூர் மும்மணிக்கோவை | 11:7:281 |
| கொடைக்கு | தேவாரம்-திருவேணுபுரம்-இந்தளம் | 2:14:2 |
| கொடைத்தொழில் | திருமந்திரம்-இரண்டாம் தந்திரம்-கர்ப்பகிரியை | 10:14:465 |
| கொடைநிலை | பெரியபுராணம்-ஏனாதிநாத நாயனார் புராணம் | 12:9:22 |
| தரும் பரிசால் | பெரியபுராணம்-மானக்கஞ்சாற நாயனார் புராணம் | 12:12:17 |
| தருவானை | தேவாரம்-கோயில்-குறிஞ்சி | 7:1:4 |

| சொற்கள் | நூல் | பாடல் எண் |
|---|---|---|
| பரிசமைத்தாள் | திருக்கயிலாய ஞானஉலா | *11:8:135* |
| பரிசறியாள் | கயிலைபாதி காளத்திபாதி அந்தாதி | *11:9:327* |
| பரிசறியேன் | கயிலைபாதி காளத்திபாதி அந்தாதி | *11:9:348* |
| பரிசறிவானே | திருமந்திரம்-இரண்டாம் தந்திரம்-இலிங்கபுராணம் | *10:3:348* |
| பரிசானாள் | கயிலைபாதி காளத்தி பாதி அந்தாதி | *11:9:327* |
| பரிசில் | தேவாரம்-பூம்புகலி-காந்தரம் | *2:14:11* |
| | திருமுருகாற்றுப்படை | *11:17:300* |
| | திருக்கண்ணப்பதேவர் திருமறம் | *11:18:50* |
| பரிசிவர்க்கு | பெரியபுராணம்-இளையான்குடி மாற நாயனார் புராணம் | *12:4:27* |
| பரிசினின் | திருகோவையார்-வரைபொருட் பிரிதல் | *8:18:286* |
| பரிசு | தேவாரம்-திருத்தோணிபுரம்-பழந்தக்கராகம் | *1:14:3* |
| | திருவாசகம்-கீர்த்தித் திரு அகவல் | *8:2:100* |
| | திருவாசகம்-திருச்சதகம் | *8:5:9* |
| | திருவாசகம்-திருச்சதகம் | *8:5:91* |
| | திருவாசகம்-திருவெம்பாவை | *8:7:1,7* |
| | திருவாசகம்-திருஅம்மானை | *8:8:8* |
| | திருவாசகம்-குலாப்பத்து | *8:40:5* |
| | திருவாசகம்-அச்சோப்பத்து | *8:51:6* |
| | திருக்கோவையார்-ஒருவழித்தணத்தல் | *8:15:182* |
| | திருப்பல்லாண்டு-கோயில் | *9:1:7* |
| | பெரியபுராணம்-திருக்குறிப்புத் தொண்ட நாயனார் புராணம் | *12:19:101* |
| | பெரியபுராணம்-சண்டேசுர நாயனார் புராணம் | *12:20:41* |
| | பெரியபுராணம்-திருஞானசம்பந்த சுவாமிகள் புராணம் | *12:28:213* |
| பரிசுகள் | தேவாரம்-திருவெங்குருகு-குறிஞ்சி | *1:14:2* |
| பரிசும் | திருவாசகம்-கீர்த்தித் திரு அகவல் | *8:2:55, 65, 75, 80* |
| | திருவாசகம்-கண்டபத்து | *8:31:7* |

| சொற்கள் | நூல் | பாடல் எண் |
|---|---|---|
| பரிசுரைத்தால் | திருக்கோவையார்-பாங்கற்கூட்டம் | 8:2:19 |
| பரிசே | திருவாசகம்-திருச்சதகம் | 8:5:9 |
| | திருவாசகம்-திருஅம்மானை | 8:8:9 |
| | திருமந்திரம்-திருமந்திர தொகை சிறப்பு | 10:7:100 |
| | திருமந்திரம்-இரண்டாம் தந்திரம்-தக்கன் வேள்வி | 10:4:355 |
| | பெரியபுராணம்-மெய்ப்பொருள் நாயனார் புராணம் | 12:5:15 |

அட்டவணையில் "கொடை" சொல் தனியாகவும், சில விகுதிகள் சேர்ந்தும் பயின்று வருகிறது. 'பரிசில்' முழுச்சொல்லாகவும் ஈறு திரிந்தும் வந்துள்ளது. மேலும் இலக்கண அமைப்பில் நோக்கிப் பொருள்கூறும் வாய்ப்பும் இச்சொற்களுக்கு உள்ளது.

இறைவனைச் சுட்டும்போது சில சொற்கள் வினையாலணையும் பெயராகவும் (அளித்தவனும்), எதிர்மறை உம்மையாகவும் (ஈந்தும்), நான்காம் வேற்றுமையுருபுடனும், இருபெயர் இணைந்தும் வருவதைக் காணமுடிகிறது. வினைத்தொகை வினைமுற்று, 'என்' விகுதி பெற்றது, 'என' வென் எச்சம் ஆகியவையும் இடம்பெற்றுள்ளன.

பக்தி இலக்கியம் இறைவனோடு சார்ந்து இருப்பதால் இச்சொற் கட்டமைப்புகள் இறைவனைச் சுற்றியே அமைந்துள்ளன. அவ்வாறு இருப்பினும் மொழியுடன் இச்சொற்களுக்கு உள்ள உறவு இவ்விலக்கண அமைப்பை விளக்குகின்றது.

இறைவனிடம் வேண்டிப் பெறும் பொருளில் சில சொற்கள் அமைந்துள்ளன. இவை தனிச்சொல்லாகவும், பிற சொல்லுருபுகளுடன் இணைந்தும் வருகின்றன. இச்சொற்களுள் சில கொடைப் பொருளைக் குறிப்பில் உணர்த்துகின்றன.

**வேண்டுகோள் பொருளில் வரும் பரிசில் உணர்த்தும் சொற்கள்**

| சொற்கள் | நூல் | பாடல் எண் |
|---|---|---|
| அருள் | கோயில் நான்மணிமாலை | 11:26:837 |
| அருளாய் | கருவூர்த்தேவர் அருளிய திருவிசைப்பா-திருச்சாட்டியக்குடி | 9:8:9 |
| அருளி | சிவபெருமான் திருவந்தாதி | 11:23:724 |
| அருள்புரி | திருமாளிகைத்தேவர் அருளிய திருவிசைப்பா-கோயில் | 9:1:10 |
| ஈ | சிவபெருமான் திருவந்தாதி | 11:23:732 |
| ஈதல் | பெரியபுராணம்-அமர்நீதி நாயனார் புராணம் | 12:7:11 |
| ஈதலால் | பெரியபுராணம்-நமிநந்தியடிகள் நாயனார் புராணம் | 12:27:829 |
| ஈந்து | புருடோத்தம நம்பி அருளிய திருவிசைப்பா-கோயில் | 8:2:10 |
| ஈயினும் | திருமந்திரம்-இரண்டாம் தந்திரம்-அபாத்திரம் | 10:17:508 |
| உதவி | திருமுகப்பாசுரம் | 11:1:1 |
| நல்காயே | தேவாரம்-சீர்காழி-சீகாமரம் | 2:14:8 |
| நீடருள் | பெரியபுராணம்-அமர்நீதி நாயனார் புராணம் | 12:7:6 |
| பாலிக்குமோ | தேவாரம்-கோயில்-திருக்குறுந்தொகை | 5:1:1 |
| வரம் கொடுப்பார் | தேவாரம்-திருவெண்காடு-திருத்தாண்டகம் | 6:11:9 |
| வாரிக் கொடு வந்தால் | பெரியபுராணம் - இளையான்குடி மாறநாயனார் புராணம் | 12:4:13 |
| வழங்கும் | மூத்தப்பிள்ளையார் திருமும்மணிக்கோவை | 11:25:802 |
| வழங்கென்று | திருக்கோவையார்-இரவுக்குறி | 8:14:157 |

இவற்றுள் அருள், ஈ என்ற இரண்டும் தனிச்சொற்களாகவும் பின்னொட்டுக்கள் இணைந்தும் வருகின்றன. மேலும் வினையெச்சத்தில் முடியும் சொற்களும், முன்னிலை ஏவலில் முடியும் சொற்களும் காணப்படுகின்றன. அனைத்துச் சொற்களும் ஏவலாய் அமைந்து வேண்டுகோள் பொருளில் நிற்கின்றன.

இறைவனின் பெருமையை வெளிப்படுத்தும் சொற்களாகப் பல காணப்படுகின்றன. பின்வரும் அட்டவணை இதனை உறுதிசெய்யும். இதில் குறிக்கப்பட்டுள்ள தனிச் சொற்களைத் தொடருடன் இணைத்துக் காணும் பொழுது இறைவனின் பெருமைகள் வெளிப்படுகின்றன.

**இறைவன் பெருமை கூறும் கொடைப்பொருள் சொற்கள்**

| சொற்கள் | நூல் | பாடல் எண் |
|---|---|---|
| அருள் செய்த | தேவாரம்-கோயில்-திருக்குறுந்தொகை | *5:1:2* |
| | திருவாலியமுதனார் அருளிய திருவிசைப்பா-கோயில் | *9:2:3* |
| அருளும் | தேவாரம்-திருக்கழிப்பாலை-திருநேரிசை | *4:4:2* |
| அளித்தான் | தேவாரம்-சீர்காழி-குறிஞ்சி | *1:14:3-7* |
| அளிப்போன் | திருவாசகம்-திருஅண்டப்பகுதி | *8:3:100* |
| ஈ | திருவாசகம்-காருணியத்து இரங்கல் | *8:4:69* |
| ஈகை | பெரியபுராணம்-சண்டேசுர நாயனார் புராணம் | *12:20:36* |
| ஈகையால் | பெரியபுராணம்-திருநாட்டுச் சிறப்பு | *12:2:6* |
| ஈந்த | போற்றித் திருக்கலிவெண்பா | *11:16:42* |
| ஈந்தபிரான் | திருப்பல்லாண்டு-கோயில் | *9:1:9* |
| ஈந்தளியான் | அற்புதத் திருவந்தாதி | *11:5:121* |
| ஈந்தான் | அற்புதத் திருவந்தாதி | *11:5:90* |
| ஈயும் | பெரியபுராணம்-சிறப்புலி நாயனார் புராணம் | *12:35:1* |
| ஈவது | திருமந்திரம்-இரண்டாவது தந்திரம்-அபாத்திரம் | *10:17:506* |
| உதவி | பெரியபுராணம்-எறிபத்த நாயனார் புராணம் | *12:8:55* |
| உதவும் | பெரியபுராணம்-சண்டேசுர நாயனார் புராணம் | *12:20:3* |
| நல்கிய | திருத்தொண்டர் திருவந்தாதி | *11:3:1146* |
| மகட்கொடை | பெரியபுராணம்-காரைக்காலம்மையார் புராணம் | *12:24:13* |
| வழங்குகின்றாய்க்கு | திருவாசகம்-அடைக்கலப்பத்து | *8:24:10* |

பக்தி இலக்கியங்களில் இறைச்செயல்களையும், இறைப்பெயர்களையும் சுட்டுதற்குக் குறிப்பிட்ட இலக்கியச் சொற்கள் பயன்படுத்தப் பட்டுள்ளன. ஆய்வுப்பதிவிற்கு எடுத்துக் கொள்ளப்பட்ட பக்தி இலக்கியங்களில் கொடைப் பொருளில் வரும் சொற்கள் அவ்விலக்கியங்களில் பரவலாகக் காணப்படுகின்றன. அவ்வாறு பயின்று வரும் சொற்களே இறைவனுக்கும் பயன்படுத்தப்பட்டுள்ளன. குறிப்பாக அருள், ஈகை போன்றவற்றின் பயன்பாடு மிகுதியாகக் காணப்படுகின்றது. அவை தூய தமிழ்ச் சொற்களாகவும் இருக்கின்றன.

“எல்லா உயிர்க்கும் ஏமமாகிய ... தாழ்சடைப் பொலிந்த அருந்தவத்தோன்” எனப் புறநானூறு கடவுள் வாழ்த்துக் குறிப்பிடுகிறது. ‘எல்லா உயிர்க்கும் ஏமம்’ என்பது இறைவனின் அருட்செயலாகும்.[32] பின்வரும் அட்டவணையில் சில திருமுறைச் சொற்கள் பட்டியலிடப் பட்டுள்ளன.

**இறைவன் செயல்கள் குறித்த கொடைப் பொருளில் வருவன**

| சொற்கள் | நூல் | பாடல் எண் |
|---|---|---|
| அருளும் | தேவாரம்-திருக்கழிப்பாலை-திருநேரிசை | 4:4:4 |
| அருளினின் | திருமந்திரம்-முதல்தந்திரம்-கள்ளுண்ணாமை | 10:24:328 |
| அளியன் | திருமுருகாற்றுப்படை | 11:17:290 |
| ஈந்த | திருவாசகம்-கீர்த்தித் திருஅகவல் | 8:2:30 |
| ஈந்தனன் | திருவாசகம்-உயிர் உண்ணிப்பத்து | 8:34:2 |
| ஈந்தார் | தேவாரம்-திருச்சாய்க்காடு-திருநேரிசை | 4:9:6 |
| கொடுப்பர் போலும் | தேவாரம்-திருச்சாய்க்காடு-திருநேரிசை | 4:9:9 |
| நல்கினன் | திருவாசகம்-சென்னிப்பத்து | 8:42:5 |
| வழங்கும் | திருமந்திரம்-முதல்தந்திரம்-கல்லாமை | 10:21:313 |

தேவாரம் இதன்கண் பலமுறை பயின்று வந்துள்ளமையைக் காணலாம். சிவபெருமானின் செயல்கள் இதன்கண் சுட்டப்பட்டுள்ளன. நாயன்மார்கள் தலந்தோறும் சென்று பாடல் பாடுங்கால் அங்குள்ள

சூழல்களையும் இறைச்சிறப்பையும் பாடுவார்கள். அதனால் இச்சொற்கள் இவ்வாறு பயன்படுத்தப்பட்டுள்ளன. பிற சொற்களைக் காட்டிலும் அளியன் என்ற சொல் குறிப்பிடத்தக்கதாக உள்ளது. அருளுதல், அளித்தல் போன்ற சொற்கள் மிகுதியும் இறைவன் மீது சார்த்திக் கூறப்படுகின்றன.

### 1.5.2. நாலாயிர திவ்வியப் பிரபந்தம்

ஆழ்வார்கள் பன்னிருவர் பாடிய பாடல்களின் தொகுப்பை நாலாயிர திவ்வியப் பிரபந்தம் என்பர். இஃது எண்ணிக்கையால் வந்த பெயர். சைவப் பெரியார்களின் பாடல்கள் திருமுறைகள் என அழைக்கப்பட்டது போல ஆழ்வார்களின் பாடல்கள் திவ்வியப் பிரபந்தம் என அழைக்கப்பட்டன. வைதீக சமயம் என்னும் பொதுநிலையிலிருந்து பிரிந்து சைவம், வைணவம் என இரண்டாகப் பிரிந்தது.[33] ஆழ்வார்கள் பாடிய பாடல்களில் பல இடங்களில் 'கொடை' குறித்த சொல்லாடல்கள் இடம்பெற்றுள்ளன.

ஆழ்வார் பாடல்களில் அருளுதல், அளித்தல் போன்ற பல சொற்கள் இடம்பெற்றுள்ளன. "அருளுதல்" என்பது இறை சார்ந்த சொல் எனலாம்.[34] சமூகத்தில் உயர்நிலையிலுள்ளோர் "அருளல்" என்ற சொல்லுக்குரியவராகக் கருதப்படுகின்றனர். நீதி இலக்கியங்களிலும் இச்சொல் பயன்படுகின்றது. பிற்காலத்தே வந்த அடியார்களும் இராமலிங்க அடிகள் போன்ற சீர்திருத்தக்காரர்களும் இச்சொல்லைப் பயன்படுத்தியுள்ளனர். "அருள் பாலித்தல்" என்று கூறப்படுவதும் இறைவனைக் குறிப்பிடும் சொல்லாகும். இறைவனுடைய திருவருளை வேண்டலாகவே இச்சொல் அமைந்திருக்கிறது. 'நாலாயிர திவ்வியப் பிரபந்தம்' ஆழ்வார்களின் பாடலாதலால் இந்நூல்கள் அனைத்தும் ஒரு பகுதியில் எடுத்து விளக்கப்பட்டுள்ளன.

| சொற்கள் | நூல் | பாடல் எண் |
|---|---|---|
| அருள் | பெரியாழ்வார் திருமொழி | 423 |
| | பெரிய திருமொழி | 1043, 1052, 1085, 1117, 1122, 1371, 1563, 1569, 2029 |
| | இரண்டாம் திருவந்தாதி | 2239 |
| | பெரிய திருவந்தாதி | 2610 |
| | திருவாய்மொழி | 2941, 2947, 2957, 2962, 3345, 3489, 3502, 3514, 3515, 3520 |

| சொற்கள் | நூல் | பாடல் எண் |
|---|---|---|
| அருள்வாய் | பெரிய திருமொழி | 1432 |
| அருளாய் | பெரிய திருமொழி | 996, 2027 |
| அருளால் | இரண்டாம் திருவந்தாதி | 2232 |
| அருளாயே | பெரிய திருமொழி | 1313, 1314, 1315, 1316 |
| | திருவாய்மொழி | 3321, 3327 |
| அருளி | பெரிய திருமொழி | 984 |
| | சிறிய திருமடல் | 2673 |
| | திருவாய்மொழி | 2708, 2713, 3534, 3568, 3570, 3571 |
| அருளிய | திருவாய்மொழி | 3440 |
| அருளினன் | திருவாய்மொழி | 2675 |
| அருளினோடு | திருவாய்மொழி | 2698 |
| அருளும் | பெரிய திருமொழி | 984 |

கீழே குறிப்பிடப்பட்டுள்ள சொற்கள் அனைத்தும் வினையாலணையும் பெயர்களாக உள்ளன. இவை அனைத்தும் "அளித்தல்" என்னும் வினையை அடியாகக் கொண்டுள்ளன. "அளி" என்பது பிற்கால மொழியில் மிகுதியும் பயின்று வரும் சொல்லாகும். குறிப்பாகச் சைவத் திருமுறையில் இச்சொல் சிவபெருமானின் அளிய குணங்களைக் குறிப்பிடுமிடத்துக் கூறப்படுகிறது.

| சொற்கள் | நூல் | பாடல் எண் |
|---|---|---|
| அளித்தானை | பெரிய திருமொழி | 1070 |
| அளித்தாய் | பெரிய திருமொழி | 1300 |
| அளிப்பான் | திருவிருத்தம் | 2478, 2509 |
| | இராமானுச நூற்றந்தாதி | 3871 |
| அளித்தானே | திருவாய்மொழி | 3742 |
| அளித்தனன் | இராமானுச நூற்றந்தாதி | 3879 |
| அளிப்பார் | திருவாய்மொழி | 2797 |

அளித்தானை என்பது அளித்தவனாகிய இறைவனை எனப் பொருள்படும். அளிப்பார் என்பது அளிப்பவராகிய கடவுள் எனப் பொருள்பட்டது. அளித்தாய் - முன்னிலை ஏவல்.

“ஈந்த” என்ற சொல் பெயரெச்சமாகும். “ஈந்தனன்” என்பது வினைமுற்று. இதுபோலவே வினையெச்சமும் இடம்பெற்றுள்ளது. வேண்டுகோள் பொருளிலும் செய்யும் என்னும் முற்றுப்பொருளிலும் “ஈ” என்னும் சொல்லடியாகப் பிறந்த சில சொற்கள் இடம்பெற்றுள்ளன.

| சொற்கள் | நூல் | பாடல் எண் |
|---|---|---|
| ஈந்த | பெரிய திருமொழி | 1494 |
| | இரண்டாம் திருவந்தாதி | 2222 |
| | திருவாய்மொழி | 2735, 2749, 3738 |
| ஈந்தனன் | இராமானுச நூற்றந்தாதி | 3853 |
| ஈந்தாய் | மூன்றாம் திருவந்தாதி | 2314 |
| ஈந்திட வேண்டும் | இராமானுச நூற்றந்தாதி | 3876 |
| ஈந்து | பெரிய திருமொழி | 984 |
| ஈயுமால் | திருக்குறுந்தாண்டகம் | 2047 |

“கொடை” என்பது கொடு என்பதன் திரிபு. அருள் ஈதலைக் குறிப்பதற்குக் கொடு, கொடை என்ற சொற்கள் பயன்படுத்தப் பெற்றுள்ளன. “கொடைக் கடன்” என்பதற்கு “நல்ல குணமும் புகழும் உடைய மன்னர்கள் தர்மம் செய்வதைக் கடமையாகக் கொண்டு உலகைக் காப்பது”[35] என உரையாசிரியர் குறிக்கிறார். “தா” என்ற சொல்லின் திரிபாகத் “தருவன்” இடம்பெற்றுள்ளது. தரு+அன்-தருவன் என அமைந்தது.

| சொற்கள் | நூல் | பாடல் எண் |
|---|---|---|
| கொடுக்கும் | பெரிய திருமொழி | 1272 |
| கொடுத்தாய் | திருவாய்மொழி | 2900 |
| கொடுத்து | பெரியாழ்வார் திருமொழி | 238 |
| கொடைக்கடன் | திருவாய்மொழி | 3014 |
| தருவன் | பெரியாழ்வார் திருமொழி | 141, 149, 233 |

நல்கு, நல்கி என்ற சொற்கள் வினைச் சொற்கள் ஆகும். இவை வினையெச்சங்களாய்க் காணப்படுகின்றன. நல்குதல், நல்குவன் ஆகியன பழந்தமிழில் காணப்படும் சொற்களாகும். கீழே அட்டவணையிற் காணும்

சொற்கள் "கொடை வழங்கல்" பொருளிலேயே ஆளப்பட்டுள்ளன. இதுபோலவே "பரிசு" என்ற சொல்லும் வழங்கப் பெற்றுள்ளது.

| சொற்கள் | நூல் | பாடல் எண் |
|---|---|---|
| நல்கி | பெரிய திருமொழி | 1520 |
| நல்கு | பெரிய திருமொழி | 1488 |
| நல்கும் | இராமானுச நூற்றந்தாதி | 3877 |
| நல்குவான் | பெரிய திருவந்தாதி | 2607 |
| பரிசினால் | பெரியாழ்வார் திருமொழி | 500 |
| பரிசு | பெரிய திருமொழி | 1003, 1321 |
| | இரண்டாம் திருவந்தாதி | 2183, 2184 |
| | திருவாய்மொழி | 3066, 3098, 3461 |

## 1.6. காப்பியங்களில் பரிசில்

காப்பியங்கள் பலவும் பிற சமயங்களிலிருந்தும் பிற மொழிகளிலிருந்தும் உருவாக்கப்பட்டவை. மொழி தமிழேயாயினும் நிகழ்வுகள் அயல்மொழியில் நடந்தவையாகவும் காணப்படுகின்றன. சிலப்பதிகாரம் இதற்கு விதிவிலக்காகும். தமிழர் வாழ்க்கை முறை, தொழில், பண்பாடு போன்ற தகவல்களும் காப்பியங்களில் காணப்படுகின்றன. தமிழில் காப்பியங்கள் வளர்ந்த வரலாற்றை,

> அறம், பொருள், இன்பம், வீடு எனும் நான்கு உறுதிப்பொருளும் அமையப் பாடப்பெறும் நூல்கள் காப்பியங்கள் எனப்பட்டன. மேலை நாட்டார் காப்பியத்தை வீரயுகக் காப்பியம், கலை காப்பியம் என இரண்டாகப் பகுப்பர். காப்பியம் என்பது காவியம் என்ற வடசொல்லின் திரிபு என்பர். தமிழில் பெருங்காப்பியங்கள், சிறுகாப்பியங்கள் என்ற பகுப்பு உள்ளது. இதுவும் வடமொழி மரபைப் பின்பற்றியது என்பர். ஐம்பெருங்காப்பியங்களாகச் சிலப்பதிகாரம், மணிமேகலை, சீவகசிந்தாமணி, வளையாபதி, குண்டலகேசி ஆகிய நூல்களை எடுத்துரைப்பர். அறம், பொருள், இன்பம், வீடு எனும் நான்கில் ஒன்றோ அதற்கு மேலோ குறையின் அது சிறுகாப்பியம் என அழைக்கப்பட்டது[36]

எனக் கூறுகிறார் சு.ஆனந்தன். கொடைப்பொருள் உணர்த்தும் பல்வேறு சொற்கள் ஐம்பெரும் காப்பியங்களில் இடம்பெற்றுள்ளன. மேலும்

இச்சொற்கள் காப்பியக் கொள்கைகளையும் சுட்டிக் காட்டுவனவாக அமைகின்றன.

### 1.6.1. சிலப்பதிகாரம்

சிலப்பதிகாரத்தில் பத்துக்கும் மேற்பட்ட சொற்கள் கொடைப்பொருளை உணர்த்துவனவாய்க் காணப்படுகின்றன. இவற்றுள் கொடைப் பொருண்மைமையை இயல்பாகவே உணர்த்தும் சொற்கள் மிகுதியும் இடம்பெற்றுள்ளன. உதவி, தலைக்கோல் போன்றவை சற்று வேறுபட்டு இப்பொருளை உணர்த்துகின்றன. கதைப்போக்கிற்கு ஏற்றாற்போல் மிகுதியாகப் பயன்படும் சொற்கள் 'கொடு' என்னும் வினையடியைக் கொண்டிருக்கின்றன. இதனை அட்டவணையிற் காணலாம்.

| **சொற்கள்** | **நூல்** | **காதை / பாடல் எண்** |
|---|---|---|
| அருள் | சிலப்பதிகாரம் | 5:600 |
| அருளே | மேலது. | 7:946 |
| ஈகை | மேலது. | 1:20 |
| ஈந்தார் | மேலது. | 1:40 |
| உதவிக்கு | மேலது. | 5:510 |
| கொடுத்த | மேலது. | 5:510 |
| கொடுத்து | மேலது. | 3:320 |
| கொடுத்து | மேலது. | 12:1780, 15:2400 |
| கொடுப்ப | மேலது. | 3:280 |
| கொடுப்போர் | மேலது. | 5:470 |
| தருக | மேலது. | 2:100 |
| தரும் | மேலது. | 5:650 |
| தருவனர் | மேலது. | 2:69 |
| தலைக்கோல் | மேலது. | 3:310 |
| தானம் | மேலது. | 15:2400, 15:2510, 27:4240 |
| பரிசா | மேலது. | 10:1520 |
| பரிசா | மேலது. | 23:3550 |

### 1.6.2. மணிமேகலை

சிலப்பதிகாரத்திற்கு நிகராக மணிமேகலையிலும் கொடை குறித்த சொற்கள் காணப்படுகின்றன. இயல்பாகக் கொடையைக் குறிக்கும் சொற்களும், அரிதாய்ப் பொருள் உணர்த்தும் சொற்களும் இடம்பெற்றுள்ளன. "வாங்குகை வருந்த", "ஈங்கிப் பாத்திரம் என்கைப் புகுந்தது" ஆகிய தொடர்கள் பொருள் வழங்கப்பட்டிருப்பதைக் குறிப்பாக உணர்த்துகின்றன. இவ்விவரங்கள் கீழே அட்டவணையில் தரப்பட்டுள்ளன.

| **சொற்கள்** | **நூல்** | **காதை / பாடல் எண்** |
|---|---|---|
| அருள் | மணிமேகலை | *11:1270, 13:1480* |
| அளித்ததும் | மேலது. | *12:1330* |
| ஆங்கவர் பசிதீர்த் தந்நாள் தொட்டு<br>வாங்குகை வருந்த மன்னுயிர் ஆம்பலி } | மேலது. | *14:1560* |
| இடுதலும் | மேலது. | *19:2170* |
| ஈங்குப் பாத்திரம் என்கைப் புகுந்தது | மேலது. | *11:260* |
| ஈத்து | மேலது. | *28:3900* |
| உயிர்க்கொடை | மேலது. | *11:1250* |
| கொடுத்ததும் | மேலது. | *14:1550* |
| கொடுத்தலும் | மேலது. | *25:3340* |
| கொடுத்து | மேலது. | *16:1800* |
| கொடுத்தோர் | மேலது. | *11:1250* |
| தானம் | மேலது. | *16:1850, 24:3110* |
| நல்க | மேலது. | *16:1732* |
| வழங்கி | மேலது. | *16:1732* |

### 1.6.3. சீவகசிந்தாமணி

சீவகசிந்தாமணியில் சற்றொப்ப ஐம்பது சொற்கள் கொடைப் பொருளை உணர்த்துவதாக உள்ளன. இச்சொற்கள் வினையடி வகைகளின் அடிப்படையில் நான்கு அட்டவணையில் பிரித்துத் தரப்பட்டுள்ளன. 'கொடு' என்பதை வினையடியாகக் கொண்ட சொற்கள் பதினாறு இடங்களில் இடம்பெற்றுள்ளன. இவை இயல்பாக வழங்கும் சொற்களாக உள்ளன.

| சொற்கள் | இலம்பகம் | பாடல் எண் |
|---|---|---|
| அருளி | பதுமையார் இலம்பகம் | 1172 |
| கொடுக்கல் வேண்டும் | கனகமாலையார் இலம்பகம் | 1647 |
| கொடுக்கும் | நாமகள் இலம்பகம் | 165 |
| கொடுக்கும் | பதுமையார் இலம்பகம் | 1296 |
| கொடுத்த | நாமகள் இலம்பகம் | 373 |
| கொடுத்தயாவுயிர்த்தான் | இலக்கணையார் இலம்பகம் | 2570 |
| கொடுத்தருள் | கந்தருவ தத்தையார் இலம்பகம் | 504 |
| கொடுத்தவனுக்கு | கனகமாலையார் இலம்பகம் | 1667 |
| கொடுத்தவென்பவே | முத்தி இலம்பகம் | 3100 |
| கொடுத்தனன் | கனகமாலையார் இலம்பகம் | 1845 |
| கொடுத்தான் | இலக்கணையார் இலம்பகம் | 2564 |
| கொடுத்தானே | கந்தருவதத்தையார் இலம்பகம் | 849 |
| கொடுத்து | பதுமையார் இலம்பகம் | 1339 |
| கொடுத்துண்டறியாதார் | முத்தி இலம்பகம் | 2929 |
| கொடுப்பக்கொண்டார் | கனகமாலையார் இலம்பகம் | 1667 |
| கொடுப்பவர் | கனகமாலையார் இலம்பகம் | 1619 |
| கொடுப்பித்தானே | இலக்கணையார் இலம்பகம் | 2569 |
| கொடை | முத்தி இலம்பகம் | 2831 |
| கொடைப்பயனறிய | முத்தி இலம்பகம் | 2829 |

கீழே குறிப்பிடப்பட்டுள்ள சொற்கள் 'தா' என்ற வினையடியைக் கொண்டவை. முன்னிலையில் உள்ள ஒருவரைப் பார்த்துப் பொருள் கேட்பதாகவும் அவர்கள் வழங்குவதாகவும் வரும் இடங்கள் எடுத்துக் கூறப்பட்டுள்ளன.

| சொற்கள் | இலம்பகம் | பாடல் எண் |
|---|---|---|
| தந்தபின் | கேமசரியார் இலம்பகம் | 1424 |
| தந்து | கனகமாலையார் இலம்பகம் | 1861 |
| தருதும் | கோவிந்தையார் இலம்பகம் | 440 |
| தருதும் | முத்தி இலம்பகம் | 2937 |
| தருவலென்றான் | குணமாலையார் இலம்பகம் | 1119 |
| தருவலென | கனகமாலையார் இலம்பகம் | 1590 |
| தருவன | முத்தி இலம்பகம் | 2747 |

தமிழ் இலக்கியங்களில் வரும் இலக்கிய வழக்குச் சொல் "நல்கு" என்பது. இது வழங்குதல் எனும் பொருளில் ஆளப்பட்டிருக்கின்றது. மிகுதியும் பொருள் வழங்கும் இடத்தில் இச்சொல் கையாளப்பட்டுள்ளது.

| சொற்கள் | இலம்பகம் | பாடல் எண் |
|---|---|---|
| நல்கப்பட்டார் | கந்தருவதத்தையார் இலம்பகம் | *818* |
| நல்கி | கந்தருவதத்தையார் இலம்பகம் | *500, 555, 671, 820* |
| நல்கி | பதுமையார் இலம்பகம் | *1275* |
| நல்கி | சுரமஞ்சரியார் இலம்பகம் | *2046, 2567* |
| நல்குவேன் | பதுமையார் இலம்பகம் | *1369* |
| பரிசென | நாமகள் இலம்பகம் | *192* |
| பெறுக | முத்தி இலம்பகம் | *2993* |
| வழங்கினார்க்கும் | முத்தி இலம்பகம் | *2828* |
| வழங்கும் | கேமசரியார் இலம்பகம் | *1412* |
| விருந்தேத்தி | முத்தி இலம்பகம் | *2690* |

விருந்தேத்தி-என்பது விருந்தினரை வரவேற்று உணவு வழங்கியதைக் குறிக்கும்.

### 1.6.4. வளையாபதி

'அருளுதல்' சமூகத்தில் உயர்நிலையிலுள்ள பெரியோர்களுக்கும் இறைவன் முதலான தெய்வங்களுக்கும் இணைத்துக் கூறப்படும் சொல்லாகும். இச்சொல்லே இவ்விலக்கியத்தில் மிகுதியாக இடம்பெற்றுள்ளது.

| சொற்கள் | நூல் | பாடல் எண் |
|---|---|---|
| அருள் | வளையாபதி | *20* |
| அருளுதல் | மேலது. | *24* |
| அருளை | மேலது. | *25* |
| தானம் | மேலது. | *18, 44* |

## 1.7. சிற்றிலக்கியங்களில் பரிசில்

*சிற்றிலக்கியங்கள் வடமொழியில் கூறப்படும் பிரபந்தங்கள் எனப்படுகின்றன. 'பிரபந்தம்' என்பது வடமொழிச் சொல். ஆழ்வார்கள் பாடிய பாடல்களைத் தனித்தனியாக ஒவ்வொரு ஆழ்வார்க்கும் உரியதாகப் பிரித்தால் அவை ஒவ்வொன்றும் பிரபந்தமாகத் தோன்றும். அதனால் ஆழ்வார் பாடல்களை, 'நாலாயிர திவ்யப் பிரபந்தம்' என அழைத்தனர். சைவ இலக்கியங்களிலும் 'பிரபந்தம்' என்ற சொல் வழக்கு உள்ளது. பதினோராம் திருமுறையில் உள்ள பல பாடல்கள் பிரபந்தம் என்றே அழைக்கப்படுகின்றன. ஒரு முழு நூலின் உறுப்பாக இருந்த இலக்கியக் கூறுகள் நாளடைவில் தனியாகப் பிரிந்து தனி இலக்கியங்களாகக் குறிப்பிடப்பட்டன. தமிழில் வந்த தூது, உலா, பள்ளு போன்ற பல இலக்கியங்கள் சிற்றிலக்கியங்கள் என அழைக்கப்பட்டன. சிற்றிலக்கியங்கள் பிற்காலக் குறுநில மன்னர்களையும் படைத்தலைவர்களையும் பற்றிப் பாடப்பட்ட பாடல்களாகும். சிறிய உறுப்பு விரித்துச் சொல்லப்படுவதால் சிற்றிலக்கியம் என அழைக்கப்பட்டது. இவ்இலக்கியங்கள் கொடையின் சமூக மதிப்பை உயர்த்தும் பாடல்களாகக் காணப்படுவதால் இவை போற்றிப் பாடப்பட்டன. பாடப்பட்டவர்கள் சிறுபகுதித் தலைவர்களாகவும் இருந்தனர். எஸ்.வையாபுரிப்பிள்ளை தொகுத்த 'சிற்றிலக்கியத் திரட்டு' என்னும் நூலிற்கண்டவாறு இங்குச் சொற்கள் தொகுத்தளிக்கப்பட்டுள்ளன.*

*கீழே தரப்பட்டுள்ள அட்டவணை இரு பிரிவு சொற்களைக் குறிக்கின்றது. 1. அருளல் 2. ஈதல் என்பன. இச்சொற்கள் திரிந்து தொடர்களில் இடம்பெற்றுள்ளன.*

| **சொற்கள்** | **நூல்** | **பாடல் எண்** |
|---|---|---|
| அருள் | சிற்.தொ.1, முப்பந்தொட்டியுலா | 29, 60, 84 |
| அருள்வாய் | சிற்.தொ.1, இராமப்பய்யன் அம்மானை | காப்பு.6 |
| அருளால் | சிற்.தொ.1, இராமப்பய்யன் அம்மானை | நூற்பொருள்.32 |
| அருளால் | சிற்.தொ.1, இராமப்பய்யன் அம்மானை | நூற்பொருள்.70 |
| அருளினான் | சிற்.தொ.1, முப்பந்தொட்டியுலா | 29, 60, 84 |
| ஈந்தே | சிற்.தொ.2, பாராங்குச நாடகம் | 30 |
| ஈந்தோன் | சிற்.தொ, முப்பந்தொட்டியுலா | 127 |

'கொடு' என்ற சொல்லை அடியாகக் கொண்ட 'கொடுத்த' முதலான சொற்கள் இங்கே பட்டியலிடப்படுகின்றன. இவை பெயராயும் வினையாயும் காணப்படுகின்றன. இச்சொற்கள் கீழே தரப்படுகின்றன.

| சொற்கள் | நூல் | பாடல் எண் |
|---|---|---|
| கொடுத்த | சிற்.தொ.1, இராஜராஜதேவருலா | 222 |
| | சிற்.தொ.1, முப்பந்தொட்டியுலா | 115 |
| | சிற்.தொ.1, பணவிடுதூது | 22 |
| | சிற்.தொ.1, துகில் விடு தூது | 293 |
| கொடுத்ததென | சிற்.தொ.1, துகில் விடு தூது | 7 |
| கொடுத்தார் | சிற்.தொ.1, இராமப்பய்யன் அம்மானை | 391 |
| கொடுத்து | சிற்.தொ.1, இராமப்பய்யன் அம்மானை | 39, 262, 862, 876, 1096, 1377, 1427, 1860, 1897, 2052, 2123, 2262 |
| | சிற்.தொ.1, அணிமுருகாற்றுப்படை | 33, 147 |
| | சிற்.தொ.1, தெய்வச் சிலையார் விறலிவிடு தூது | 84, 210 |
| கொடுத்தோன் | சிற்.தொ.1, பணவிடுதூது | 118 |
| கொடுப்ப | சிற்.தொ.1, இராஜராஜதேவருலா | 305 |
| கொடுப்பாய் | சிற்.தொ.1, பணவிடுதூது | 42 |
| கொடுப்பார் | சிற்.தொ.1, துகில்விடு தூது | 23 |
| கொடை | சிற்.தொ.1, பணவிடு தூது | 257 |
| | சிற்.தொ.1, துகில் விடு தூது | 137 |
| கொடையால் | சிற்.தொ.1, தெய்வச்சிலையார் விறலிவிடு தூது | 4 |

மேற்சுட்டிய அட்டவணையிற் கூறப்பட்டது போலப் பின்வரும் அட்டவணையும் சில சொற்களைச் சிற்றிலக்கியங்களிலிருந்து காட்டுகின்றன. 'தருதல்', நல்கல், தானம் ஆகியன பற்றிய பதிவுகள் இங்குத் தரப்படுகின்றன.

| சொற்கள் | நூல் | பாடல் எண் |
|---|---|---|
| தந்து | சிற்.தொ.1, இராமப்பய்யன் அம்மானை | காப்பு 4 |
| தருவாய் | சிற்.தொ.1, தெய்வச்சிலையார் விறலிவிடு தூது | 85 |
| தருவார் | சிற்.தொ.2, பாராங்குச நாடகம் | 37 |
| தருவோம் | சிற்.தொ.2, பாராங்குச நாடகம் | 32 |
| தானங்கொடுத்து | சிற்.தொ.1, கோதை நாச்சியார் தாலாட்டு | 137 |
| தானம் | சிற்.தொ.1, தெய்வச்சிலையார் விறலிவிடு தூது | 86 |
| நல்கி | சிற்.தொ.1, நெல்விடு தூது | 245 |
| நல்கியே | சிற்.தொ.2, பாராங்குச நாடகம் | 116 |
| நல்கினேன் | சிற்.தொ.1, தெய்வச்சிலையார் விறலிவிடு தூது | 429 |
| நல்கு | சிற்.தொ.2, குருகூர்ப்பள்ளு | 16 |
| | சிற்.தொ.1, மதுரைக்கோவை | 116 |
| | சிற்.தொ.1, தெய்வச்சிலையார் விறலிவிடு தூது | 9 |
| நல்குகொடை | சிற்.தொ.1, தெய்வச்சிலையார் விறலிவிடு தூது | 622 |
| நல்குவதே | சிற்.தொ.1, மதுரைக்கோவை | 118 |

'பகுத்தல்' என்பது கொடையுடன் இணைத்துக் கூறப்படுகிறது. "பகுத்துண்டு பல்லுயிர் ஓம்புதல்"[37] என்பதில் 'பகுத்தல்' உணவளித்தலுடன் இணைந்து வருவதைக் காணமுடிகிறது. பகுத்தளித்து, பகுத்துண்டு என்னும் சொற்கள் இணைத்துப் பார்க்கத்தக்கன. ஆய்வுத் தலைப்பில் இடம்பெற்றுள்ள 'பரிசில்' என்ற சொல்லும் தொடர்புடைய 'பரிசு' என்பதும் இங்குக் குறிப்பிடப்பட்டுள்ளன. பின்வரும் அட்டவணையில் இவற்றைக் காணலாம்.

| சொற்கள் | நூல் | பாடல் எண் |
|---|---|---|
| பகுந்தளித்து | சிற்.தொ.1, தெய்வச்சிலையார் விறலிவிடு தூது | 595 |
| பரிசகன்றார் | சிற்.தொ.1, மதுரைக்கோவை | 382 |
| பரிசல்லவோ | சிற்.தொ.1, மதுரைக்கோவை | 289 |
| பரிசில் | சிற்.தொ.1, தெய்வச்சிலையார் விறலிவிடு தூது | 128 |
| | சிற்.தொ.1, திருமுருகாற்றுப்படை | 295 |
| பரிசிலர் | சிற்.தொ.1, திருமுருகாற்றுப்படை | 273 |

| சொற்கள் | நூல் | பாடல் எண் |
|---|---|---|
| பரிசிலடிமை | சிற்.தொ.1, தெய்வச்சிலையார் விறலிவிடு தூது | 22 |
| பரிசிலுடனே | சிற்.தொ.1, இராஜராஜதேவருலா | 266 |
| பரிசு | சிற்.தொ.1, நெல்விடுதூது | 358 |
| பரிசுரைத்தால் | சிற்.தொ.1, மதுரைக்கோவை | 311 |
| பரிசை | சிற்.தொ.1, அணிமுருகாற்றுப்படை | 10 |
| வழங்கினவன் | சிற்.தொ.1, துகில்விடுதூது | 294 |
| வழங்கினோன் | சிற்.தொ.1, முப்பந்தொட்டி உலா | 144 |

## 1.8. நவீன இலக்கியங்களில் பரிசில்

வடிவமும் உள்ளடக்கமும் மாறி மாறிப் புதிய தன்மைகளுடன் வெளிவருவது நவீன இலக்கியமாகும். தமிழில் வடிவத்திலும், உள்ளடக்கத்திலும் புதுமையைச் செய்தவர் பாரதி. இன்ன பிற காரணங்களால் பாரதியை நவீன இலக்கியத்தின் முன்னோடி எனக் கூறுவர். உரைநடை, செய்யுள் போன்றவற்றில் புதிய முறையைக் கையாண்டவர் பாரதியார். பாரதியாரின் கட்டுரைகள் புதிய கருத்துக்களைக் கூறுவன. ஆனால் வடமொழிச் சொற்கள் அவற்றில் மிகுந்துள்ளன.

> பாரதியின் கவிதையில் ஒரு தனித்த சொல்லாட்சியை நாம் உணர்ந்தாலும், அவருக்கு உரைநடையில் அதிகப் பயிற்சி இல்லை என்றுதான் சொல்ல வேண்டும். அவருடைய வசன நூல்கள் இவ்வுண்மையை நமக்குப் புலப்படுத்துகின்றன[38]

என்று ரா.ஸ்ரீ.தேசிகன் கூறுவது இங்கு நினைவு கூரத்தக்கது.

### 1.8.1. பாரதியார்

பாரதியார் எளிய சொற்களைப் பொதுமக்கள் யாவர்க்கும் விளக்கும் அளவில் பயன்படுத்த வேண்டும் என்ற கொள்கையுடையவர்.

> எளிய பதங்கள், எளிய நடை, எளிதில் அறிந்து கொள்ளக் கூடிய சந்தம், பொது ஜனங்கள் விரும்பும் மெட்டு - இவற்றினையுடைய காவியமொன்று தற்காலத்திலே செய்து தருவோன் நமது தாய்மொழிக்குப் புதிய உயிர் தருவோனாகின்றான். ஓரிரண்டு வருஷத்து நூற்பழக்கமுள்ள தமிழ் மக்களெல்லோருக்கும் நன்கு

> பொருள் விளங்கும்படி எழுதுவதுடன் காவியத்துக்குள்ள நயங்கள் குறைவுபடாமலும் நடத்துதல் வேண்டும்[39]

என்று பாஞ்சாலி சபதத்தின் முன்னுரையில் குறிப்பிட்டுள்ளார். இவ்வாறு எளிய நடையைக் கைக்கொள்ளும் பாரதியும் இச்சொல்லைக் (பரிசு) கையாண்டிருத்தல் குறிப்பிடத்தக்கது.

> சிங்க மராட்டியர்தம் கவிதை கொண்டு
> சேரத்துத் தந்தங்கள் பரிசளிப்போம்[40]

என்கிறார் பாரதி. இவர் பரிசு வழங்கல் என்பதைப் பரிசளித்தல் என்று சுட்டுகிறார்.

'அருள்' என்பது 'உயர்ந்தோர் தம்மிடம் உருவாகும் அன்பு முதலான நல்லுணர்வுகளைப் பிறர்க்கு வழங்குதல்' பொருளில் இடம்பெற்றுள்ளது. பாரதியார் பாடல்களில் 'அருள்' என்னும் சொல் மிகுதியாகப் பயன்படுத்தப்பட்டுள்ளது. இச்சொல்லின் பெரும்பகுதி பாரதமாதாவின் அருள்வேண்டி அமைந்துள்ளது. 'அருள்' என்ற சொல் மிகுதியும் பாரதி பாடல்களில் இடம்பெற்றுள்ளதைப் பின்வரும் அட்டவணையில் எடுத்துக் கூறப்பட்டுள்ளது.

| சொற்கள் | கவிதைத் தலைப்பு | பாடல் எண் |
|---|---|---|
| அருள்வதில் | 2. தோத்திரப் பாடல்கள் - நல்லதோர் வீணை | 13:16 |
| அருள்வது | 2. தோத்திரப் பாடல்கள் - விநாயகர் நான்மணிமாலை | 1:20 |
| அருள்வாய் | 2. தோத்திரப் பாடல்கள் - விநாயகர் நான்மணி மாலை | 1:32 |
| அருளால் | 2. தோத்திரப் பாடல்கள் - விநாயகர் நான்மணி மாலை, ஆரிய தரிசனம் | 68:21 |
| அருளினிலே | 1. தேசிய கீதங்கள் - பாரத நாடு | 4:6 |
| அருளை | 2. தோத்திரப் பாடல்கள் - விநாயகர் நான்மணி மாலை | 1:39 |
| அருள் செய்பவள் | 1. தேசிய கீதங்கள் - எங்கள் தாய் | 9:4 |
| அருள் சேர்ப்பையால் | 2. தோத்திரப் பாடல்கள் - கண்ணனை வேண்டுதல் | 45:6 |
| அருள் புரிந்து | 2. தோத்திரப் பாடல்கள் - காளி ஸ்தோத்திரம் | 31:1 |

| **சொற்கள்** | **கவிதைத் தலைப்பு** | **பாடல் எண்** |
|---|---|---|
| அருள் புரிவாள் | 2. தோத்திரப் பாடல்கள் - திருமகளைச் சரண் புகுதல் | 59:4 |
| அருள் புரிவீர் | 2. தோத்திரப் பாடல்கள் - கலைமகளை வேண்டுதல் | 61:5 |
| அருள் பெறுதல் | 2. தோத்திரப் பாடல்கள் - சக்தி விளக்கம் | 23:5 |
| ஆண்டருள் | 1. தேசிய கீதங்கள் - பாரதமாதா | 8:6 |
| ஆதரித்தருள் | 2. தோத்திரப் பாடல்கள் - சிவசக்தி | 11:3 |
| நல்லருள் | 2. தோத்திரப் பாடல்கள் - சிவசக்தி | 11:1 |
| நல்லருளும் | 2. தோத்திரப் பாடல்கள் - சக்திக்கு ஆத்ம சமர்ப்பணம் | 24:2 |
| நல்லருளை | 2. தோத்திரப் பாடல்கள் - மஹா சக்தி வெண்பா | 17:2 |
| நன்கருள்வாய் | 2. தோத்திரப் பாடல்கள் - திருமகள் துதி | 58:2 |
| மறையருள் | 4. பல்வகைப் பாடல்கள் - புதிய ஆத்திசூடி | 4:1 |

அருள் முதலான சொற்கள் தேசிய கீதங்களிலும், பிற கவிதைகளிலும் பரவலாக இடம்பெற்று வருகின்றன. பாரதியாரைப் பொருத்தவரையில் அருள், வேண்டல் என்பன கொடை என்பதற்கு இணையாகக் கையாளப்பட்டுள்ளன.

கொடைப் பொருண்மையை உணர்த்தும் எளிய சொற்கள் பல பாரதியின் பாடல்களில் காணப்படுகின்றன.

| **சொற்கள்** | **பாடல் தலைப்பு** | **பாடல் எண்** |
|---|---|---|
| அளிப்பவர் | 1. தேசிய கீதங்கள் - சுதந்திர தேவியின் துதி | 29:5 |
| அளிப்போம் | 1. தேசிய கீதங்கள் - பாரத தேசம் | 5:7 |
| ஈகை | 2. தோத்திரப் பாடல்கள் - சிவசக்தி புகழ் | 26:5 |
| ஈந்தாய் | 2. தோத்திரப் பாடல்கள் - விநாயகர் நான்மணி மாலை | 1:21 |
| ஈந்தும் | 1. தேசிய கீதங்கள் - தாயின் மணிக்கொடி வாரீர் | 14:4 |

| சொற்கள் | பாடல் தலைப்பு | பாடல் எண் |
|---|---|---|
| ஈன்றனை | 1. தேசிய கீதங்கள் - பாரத மாதா திருப்பள்ளி எழுச்சி | 11:3 |
| ஈவாய் | 2. தோத்திரப் பாடல்கள் - விநாயகர் நான்மணி மாலை | 1:33 |
| | போற்றி அகவல் | 10:20 |
| உதவிடுவாய் | 2. தோத்திரப் பாடல்கள் - சிவசக்தி | 11:3 |
| உதவிடுவீர் | 2. தோத்திரப் பாடல்கள் - கலைமகளை வேண்டுதல் | 61:4 |
| கொடுப்போம் | 2. தேசிய கீதங்கள் - பாரததேசம் | 5:8 |
| தருநாடு | 1. தேசிய கீதங்கள் - பாரத சமுதாயம் | 17:1 |
| தாராயோ | 2. தோத்திரப் பாடல்கள் - நல்லதோர் வீணை | 13:5 |
| தானமும் | 1. தேசிய கீதங்கள் - தமிழ்ச்சாதி | 24:55 |
| நல்கினள் | 1. தேசிய கீதங்கள் - ஜயபாரத | 7:5 |
| நல்கினன் | 1. தேசிய கீதங்கள் - குருகோவிந்தர் | 42:165 |
| நல்கும் | 1. தேசிய கீதங்கள் - சுதந்திர தேவியின் துதி | 29:4 |
| நல்குதியே | 1. தேசிய கீதங்கள் - சுதந்திரப் பயிர் | 27:15 |
| நல்குவர் | 2. தோத்திரப் பாடல்கள் - வெண்ணிலாவே | 73:4 |
| வரந்தருவாய் | 2. தோத்திரப் பாடல்கள் - தேசமுத்து மாரி | 41:1 |
| வழங்கும் | 1. தேசிய கீதங்கள் - சத்ரபதி சிவாஜி | 32:35 |

### 1.8.2. கவிமணி

கவிமணி தேசிக விநாயகம் பிள்ளை 20 ஆம் நூற்றாண்டின் தொடக்கக் காலத்தவர். இவருடைய கவிதைகள் தேசிய விடுதலைப் போராட்டத்துடனும், காந்தியச் சிந்தனைகளுடனும் வெளிவந்தவை. குழந்தைகள் வளர்ப்பில் ஒரு பொது (தேசியம்) அக்கறை உள்ளவர். இக்கருத்துக்கள் அவருடைய பாடல்களில் வெளிப்பட்டுள்ளன. குறிப்பாகத் தேசிய கீதப் பாடல்கள், குழந்தைப் பாடல்கள் போன்றவற்றில் கொடைப் பொருளில் வரும் பல சொற்களைக் கையாண்டுள்ளார். இவருடைய சொற்பதிவுகள் அருள், அளி, ஈதல், உதவு, தருதல், வழங்கல் என்னும் ஆறு வகைகளில் அடங்குகின்றன. கவிமணியின் கொடைப்பொருள் சொற்கள் இங்கு அட்டவணைப்படுத்தப் படுகின்றன.

| சொற்கள் | கவிதைத் தலைப்பு | பாடல் எண் |
|---|---|---|
| அருள் | கம்பன் | 28:151 |
| அருள்வாய் | பரமஹம்ஸரின் தேவி பிரார்த்தனை | 16:88 |
| அருளல்லால் | பரமஹம்ஸரின் தேவி பிரார்த்தனை | 16:86 |
| அருளல் வேண்டும் | அஞ்சலி | 3:15 |
| அருளும் | மகாத்மா | 115:927 |
| அருளையென்று | அழகம்மை ஆசிரிய விருத்தம் | 1:2 |
| அளித்த | கதர் விற்பனை | 106:858 |
| அளித்திடுவோன் | வீரபாண்டிய கட்டபொம்மன் | 114:915 |
| அளிப்பாயே | அஞ்சலி | 3:22 |
| அளிப்போம் | மலர்கள் | 34:228 |
| ஈ | திருக்குறள் இன்பம் | 220-1237:12 |
| ஈதல் | சகுந்தலை | 239:1283 |
| ஈந்த | ஆரல்வாய்மொழி | 265:1375 |
| ஈந்து | அண்ணாமலை மன்னர் | 131:1016 |
| ஈவாரே | உரையாசிரியர் | 21:106 |
| உதவி | போதனை | 14:75 |
| உதவுகவே | முருகன் புகழ் மாலை | 5:30 |
| கொடை | குழந்தை | 76:5-7 |
| கொடுத்தான் | கேலிப்படலம் | 1393:240 |
| தருகின்றேன் | வீரபாண்டியக் கட்டபொம்மன் | 114:917 |
| தந்தருள் | பரமஹம்ஸரின் தேவி பிரார்த்தனை | 16:8 |
| தரும் | இராமகீர்த்தரின் போதனை | 19:103 |
| தந்திடுவான் | அண்ணாமலை மன்னர் | 131:1014 |
| நல்கிடுவான் | அண்ணாமலை மன்னர் | 131:1014 |
| பரிசில் | சித்திரை மன்னர் | 120:982 |
| வழங்கி | மலர்கள் | 34:226 |
| வழங்கிடுவோன் | கம்பன் | 28:146 |

### 1.8.3. பாரதிதாசன்

பாரதிதாசன் தமிழ்ச் சூழலில் 20 ஆம் நூற்றாண்டில் பகுத்தறிவு சிந்தனைகளைப் பரப்பிய கவிஞர். இவருடைய கவிதைகளில் தமிழ், தமிழர், பெண்விடுதலை ஆகியவை பாடுபொருளாக அமைந்தவை. இவை அக்காலச்

சூழலில் சீர்திருத்த எழுச்சியில் இவர் பங்கு கொண்டதன் வெளிப்பாடாக உதித்தவை. இவ்வாறு சமூகத் தத்துவத்தை அடிப்படையாகக் கொண்ட இவர் பாடல்களில் கொடை என்னும் பொருளைக் கொண்ட பல சொற்கள் இடம்பெற்றுள்ளன. 'பாண்டியன் பரிசு' என்னும் தலைப்பில் உள்ள இவரது நூல் எண்ணத்தக்கது.

| சொற்கள் | கவிதைத் தலைப்பு | பாடல் எண் |
|---|---|---|
| ஈந்த | கடல்மேற்குமிழிகள் | 17:2 |
| ஈந்துவா | பன்மணித்திரள் - கற்பின் சோதனை | 55:12 |
| ஈவது போல் | பன்மணித்திரள் - வள்ளுவர் வழங்கிய முத்துக்கள் | 63:4 |
| ஈவாய் | சஞ்சீவி பர்வதத்தின் சாரல் | 1:94 |
| உதவுக | கடல்மேற் குமிழிகள் | 1:28 |
| உதவுவேன் | வீரத்தாய் - சேனாபதி | 3:கா.1 |
| கொடுத்த | பன்மணித்திரள் - வள்ளுவர் வழங்கிய முத்துக்கள் | 63:6 |
| தரும்போது | பெண்ணுலகு - எழுச்சியுற்ற பெண்கள் | 33:27 |
| பரிசாய் | வீரத்தாய் - தண்டோராக்காரன் | 3:கா.4 |
| பரிசிலும் | கடல்மேற் குமிழிகள் | 1:4 |
| பரிசு | வீரத்தாய் - சேனாபதி | 3:கா.5 |

இவ்வாறு பயன்பட்ட சொற்கள் வேண்டுகோள், சிறப்பித்தல், மன உறுதி வெளிப்பாடு ஆகிய பொருள்களில் இடம்பெறுகின்றன. இவற்றுள் முன்னிலை ஏவலாக இரண்டும், வியங்கோள் பொருளில் ஒன்றும், தன்மை வினையாக ஒன்றும் சிறப்புப் பொருளில் மூன்றும், பெயர் சுட்டும் பொருளில் (பரிசு) மூன்றும் இடம்பெற்றுள்ளன.

## தொகுப்புரை

பரிசில், கொடை ஆகிய சொற்கள் இலக்கியங்களில் பொருள்படுவதையும், அறிஞர்கள் இச்சொற்களுக்குக் கூறும் விளக்கமும் தரப்பட்டுள்ளன. இச்சொற்கள் பிறமொழிகளில் இடம்பெற்றுள்ளமை சுட்டப்பட்டுள்ளது. சங்க இலக்கியம், பக்தி இலக்கியம், அறநூல்கள் போன்றவற்றில் 'பரிசில்' சொல் பதிவுகளும் விளக்கமும் தரப்பட்டுள்ளன. காப்பியங்களில் இச்சொல் வழங்கப்பட்ட முறை, இவற்றில் 'பரிசில்' சொல்

இடம்பெறும் சூழல், சிற்றிலக்கியங்களில் இச்சொல் இடம்பெறும் சூழல் என்பன எடுத்துக் கூறப்பட்டுள்ளன. பாரதியார், கவிமணி, பாரதிதாசன் போன்றோர் பரிசில் மற்றும் கொடை ஆகிய சொற்களைப் பயன்படுத்தியிருக்கும் நோக்கும் இடமும் விளக்கிக் காட்டப்பட்டிருக்கின்றன.

பொதுவாகத் தமிழ் இலக்கியப் பரப்பில் சொற்பதிவுகளாகப் பரிசில் வரும் இடங்கள் இவ்வியலில் சுட்டப்பட்டுள்ளன.

## சான்றெண் குறிப்புகள்

1. ஔவை சு.துரைசாமிப்பிள்ளை (உ.ஆ.), **புறநானூறு,** பகுதி 1, பா.34.
2. மேலது., பா.183.
3. **குறள்.**221.
4. மேலது.,
5. நச்சினார்க்கினியர் (உ.ஆ.), **கலித்தொகை,** பா.148.
6. Debiprasad Chattobadhyaya, "Such a social order caste in poem but class in content, played the same role …", **Philosophy Science and Social Progres,** p.172.
7. **தமிழ் லெக்சிகன்,** தொ.4, ப.2511.
8. மேலது., தொ.2, ப.1141.
9. அரங்க.சுப்பையா, **நன்னூல் களஞ்சியம்,** ப.105.
10. சங்கர நமச்சிவாயர் (உ.ஆ.), **நன்னூல் விருத்தி உரை,** நூ.145.
11. **தொல். பொருள்.,** நூ.253.
12. **நா.கதிரைவேற்பிள்ளையின் தமிழ்மொழி அகராதி,** ப.532.
13. அ.தட்சிணாமூர்த்தி, **சங்க இலக்கியங்கள் உணர்த்தும் மனித உறவுகள்,** ப.264.
14. ச.இராசேந்திரன், **தற்காலத் தமிழ்ச் சொற்களஞ்சியம்,** ப.336.
15. **குறள்.**12.
16. Winslow, **A Comprehensive Tamil and English Dictionary**, p.366.
17. **தமிழ் லெக்சிகன்,** தொ.2, ப.1141.
18. **க்ரியாவின் தற்காலத் தமிழ் அகராதி,** ப.371.
19. Winslow, **A Comprehensive Tamil and English Dictionary**, p.736
20. **தமிழ் லெக்சிகன்,** தொ.4, ப.2511.
21. **க்ரியாவின் தற்காலத் தமிழ் அகராதி,** ப.685.
22. Thomas Lehman and Thomas Malten, **A Word Index of old Tamil Cankam Literature,** p.295.
23. மேலது., ப.295.
24. மேலது., ப.176.

25. Thomas Lehman and Thomas Malten, **A Word Index of old Tamil Cankam Literature,** *ப.176.*

26. *மேலது., பக்.26-27.*

27. **திருக்குறள்,** *அதிகாரம் 23.*

28. **சுந்தரமூர்த்தி சுவாமிகள் தேவாரம்,** *பா.532.*

29. *க.வெள்ளைவாரணன் (உ.ஆ.),* **பன்னிரு திருமுறை வரலாறு,** *முதற்பாகம், ப.3.*

30. *மேலது., ப.4.*

31. *ப.அருணாசலம்,* **பக்தி இலக்கியம்,** *ப.9.*

32. *ஔவை சு.துரைசாமிப்பிள்ளை (உ.ஆ.),* **புறநானூறு,** *பகுதி 1, பா.1.*

33. *சு.ஆனந்தன்,* **தமிழ் இலக்கிய வரலாறு,** *ப.97.*

34. *மேலது.,*

35. *இரா.வ.கமலக்கண்ணன் (உ.ஆ.),* **நாலாயிர திவ்யப் பிரபந்தம்,** *நான்காம் தொகுதி, பா.3014.*

36. *சு.ஆனந்தன், மு.கு.நூ., ப.109.*

37. **குறள்.***322.*

38. *ரா.ஸ்ரீ.தேசிகன், மேற்கோள்: வல்லிக்கண்ணன்,* **பாரதிக்குப் பின் உரைநடை வரலாறு**, *ப.25.*

39. *ஏ.திருநாவுக்கரசு (ப.ஆ.), "முகவுரை",* **பாரதியார் கவிதைகள் ஆய்வுப்பதிப்பு - பாஞ்சாலி சபதம்,** *ப.384.*

40. *ம.ரா.போ.குருசாமி (ப.ஆ.),* **பாரதி பாடல்கள் - பாரததேசம்,** *ப.525.*

# இயல் 2

## பரிசில் வழங்குவோர்

பழந்தமிழ் இலக்கியம் சில தனித்தன்மைகளைக் கொண்டது. சங்க இலக்கியம் தொன்மையான நாகரிகத்தை இன்று உணர்த்தி நிற்கின்றது.[1] சங்க இலக்கியம் என்னும் பெயரும், சான்றோர் செய்யுள்[2] என்னும் பெயரும் இதற்கு அமைந்ததே அதன் சிறப்பை உணர்த்தும். இதுபோலவே சங்கப் புலவர்களும் சங்கச் சான்றோர் என அழைக்கப்பட்டனர். இவர்களால் பாடப்பெற்ற சங்க இலக்கியங்கள் அகம், புறம் என இரண்டு பகுதியாய் அமைந்தவை. அகம் இல்லறப் பண்புகளையும் புறம் சமூகத்தின் பிற பண்புகளையும் உணர்த்துவன. அகமும் புறமும் தனித்தனிக் கூறுகளைக் கொண்டவை. அகம் காதல், கற்பு, குடும்பம் போன்ற களங்களையும் புறம் வீரம், புகழ், கொடை, கல்வி போன்றவற்றையும் கூறுகின்றன. இவற்றுள் கொடை என்ற களத்தின் பின்புலத்தில் கொடை வழங்குவோர், கொடை பெறுவோர் (கொள்வோர்) ஆகியோர் பற்றிய வரலாறு எழுதுகை (History) தேவைப்படுகிறது. இந்த அடிப்படையில் சங்க இலக்கியத்தில் பரிசில் வழங்குவோர் பற்றி ஆய்வு செய்வதாக இவ்வியல் அமைகிறது.

இவ்வியலுக்குக் கிடைத்துள்ள தரவுகள் (Data) அடிப்படையில் இது சில கூறுகளாகப் பகுத்து அமைக்கப்படுகிறது. இக்கூறுகள் பரிசில் தருவோரின் வரலாற்று விவரங்களை முறைப்படுத்துகின்றன.

2.1. மன்னர்கள்

2.2. குறுநில மன்னர்கள்

2.3. வேளிர்

2.4. சீறூர் மன்னர்கள்

2.5. பொதுவாகச் சுட்டப்படுவோர்

2.6. புலவர்கள்

2.7. திணைசார் மக்கள்

என்னும் பகுதிகள் இங்கு ஆராயப்படுகின்றன.

## 2.1. மன்னர்கள்

*பழந்தமிழ் இலக்கியங்கள் மொழி வரலாற்றையும் நாகரிகம், பண்பாடு போன்றவற்றையும் அறிய உதவும் ஆவணங்களாக விளங்குகின்றன. வரலாறெழுதுவோர் (Historians) இலக்கியங்களை முதன்மைச் சான்றுகளாகக் கொள்கின்றனர். சங்க இலக்கியங்கள் பழந்தமிழகத்தை அறியப் பெரிதும் உதவுவதை அறிஞர்கள் எடுத்துக் கூறியுள்ளனர்.*

> ஒரு நாட்டின் வரலாற்றிற்கும் மொழியின் வரலாற்றிற்கும் இன்றியமையாத சான்று இலக்கியமாகும். மொழி வரலாற்றிற்கும் எழுதப்பட்டவை எல்லாம் சான்றுகளாகக் கருதப்படுகின்றன. சங்க கால இலக்கியங்களை வைத்துச் சங்கத் தமிழைப் பற்றி ஆராய்கிறோம். அந்தந்தக் காலத்தில் எழுந்த இலக்கியங்களை வைத்து அந்தந்தக் கால மொழியைப் பற்றி அறிகிறோம்[3]

*என்கிறார் சு.சக்திவேல்.*

*சோழர் வரலாற்றைப் பல பகுதிகளாகப் பிரித்து எழுதும் கே.ஏ.நீலகண்ட சாஸ்திரி சங்க இலக்கியக் காலத்தைச் சோழர் வரலாற்றை அறியும் காலமாகக் குறிப்பிடுகிறார். சங்க இலக்கியப் பதிவுகள் இவ்வரசர்களின் வரலாற்றை அறிய உதவுவதாக அவர் கருதுகிறார்.[4]*

*மேலும் இலக்கண நூல்களும், கல்வெட்டுக்களும், இவ்வாறே உதவும் சான்றுகளாக விளங்குகின்றன. ஆய்வுக்கு எடுத்துக் கொண்ட கருத்தின் அடிப்படையில், பரிசில் வழங்குவோருள் மன்னர்கள் முதற்கண் அறிமுகம் செய்யப்படுகின்றனர். இவர்களுள் மன்னர் பரம்பரையினர் ஒருவகையினராகவும் குறுநில மன்னர் முதலானோர் அடுத்த பிரிவினராகவும் இங்கு விவரிக்கப்படுகின்றனர்.*

*மன்னர் என்னும் சொல் தமிழகத்தில் நிலையான ஆட்சி புரிந்து வந்த அரசர்களைக் குறிப்பது. வழிவழியாகத் தொடர்ந்து ஆட்சி செய்து வருவோர் அரசப் பரம்பரையினர் (Dynasty) என்று அழைக்கப்பட்டனர். இவர்கள் வேந்தர்கள் எனவும் குறிக்கப்பட்டனர். மன்னர், வேந்தர் என்னும் சொற்கள்*

சங்க இலக்கியத்திலும், தொல்காப்பியத்திலும் காணப்படுகின்றன. அரசப்பரம்பரையினர் தம்மை அடையாளப்படுத்திக் கொள்ளச் சில கொள்கைகளையும், ஒழுகலாறுகளையும் மேற்கொண்டனர். வெண்கொற்றக் குடை, காவல்மரம் போன்றவை அடையாளங்களாக இருந்தன. இவ்வாறு ஒழுகி வந்த அரசப்பரம்பரையினர் (மன்னர்கள்) "பரிசில் வழங்கல்" போன்ற மக்கள் நலன் சார்ந்த பணிகளையும் மேற்கொண்டிருந்தனர். இவர்களுள் சங்க இலக்கியங்களில் இருபத்தொருவர் இடம்பெற்றுள்ளனர். இம்மன்னர்கள் சேர, சோழ, பாண்டியர்களுள் அடங்குவர்.

2.1.1. ஆடுகோட்பாட்டுச் சேரலாதன்

2.1.2. இமயவரம்பன் நெடுஞ்சேரலாதன்

2.1.3. இளஞ்சேட்சென்னி

2.1.4. இளஞ்சேரல் இரும்பொறை

2.1.5. உதியஞ்சேரலாதன்

2.1.6. கடல்பிறக்கோட்டிய செங்குட்டுவன்

2.1.7. கரிகாற்பெருவளத்தான்

2.1.8. கருங்கையொள்வாள் பெரும்பெயர்வழுதி

2.1.9. களங்காய்க்கண்ணி நார்முடிச்சேரல்

2.1.10. குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவன்

2.1.11. கோப்பெருஞ்சோழன்

2.1.12. செல்வக்கடுங்கோ வாழியாதன்

2.1.13. சேரமான் கோதை

2.1.14. சேரமான் வஞ்சன்

2.1.15. சோழன் நலங்கிள்ளி

2.1.16. தகடூர் எறிந்த பெருஞ்சேரல் இரும்பொறை

2.1.17. தலையாலங்கானத்துச் செருவென்ற பாண்டியன் நெடுஞ்செழியன்

2.1.18. பல்யாகசாலை முதுகுடுமிப் பெருவழுதி

2.1.19. பல்யானைச் செல்கெழு குட்டுவன்

2.1.20. பாலை பாடிய பெருங்கடுங்கோ

2.1.21. யானைக்கட்சேய் மாந்தரஞ்சேரல் இரும்பொறை

என இம்மன்னர்களை வரிசைப்படுத்தலாம்.

### 2.1.1. ஆடுகோட்பாட்டுச் சேரலாதன்

ஆடுகோட்பாட்டுச் சேரலாதன், சேர அரச மரபில் தோன்றியவன். 'ஆதன்' இயற்பெயர். 'ஆடுகோட்பாட்டுச்சேரல்' சிறப்புப் பெயராகத் தெரிகிறது. ஆடற்கலையில் ஆர்வலன் என்பதால் இப்பெயர் பெற்றிருக்கலாம் எனவும் கூறப்படுகிறது. பகைப்புலத்தார் கடத்திச் சென்ற ஆடுகளை மீட்டுக் கொண்டு வந்தவன் ஆதலின் ஆடுகோட்பாட்டுச் சேரலாதன் எனச் சிறப்புப் பெயர் பெற்றான்.[5] தந்தை குடக்கோ சேரலாதன். தாய் வேளாவிக்கோமான் தேவி. இவனுடைய மரபு குறித்தும் வழிவந்தோர் குறித்தும் வேறு செய்திகள் காணப்படுகின்றன.

சேரர்க்கு மருமக்கள் தாயம் கூறுவோர்
இமயவரம்பன் நெடுஞ்சேரலாதனை
ஆடுகோட்பாட்டுச் சேரலாதன் மாமனாகவும்
வேளாவிக் கோமான் தந்தையாகவும்
அவன் தேவி தாயாகவும் கூறுவர்[6]

எனச் சங்க இலக்கியப் பொருட்களஞ்சியம் கூறுகிறது. இவன் முப்பத்தெட்டு ஆண்டுகள் அரசு புரிந்தான். இவனுடைய சிறப்புக்கள் குறித்துப் பதிற்றுப்பத்து,

செவ்வூன் தோன்றா வெண்டுவை முதிரை
வாலுள் வல்சி மழவர் மெய்ம் மறை
குடவர் கோவே கொடித்தே ரண்ணல்
வாரா ராயினும் இரவலர் வேண்டித்
தேரிற் றந்தவர்க் கார்பத னல்கும்
நகைசால் வாய்மொழி இசைசால் தோன்றல் (பதிற்.5:7-12)

எனக் கூறுகின்றது. இவனைக் காக்கைபாடினியார், நச்செள்ளையார் பதிற்றுப்பத்தின் ஆறாம் பத்தில் பாடியுள்ளனர். இவன் இரவலரைத் தேடிச் சென்று தேரில் அழைத்து வந்து பரிசில் வழங்கியுள்ளான்.

### 2.1.2. இமயவரம்பன் நெடுஞ்சேரலாதன்

இவன் சேரவேந்தன். இவன் இமயவரம்பன் என்றும் வழங்கப் பெறுகிறான். இமயம் வரை படையெடுத்துச் சென்று வெற்றி பெற்றதால் இமயவரம்பன் என அழைக்கப் பெற்றிருக்கின்றான். இவனுடைய பெற்றோர் உதியஞ்சேரல், வெளியன் வேண்மாள் நல்லினி என்போர் ஆவர். இவன் தம்பி

பல்யாகசாலை செல்கெழுகுட்டுவன். இம்மன்னன் யவன தேயத்து அரசர்களையும், ஆரிய மன்னர்களையும் வென்ற செய்தியைப் பதிற்றுப்பத்துக் கூறுகின்றது.

நயனில் வன்சொல் யவனர்ப் பிணித்து
நெய்தலைப் பெய்து கைபிற் கொளீஇ
அருவிலை நன்கலம் வயிரமொடு கொண்டு
பெருவிறல் மூதூர்த் தந்துபிறர்க் குதவி (பதிற்.பதி.2)

என்பது பதிற்றுப்பத்து. குமட்டூர்க்கண்ணனார், மாமூலனார், இளங்கோவடிகள் ஆகியோர் இவனைப் பாடியுள்ளனர். இவர்களுடைய பாடல்கள் முறையே அகநானூறு, பதிற்றுப்பத்து, சிலப்பதிகாரம் ஆகிய நூல்களில் இடம்பெற்றுள்ளன. சங்ககால அரசர்களைப் போலவே இவனிடத்திலும் கொடைச் சிறப்புக் காணப்படுகிறது.

### 2.1.3. இளஞ்சேட்சென்னி

இவன் சோழ மரபில் வந்தவன். நெய்தலங்கானல் என்ற ஊரில் பிறந்தவன். இவன் இயற்பெயர் இளஞ்சேட்சென்னி. இவனுக்குப் பல சிறப்புப் பெயர்கள் காணப்படுகின்றன. சோழன் செருப்பாழி எறிந்த இளஞ்சேட்சென்னி (புறம்.370), சோழன் உருவப்பஃறேர் இளஞ்சேட்சென்னி (புறம்.378), சோழன் நெய்தலங்கானல் இளஞ்சேட்சென்னி (புறம், 4, 266) என்பன புறநானூற்றில் இடம்பெற்றுள்ளன. இவன் தமிழகத்தில் மோரியர் படையெடுப்பு நிகழ்ந்த காலத்தில் வாழ்ந்தவன் என்றும், வம்ப வடுகரின் தலைகளை அறுத்து அவர் தங்கியிருந்த பாழியினை அழித்தவன் என்றும் கூறுவர்.[7]

இடையன் சேந்தன் கொற்றனார் இவனை அகநானூற்றில் பாடியுள்ளார் (அகம்.375). பரணர், பெருகுன்றூர் கிழார், ஊன்பொதி பசுங்குடையார் ஆகியோரும் இவனைப் புறநானூற்றில் பாடியுள்ளனர் (புறம்.4, 266, 370, 378, 10, 203).

இச்சோழன் போரில் உழந்த வருத்தத்தால் தான் நல்க இருந்த பரிசிலை நீட்டித்து தந்தான். அதனால் பரிசிலர் கூட்டத்துக்குள் சிறிது அசைவு உண்டாயிற்று[8]

என்று இவன் குறித்த வரலாற்றில் ஔவை சு.துரைசாமிபிள்ளை எழுதுகிறார். பரிசில் துறை (புறம்.10) என்னும் துறையிலேயே இவனைப் பற்றிய பாடல் பாடப்பட்டுள்ளது. இவனுடைய வெற்றிச் சிறப்புகளைப் புறப்பாடல் கூறுகிறது (புறம்.10, 203). கொடைச் சிறப்புக் கருதி இவன் 'எந்தை' என்றும் அழைக்கப்பட்டான் (புறம்.203).

### 2.1.4. இளஞ்சேரல் இரும்பொறை

சேர மரபினைச் சார்ந்தவன் இம்மன்னன். இளஞ்சேரல் இரும்பொறை என்று அழைக்கப் பெறுகிறான். இவனுடைய பெற்றோர் குட்டுவன் இரும்பொறை, வேண்மாள் அந்துவஞ்செள்ளை ஆவர். சோழ, பாண்டியருடன் போரிட்டு வென்றது இவனது சிறப்பு. குறிப்பாக, கோப்பெருஞ்சோழனையும், பழையன் மாறனையும் போரில் வெற்றி கண்டுள்ளது கூறத்தக்கது. மன்னர் பரம்பரையினன் என்ற போதிலும், வேதங்களை அறிந்த கல்விமானாக இவன் விளங்கினன்.

அருந்திறல் மரபின் பெருஞ்சதுக் கமர்ந்த
வெந்திறற் பூதரைத் தந்திவண் நிறீஇ
ஆய்ந்த மரபிற் சாந்தி வேட்டு (பதிற்.பதி.9)

என்பது பதிற்றுப்பத்து. இவனுக்கு வேதம் பற்றிய அனுபவ அறிவு இருந்ததைச் சிலப்பதிகாரம் குறிப்பிடுகின்றது.

சதுக்கப் பூதரை வஞ்சியுள் தந்து
மதுக்கொள் வேள்வி வேட்டோன்.[9]

என்பது அவன் வேள்வி செய்ததைக் கூறுவது. இவனைப் பெருங்குன்றூர்க் கிழார் 'பதிற்றுப்பத்து' ஒன்பதாம் பத்தில் பாடியுள்ளார். பொற்கலன்களை உருக்கித் தங்கமாக்கித் தந்தது இவனது கொடையின் தனித்தன்மையைக் காட்டுகின்றது.

### 2.1.5. உதியஞ்சேரலாதன்

உதியஞ்சேரலாதன் சேரர் மரபைச் சார்ந்தவன். இவன் பெருஞ்சோற்றுதியஞ்சேரலாதன் எனச் சிறப்புப் பெயர் பெற்றான். இவன் இமயவரம்பனின் தந்தை எனக் கூறப்படுகின்றான். பதிற்றுப்பத்தின் முதல்

*பத்துக் கிடைத்திலது. அஃது இம்மன்னனைப் பற்றிப் பாடியதாக இருக்கலாம் என்று சங்க இலக்கியப் பொருட்களஞ்சியம் குறிப்பிடுகின்றது.*[10] *பகைவரை வென்று அவர்களை விரட்டியதைக் குறிப்பிடும் வகையில், "நாடுகண் அகற்றிய உதியஞ்சேரல்" (அகம்.65) என்று அகநானூறு கூறுகின்றது. இவனுடைய பாடல்கள் அகநானூறு, நற்றிணை, புறநானூறு ஆகிய நூல்களில் இடம்பெற்றுள்ளன. மாமூலனார் (அகம்.65, 233), கோட்டம்பலத்துத் துஞ்சிய சேரமான் (அகம்.168), இளங்கீரனார் (நற்.113), முரஞ்சியூர் முடிநாகராயர் (புறம்.2) ஆகியோர் இவனைப் பாடியுள்ளனர். பாரதப் போர் நிகழ்ந்த போது இவன் இரு படையினருக்கும் பெருஞ்சோறு அளித்தமையை வரலாறு கூறுகின்றது. பாடிச் செல்லும் பரிசிலர் அனைவருக்கும் இவன் பரிசில் தந்தமை தனிச்சிறப்பாகும்.*

### 2.1.6. கடல்பிறக்கோட்டிய செங்குட்டுவன்

*கடல்பிறக்கோட்டிய செங்குட்டுவன் சேரர் பரம்பரையைச் சேர்ந்தவன். இவனுடைய இயற்பெயர் செங்குட்டுவன். கடல் பிறக்கோட்டிய என்பது அவன் பெயருடன் இணைந்த சிறப்புத் தொடர். இவன் கடல்பிறக்கோட்டிய செங்குட்டுவன் எனப் பெயர் பெற்றமைக்கு வரலாற்றுக் காரணங்களை ஆய்வாளர்கள் எடுத்துக் கூறியுள்ளனர். பெயர் பொருத்தத்தையும் விவாதித்துள்ளனர்.*

> இச்செங்குட்டுவன் கடலலைகளுக்கிடையே புரவியூர்ந்து சென்று அக்கடல் தீவுகளில் தங்கிக் குறும்புசெய்த பகைவர்களை வேலெறிந்து வென்றோட்டிய வெற்றிச் சிறப்பினாலேயே இச்சிறப்புப் பெயர்களைப் பெற்றானாகப் பலரும் கருதுவர். ஆயின், அது பொருந்துமோ? பொருந்துமெனின், அப்பகைவரைப் பற்றிய குறிப்பேதும் இப்பாடல்கள் எவற்றிலுமே இடம்பெறாதது ஏன் என்ற வினா எழும். எங்கு ஓட்டினான் எப்படி ஓட்டினான் என்பவற்றையே, இத்துணையும் விரித்துப் பாடியவர் யாரை ஓட்டினான் என்று கூற வேண்டும்; அதனைக் கூறாது விடுத்தாரெனக் கொள்ளலாகுமோ? இவற்றை விரித்துக் கூறினாலே அது விளக்குமென்று விடுத்தாரெனல் இசையுமோ? அதுவும் இசையுமாயின் மேல் கடல் தீவுகளில் தங்கிக் கடற்கொள்ளை செய்து வந்த கடம்பர்களை வென்ற இமையவரம்பனாகிய தந்தையைப் போலவே

இவனும் தன்காலத்து அப்பகைவர்களை வென்றோட்டினான் எனல் வேண்டும்[11]

*என்கிறார் வ.குருநாதன்.*

*இமயவரம்பன் நெடுஞ்சேரலாதன் இவனுடைய தந்தை பெயர். தாய் மணக்கிள்ளி என்பாள். வடபுலம் சென்று ஆரிய மன்னரை வென்று கல் கொணர்ந்து கண்ணகிக்குச் சிலை வைத்தான் என்பது வரலாறு. இவன் தன் மைத்துனரை எதிர்த்த மன்னர் பலரை வெற்றி கொண்டான். சங்ககாலப் புலவர்களுள் ஒருவராகிய பரணர் அகநானூறு (212), பதிற்றுப்பத்து (5 ஆம் பத்து), புறநானூறு (369) ஆகியவற்றில் இவனைச் சிறப்பித்துப் பாடியுள்ளார்.*

### 2.1.7. கரிகாற்பெருவளத்தான்

*கரிகாற் பெருவளத்தான் சோழ மரபினன். இவனுடைய இயற்பெயர் திருமாவளவன் என்பது. கரிகாற் சோழன் என்பது காரணப்பெயர். இப்பெயர் வந்ததற்குக் கதை ஒன்றும் கூறப்படுகிறது. இளவயதினனாய் இவன் இருந்தகாலை பகைவர்கள் மூட்டிய தீயிலிருந்து தப்பிய போது கால் கருகியதால் கரிகாலன் எனப் பெயர் பெற்றான்.[12] இவனுடைய தந்தை உருவப் பல்தேர் இளஞ்சேட்சென்னி எனப் பொருநராற்றுப்படை கூறுவதாக வ.குருநாதன் கூறுகிறார்.[13] அழுந்தூர் வேள் என்ற மன்னனின் மகள் இவனுடைய தாய் என்பது தொல்காப்பிய உரையால் அறியலாம்.[14] இவன் வெண்ணிப் பறந்தலையில் சேரரையும் பாண்டியரையும் வெற்றி கண்டது,*

. . . . . . . . . . . . .
. . . . . . . . . . . . .
. . . . . . . . . . . . .
. . . . . . . . . அலரே
காய்சின மொய்ம்பின் பெருபெயர்க் கரிகால்
ஆர்கலி நறவின் வெண்ணி வாயில்
சீர்கெழு மன்னர் மறலிய ஞாட்பின்
இமிழிசை முரசும் பொருகளத்து ஒழியப்
பதினொரு வேளிரொடு வேந்தர் சாய
மொய்வலி அறுத்த ஞான்றைத்

தொய்யா அழுந்தூர் ஆர்ப்பினும் பெரிதே (அகம்.246)

*என்று அகநானூற்றில் குறிப்பிடப்பட்டுள்ளது.*

*கரிகாலனுடைய வரலாற்றைக் குறிப்பிடும் வரலாற்று ஆசிரியர்கள் அனைவரும் இவனது வெற்றிச் சிறப்பைக் குறிப்பிட்டுச் செல்கின்றனர். குறிப்பாக இமயம் வரை சென்று மன்னர் பலரை வென்று வந்ததை அனைவரும் குறிக்கின்றனர். பட்டினப்பாலையில் கடியலூர் உருத்திரங்கண்ணனார் இவனது வெற்றியை,*

பல் ஒளியர் பண்பு ஒடுங்கத்
தொல் அருவாளர் தொழில் கேட்ப,
வடவர் வாட, குடவர் கூம்பத்
தென்னவன் திறல்கெடச் சீறி மன்னர்
மன்னெயில் கதுவும் மதனுடை நோன்றாள்
மாத்தானை மற மொய்ம்பிற
செங்கண்ணால் செயிர்த்து நோக்கிப்
புன் பொதுவர் வழி பொன்ற
இருங்கோ வேள் மருங்கு சாய (பட்.274-82)

*எனப் பாடியுள்ளார்.*

*இப்பாடலில் வரும் வடவர், குடவர், தென்னவன், அருவாளர் போன்றவை பகை மன்னர்களைக் குறிக்கின்றன. வடநாட்டு மன்னரும் வச்சிர நாடு, மகத நாடு, அவந்தி நாட்டு மன்னர்களும் இவனுக்கு அடிபணிந்து பரிசுகள் பலவற்றைத் தந்ததைச் சிலப்பதிகாரம் கூறுகிறது.*[15]

*பரிசு தருதலுக்கு இருந்த அரசியல் சமூக மதிப்பை* (Political Social value) *இது சுட்டுகிறது. முடத்தாமக்கண்ணியார், கடியலூர் உருத்திரங் கண்ணனார், கழாத்தலையர், வெண்ணிக்குயத்தியார், பரணர், மாமூலனார், இளங்கோவடிகள் ஆகியோர் பாடியுள்ளனர். இவர்களுடைய பாடல்கள் அகநானூறு, பட்டினப்பாலை, புறநானூறு, பொருநராற்றுப்படை ஆகிய நூல்களில் உள்ளன. இம்மன்னன் பிறர்க்குப் பரிசில் வழங்கியதும், இம்மன்னனுக்குப் பிறர் பரிசில் வழங்கியதும் வரலாற்றில் காணப்படுகின்றன.*

### 2.1.8. கருங்கையொள்வாள் பெரும்பெயர்வழுதி

*பாண்டிய அரச மரபைச் சார்ந்தவன் இம்மன்னன். 'வழுதி' என்ற பெயர் பாண்டியர்களைச் சுட்டுவதாகும். இவன் சோழன் கரிகாலன் காலத்தில் வாழ்ந்த பாண்டிய மன்னன். இவனுடைய பெயராகக் கருதப்படும் தொடர் புறநானூற்றில் இடம்பெற்றுள்ளது. 'கருங்கையொள்வாட் பெரும்பெயர் வழுதி' (புறம்.3) என்ற தொடரைக் கொண்டு இவன் பெயரும் இதுவென ஆசிரியர்கள் கருதுகின்றனர்.*[16]

> தன்பால் வரும் இரவலர் குறிப்பறிந்து அவர் வேண்டுவன நல்கும் பெருங்கொடை வள்ளல் என்றும் இதனால் இவனிடம் இரவலர் வந்தவண்ணமே இருப்பர் என்றும் கூறி இவ்வகையால் உண்டாகும் புகழினும் சொல் தவறாத வாய்மையால் உண்டாகும் புகழே மிகச் சிறந்தது. ஆதலால் 'நிலம் பெயரினும் நின்சொல் பெயரல்' என்றும் இப்பாட்டின்கண் ஆசிரியர் வற்புறுத்துகின்றார்[17]

*என்றும் இவனது தனிச்சிறப்பை உரையாசிரியர் கூறுகின்றார். புறநானூற்றில் இரும்பிடர்த் தலையார் இவனைப் பாடிய ஒரு பாடல் காணப்படுகிறது (புறம்.3). மன்னர் மரபில் கவுரியர் வழித்தோன்றல் என இவன் கூறப்படுகின்றான். கொடைச் சிறப்புச் சிறப்பித்துக் கூறப்படும் மன்னர்களுள் இவனும் ஒருவனாகக் கருதப்படுகின்றான். செய்யுளில், "தவிரா ஈகை கவுரியர் மருக" (புறம்.3) என இவனது கொடைப்புகழ் வெளிப்படையாகக் கூறப்பட்டுள்ளமை இவனது கொடைப்பண்பைக் காட்டும்.*

### 2.1.9. களங்காய்க்கண்ணி நார்முடிச்சேரல்

*களங்காய்க்கண்ணி நார்முடிச்சேரல், சேர மரபினன். பெயரின் இறுதியில் உள்ள "சேரல்" என்பது இவன் மரபினையுணர்த்தும்.*

> பகைவர்க்கு அஞ்சி ஒதுங்கியிருந்த சான்றோர்கள் ஒன்று கூடிக் களங்காயல் கண்ணியும் பனைநரால் முடியும் செய்து பதுமன் தேவியின் மகனை மன்னனாக்கி, 'சேரமான் களங்காய்கண்ணி நார்முடிச் சேரல்' என்றப் பெயரை வழங்கி முடிசூட்டிச் சிறப்பித்தனர்[18]

*என்று இவனுடைய பெயர் குறித்த வரலாற்றுத் தகவல் ஒன்றை அ.ஜம்புலிங்கம் தம் நூலில் குறிப்பிட்டுள்ளார். வரலாற்றில் நார்முடிச் சேரல்*

என்றே இவனை எழுதுகின்றனர். இமயவரம்பன் நெடுஞ்சேரலாதனின் மகன் இவன். வேளாவி கோப்பதுமன் தேவி என்பாள் இவன் தாய். "வண்டன்" என்ற மன்னனின் நற்குணங்களுடன் இவனுடைய நற்குணங்கள் ஒப்பிட்டுக் கூறப்பட்டுள்ளன.[19] இவன் நன்னன் என்பானுடன் செய்த போர் வரலாற்றில் சிறப்பாகக் குறிக்கப்படுகிறது. 'தன் நாட்டில் வறுமையால் தளர்ந்திருந்த குடிமக்களைச் சிறந்த ஒழுக்கத்துடன் வாழும் வண்ணம் இவன் நிலை நிறுத்தினான்' எனப் பதிற்றுப்பத்துக் கூறுகிறது (பதிற்.31, 32:13, 7). இவனைக் கல்லாடனார் (அகம்.199), காப்பியாற்றுக் காப்பியனார் (பதிற். பதி.4) ஆகிய இருவர் பாடியுள்ளனர். தம்மிடம் உள்ள பொருள்களை வேறுபாடின்றி மக்கள் யாவர்க்கும் வழங்கினான் என்று இவனது கொடைச் சிறப்புப் பேசப்படுகிறது.

## 2.1.10. குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவன்

கிள்ளிவளவன் சோழ மரபினைச் சார்ந்தவன். இவன் கரிகாலனின் பெயரன். கரிகாலனின் மகன் நலங்கிள்ளி. நலங்கிள்ளியின் மகனே குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவன். கரிகாற்சோழனின் பெயர் திருமாவளவன். இந்தப் பெயரின் அடிப்படையிலேயே கிள்ளிவளவன் பெயரிடப்பட்டதாகக் கூறுவர். அது பொருந்தாது எனச் சிலர் மறுக்கின்றனர்.[20] இம்மன்னன் இளமையில் அரியணை ஏறினான். இவன் தாயத்தார் இவனுடைய அரசு முறையை ஏற்றுக் கொள்ளவில்லை. இத்தருணத்தில் சேரன் செங்குட்டுவன் (தாய்மாமன்) உதவியால் அரியணையில் இவன் நிலைபெற்றான். உறையூரைத் தலைநகராகக் கொண்டு ஆண்டு வந்த சோழ அரசர்களில் இவன் சிறப்புற ஆட்சி செய்தவன் என்ற பெயர் உள்ளது. இவன் வைத்திருந்த யானைப்படை வலிமை வாய்ந்தது. அது காஞ்சி, தஞ்சை, இலங்கை ஆகிய பகுதிகளில் போர் செய்து வென்றிடத் துணையாய் இருந்தது என்ற இச்செய்தியை,

கச்சி ஒருகால் மிதியா ஒருகாலால்
தத்துநீர்த் தண்தஞ்சை தான்மிதியாய் - பிற்றையும்
ஈழம் ஒருகால் மிதியா வருமே நம்
கோழியர் கோக் கிள்ளிகளிறு.[21]

என்ற பாடலால் அறியலாம்.

*இவன் காலத்து வாழ்ந்த சிறுகுடிகிழான் பண்ணனிடம் நட்பு பூண்டு இருந்ததும், அவனைப் பற்றிப் பாடல் ஒன்று பாடி இருப்பதும் இவனது நட்புச் சிறப்பைப் புலப்படுத்துகின்றன.*

*சங்க இலக்கியத்தில் சிறப்பாகக் கூறத்தகும் பல கருத்துக்களில் பசியைப் பிணி என்றும், பசியைப் போக்கும் வள்ளல்களை 'மருத்துவன்' என்றும் இம்மன்னன் கூறியிருக்கும் கருத்து எண்ணத்தக்கது. பண்ணனை இவன் பாடிய பாடல் பண்ணனின் உள்ளத்தை வெளிப்படுத்துவதன்றி நல்லோரை மனமுவந்து போற்றும் இவனுடைய தனிப்பண்புகளையும் உணர்த்துவதாக உள்ளது.*

யான் வாழும் நாளும் பண்ணன் வாழிய!
பாணர் காண்கிவன் கடும்பின திடும்பை;
யாணர்ப் பழுமரம் புள் இமிழ்ந் தன்ன
ஊணொலி அரவந் தானும் கேட்கும்;
பொய்யா எழிலி பெய்விடம் நோக்கி
முட்டை கொண்டு வற்புலம் சேரும்
சிறுநுண் எறும்பின் சில்லொழுக்கு ஏய்ப்பச்
சோறுடைக் கையர் வீறுவீறு இயங்கும்
இருங்கிளைச் சிறார்க் காண்டும்; கண்டும்
மற்றும் மற்றும் வினவுதும் தெற்றெனப்;
பசிப்பிணி மருத்துவன் இல்லம்
அணித்தோ சேய்த்தோ கூறுமின், எமக்கே (புறம்.173)

*என்பது கிள்ளிவளவன் பாடிய பாடல் ஆகும். குளமுற்றம் என்னும் இடத்தில் நிகழ்ந்த போரொன்றில் இவன் இறந்தான் என்பதை இவன் பெயரிலுள்ள 'துஞ்சிய' என்னும் எச்சம் உணர்த்தும். இவனைப் பத்துக்கும் மேற்பட்ட புலவர்கள் பாடியுள்ளமை பரிசில் வழங்கலில் இவனது தனித்தன்மையைக் காட்டுகிறது.*

### 2.1.11. கோப்பெருஞ்சோழன்

கோப்பெருஞ்சோழன் சோழ மரபைச் சார்ந்தவன். இவனுடைய இயற்பெயர் பெருங்கோக்கிள்ளி எனப் பிசிராந்தையாரும், தேர்வண்கிள்ளி எனப் பொத்தியாரும் கூறுகின்றனர்.[22] பெற்றோர்கள் பற்றிய குறிப்புகள் கிடைத்தில. உறையூரைத் தலைநகராகக் கொண்டு ஆட்சி செய்த பலருள் இவன் குறிப்பிடத்தக்கவன். இவன் ஒரு சிறந்த தமிழ்ப் புலவன். சங்ககாலப் புலவர் வரிசையில் இடம்பெற்றிருப்பது இவன் தனிச்சிறப்பு. புலவர்களிடத்து நட்புக் காட்டியதில் மிகச் சிறந்தவனாக இம்மன்னன் வரலாற்றில் குறிக்கப் பெறுகிறான். மன்னர் வரலாற்றில், இவனுடைய மக்களே (பிள்ளைகள்) இவனை எதிர்த்ததாகக் குறிப்புண்டு. வடக்கிருத்தல் அன்றைய சமூகத்தில் உயர்ந்த பண்பாகக் கருதப்பட்டது. இம்மன்னனும் வடக்கிருந்தது இணைத்து எண்ணத்தக்கது. பாணர் பசிக்குப் பகைவன் (புறம்.212) என்பது போன்ற சிறப்புக்கள் இவனை வெளிப்படுத்துகின்றன.

### 2.1.12. செல்வக்கடுங்கோ வாழியாதன்

செல்வக்கடுங்கோ வாழியாதன் சேர மரபினைச் சார்ந்தவன். இஃது இவன் இயற்பெயர். சிறப்புப் பெயர் போலத் தோன்றினும் இதனை இயற்பெயர் என்றே குறிக்கின்றனர்.[23] சங்க இலக்கியப் பொருட்களஞ்சியம் இவனது சிறப்புப் பெயர்களைச் செல்வக்கோ, செல்வக்கோமான், சேரமான் கடுங்கோ வாழியாதன், சேரமான் சிக்கற் பள்ளித் துஞ்சிய செல்வக் கடுங்கோ வாழியாதன் எனக் குறிப்பிடுகின்றது. கடுமை என்ற சொல்லுக்கு வலிமை, மிகுதி போன்ற பொருள்கள் உள்ளன. இவற்றுள் வலிமை என்பதே இவன் பெயரின் தொடக்கத்திலுள்ள சொல்லிற்குப் பொருந்துகிறது. இவனுடைய தந்தை அந்துவஞ்சேரல்; தாய் பொறையன் பெருந்தேவி ஆவர். நாட்டின் எல்லையை விரிவுபடுத்தியது, பகைவர்களை வென்றது இவன் சிறப்புக்கள். நீதியும், ஒழுக்கமும் தவறாது இருந்தான் எனக் கபிலர், குண்டுகட் பாலியாதனார் இருவரும் இவனைப் பாடியுள்ளனர் (பதிற்.7 ஆம் பத்து, புறம்.8, 14, 387). இம்மன்னன் கபிலருக்குக் கொடுத்த கொடை தனிச்சிறப்புடையது. இவனுடைய ஆட்சிக் காலம் இருபத்தைந்தாண்டுகள் நடந்ததாகத் தெரிகிறது.

### 2.1.13. சேரமான் கோதை

*சேரமான் கோதை சேரமன்னர் குடியின் கிளை மரபினர். இவனைக் குட்டுவன் கோதை என்றும் அழைப்பர். இவனுடைய பெற்றோர் பற்றிய செய்தி கிடைத்திலது. சிலப்பதிகாரத்தில் குறிப்பிடும் வில்லவன் கோதையின் (சேரன் செங்குட்டுவனின் அமைச்சன்) வழிவந்தவன் இவன் என்று வரலாற்றுக் குறிப்புக் கூறுகின்றது.[24] இவனுடைய வீரச்சிறப்பில் தனிச்சிறப்பு என்று கூறப்படுகிறது. வஞ்சினம் கூறிய பகை மன்னர்கள் இவனை நினைத்தாலே புலியைக் கண்டதொப்ப அச்சம் அடைவர். குட்டுவன் கோதையினுடைய நாடு புலியிருக்கும் எனக் கருதி அஞ்சும் காட்டினைப் போல இருந்தது என்பது கருத்து. இவனை அகநானூற்றில் கணக்காயனார் மகனார் நக்கீரனார், கருவூர்க் கண்ணம்பாளனார் (93, 263), புறநானூற்றில் கோனாட்டு எறிச்சிலூர் மாடலன் மதுரைக் குமரனார் (54) ஆகியோர் பாடியுள்ளனர். பரிசில் பெறச் செல்லும் புலவர்கள் தடையில்லாமல் சென்று கண்டு வந்தனர் என்று இவனைப் பற்றிப் புறநானூறு பேசுகின்றது (புறம்.54).*

### 2.1.14. சேரமான் வஞ்சன்

*சேரமான் வஞ்சன் சேரர் பரம்பரையைச் சார்ந்தவன். வஞ்சன் என்பது இவன் இயற்பெயர். திருத்தாமனார் பாடலில் பாயற்கோ எனப் பாடப்பட்டிருக்கின்றது. இப்பெயர் பாயல் என்ற நாட்டை ஆண்டதன் காரணமாக வந்ததென்பர் (புறம்.398). அஞ்சன் என்பதும் இவனுடைய சிறப்புப் பெயர். இவனுடைய நாட்டின் இயற்கை அமைப்பு நாட்டிற்கு அரணாக இருப்பது சிறப்புடைத்தாகும். இத்தகைய அரணை அரசர்கள் உருவாக்கிக் கொண்டனர். அரசு ஆட்சிமுறையில் 'அரண்' ஓர் அங்கம் எனச் சான்றோர் கூறியிருப்பது கருதத்தக்கது.*

> நாட்டிற்கு உறுப்பாய் அடங்குமாயின் பகைவரால் தொலைவு வந்துழி
> அது தனக்கும் அரசன் தனக்கும் ஏமமாதல் சிறப்புப் பற்றிப் பிறிதோர்
> அங்கமாக ஓதப்பட்ட அரண்.[25]

*என ஒரு நாட்டின் அரண் இன்றியமையாததாய் அமைவது குறித்துப் பரிமேலழகர் கூறுகிறார். இவனைப் பற்றித் திருத்தாமனார் பாடிய பாடல்*

ஒன்று காணப்படுகின்றது (புறம்.398). இவன் பரிசிலர் தகுதியறியும் நுட்பத்தினனாக விளங்கினான்.

### 2.1.15. சோழன் நலங்கிள்ளி

நலங்கிள்ளி சோழ மரபைச் சார்ந்தவன். நலங்கிள்ளி என்பது இவன் இயற்பெயர். சோழன் நலங்கிள்ளி என வரலாற்றில் குறிக்கப் பெறுகிறான். சேட்சென்னி நலங்கிள்ளி என்றும் இவனை அழைக்கின்றனர். இவன் சோழ மரபினுள் ஒருவனான பஃறடக்கைப் பெருவிறற்கிள்ளியின் மகன் என்று கூறப்படுகிறது. சேரர், பாண்டியர் இருவரையும் எதிர்த்து அரசியல் செய்தவன் இவன். இவன் காலத்து அரசர் யாவரும் இவனிடத்து அச்சம் கொண்டிருந்ததாக வரலாறு கூறுகிறது. இவனைக் கோவூர்கிழார், உறையூர் முதுகண்ணன் சாத்தனார், ஆலத்தூர் கிழார் ஆகிய புலவர்கள் பாடியுள்ளனர். இம்மூவரும் புறநானூற்றில் இவனைப் பதினான்கு பாடல்களில் பாடியுள்ளனர். வலியுடைய அரசன் என்ற போதிலும் இரவலர்க்குப் பொருள் கொடுப்பதில் விருப்பம் உள்ளவன் எனத் தெரிகிறது.

### 2.1.16. தகடூர் எறிந்த பெருஞ்சேரல் இரும்பொறை

சேரர் மரபினைச் சார்ந்தவன் இம்மன்னன். இயற்பெயர் பெருஞ்சேரல் இரும்பொறை. தகடூரை வெற்றி கொண்டமையால் தகடூர் எறிந்த பெருஞ்சேரல் இரும்பொறை எனச் சிறப்புப் பெயர் பெற்றான். இவன் தந்தை சேரமான் செல்வக்கடுங்கோ வாழியாதன் என்றும் வேளாவிக் கோமானாகிய பதுமனின் மகள் இவன் தாய் எனவும் அறியப்படுகின்றனர். அதியமானுடன் சேர்ந்து வந்த சோழ, பாண்டியரை இவன் வென்றதாக வரலாறு கூறுகிறது. இவனது முரசு கட்டிலில் அயர்ந்துறங்கிய மோசிகீரனாரைச் சினத்தல் இன்றி அவர்நிலை உணர்ந்து போற்றியது மன்னர் வரலாற்றில் குறிப்பிடத்தக்க நிகழ்வாகும். இம்மன்னனை அரிசில்கிழாரும், மோசிகீரனாரும் முறையே பதிற்றுப்பத்து (எட்டாம் பத்து), புறநானூறு (பா.50) ஆகிய நூல்களில் பாடியுள்ளனர். இவனுடைய ஆட்சியே பரிசில் பொருளாக இருந்ததை வரலாறு சுட்டுகிறது. இவன் பதினேழு ஆண்டுகள் ஆட்சிபுரிந்தான். இறுதியில் துறவற வாழ்க்கையை மேற்கொண்டான்.

## 2.1.17. தலையாலங்கானத்துச் செருவென்ற பாண்டியன் நெடுஞ்செழியன்

*பாண்டியர் மரபைச் சார்ந்தவன் இவன். இயற்பெயர் நெடுஞ்செழியன். தலையாலங்கானத்துப் போரில் பெற்ற வெற்றி காரணமாகத் "தலையாலங்கானத்துச் செருவென்ற பாண்டியன் நெடுஞ்செழியன்" என அழைக்கப்பட்டான். பசும்பூண்பாண்டியன், அடுபோர்ச் செழியன், இயல்தேர்ச் செழியன், கைவண் செழியன், கொடித் தேர்ச் செழியன், கொற்றச் செழியன், மறப்போர்ச் செழியன் என்ற தொடர்களால் புலவர்கள் இவனை வழங்கியுள்ளனர்.*[26] *சித்திர மாடத்துத் துஞ்சிய நன்மாறனின் புதல்வன் தலையாலங்கானத்துச் செருவென்ற பாண்டியன் நெடுஞ்செழியன் என அ.ஜம்புலிங்கம் கூறுகிறார்.*[27] *இளம் வயதில் அரியணை ஏறிய பாண்டிய மன்னன் இவன் என்பது குறிப்பிடத்தக்கது.*

*'தலையாலங்கானம்' என்ற இடத்தில் நடந்த போரில் ஏழு மன்னர்களை வெற்றி கொண்டான் என்பது இவனது தனிச்சிறப்பு. தலையாலங்கானத்துப் போர், புலவர் பலரால் பாடப்பட்டிருப்பது போரின் தனித்தன்மை. இப்போரில் தோற்ற, பகைமன்னர்களின் பெயரை நக்கீரர்,*

கொய்சுவற் புரவிக் கொடித்தேர்ச் செழியன்
ஆலங்கானத்து அகன் தலை சிவப்பச்
சேரல், செம்பியன், சினங்கெழு திதியன்,
போர்வல் யானைப் பொலம்பூண் எழினி,
நார்அரி நறவின் எருமை யூரன்,
தேம்கமழ் அகலத்துப் புலர்ந்த சாந்தின்
இருங்கோ வேண்மான், இயல்தேர்ப் பொருநன் என்று
எழுவர் நல்வலம் அடங்க, ஒருபகல்
முரசொடு வெண்குடை அகப்படுத்து உரைசெலக்
கொன்றுகளம் வேட்ட ஞான்றை
வென்றிகொள் வீரர் ஆர்ப்பினும் பெரிதே (அகம்.36)

*எனக் குறிப்பிட்டிருப்பது தோற்றவர்களும் வலுவுள்ள மன்னர்கள் என்பதைச் சுட்டிக் காட்டுகிறது. நெடுஞ்செழியனின் பெருஞ்சிறப்பை எடுத்துக் கூறும் வழிமுறை இது. வரலாறெழுதுவோர்* (Historians) *இவனைச் சற்றொப்பப்*

புலவர் இருபதின்மர் பாடியுள்ளனர் எனக் குறிக்கின்றனர். பரிசிலின் சிறப்பை உணர்த்த எண்ணிய இம்மன்னன் தாம் பாடிய பாடலில் "ஈஎன இரத்தல் இழிந்தன்று; அதன்எதிர், ஈயேன் என்றல் அதனினும் இழிந்தன்று" (புறம்.204) எனக் குறிப்பிட்டுள்ளான். இதனால் கொடைச் சிறப்பை மிக மதித்த மன்னர்கள் வரிசையில் இவன் அடங்குகிறான். அரசாட்சி, கல்வி, புலமை, மக்கள் நலன், வெற்றிகள் இவற்றில் யாவரினும் வேறுபட்டு இருந்தமையால் இத்துணைப் புலவர்களால் பாடப்பெற்றான் என உணரலாம்.

### 2.1.18. பல்யாகசாலை முதுகுடுமிப் பெருவழுதி

பல்யாகசாலை முதுகுடுமிப் பெருவழுதி பாண்டிய மரபினன். இவன் இயற்பெயர் முதுகுடுமி எனத் தெரிகிறது. குடுமிக்கோமான் பல்சாலை முதுகுடுமி, பல்யாக முதுகுடுமிப் பெருவழுதி என்பன இவன் சிறப்புப் பெயர்களாம். புற வாழ்க்கையாகிய வீரம், புகழ், கொடை ஆகியவற்றில் சிறந்துள்ள மற்ற மன்னர்களைப் பாடுங்கால் அவர்களைப் பல்யாக சாலை முதுகுடுமிப் பெருவழுதியோடு ஒப்பிட்டுப் பாடுகிறார் மாங்குடி மருதனார். இவன் அக்காலத்து மன்னர் தம் செயற்பாடுகளுள் சிறப்பாகக் கருதப்பட்ட யாகங்கள் பலவற்றைச் செய்தான் என்பது இவன் பெயரில் உள்ள அடைமொழியால் தெரியவருகிறது. இவன் செய்த வேள்விகளின் எண்ணிக்கையைக் கூடச் செப்பேடுகள் கூறுகின்றன. இவன் "வேள்வியாயிரம் இயற்றிப் புகழ்பெற்றவன்"[28] என்று போற்றப்படுகிறான்.

வரலாற்றுச் சான்றாவணங்களுள் ஒன்றாகக் கருதப்படும் செப்பேடுகள் இவனைப் "பாண்டிய இராசாதிஇராசன்" எனக் கூறுகின்றன.[29] இவனைக் காரிகிழார், நெட்டிமையார், நெடும்பல்லியத்தனார், மாங்குடி மருதனார் ஆகியோர் பாடியுள்ளனர். மேலும் இவனைப் பாடிய புலவர் நால்வரும் இவனது கொடைச் சிறப்பையும் பாடியுள்ளனர். இம்மன்னனின் வீரமும் கொடைச்சிறப்பும் சங்க இலக்கியச் செய்யுட்களால் அறியவருகின்றன. தொடக்ககாலப் பாண்டியர்களுள் இம்மன்னன் குறிப்பிடத்தக்கவன்.

### 2.1.19. பல்யானைச் செல்கெழு குட்டுவன்

*பல்யானைச் செல்கெழுகுட்டுவன் சேரர் மரபினன். குட்டுவன் என்பது இவன் இயற்பெயர். பல்யானைச் செல்கெழு குட்டுவன் என்பது இவன் பல யானைகளைக் கொண்ட படை வைத்திருந்தமையைக் குறித்துச் சிறப்பாக அழைக்கப்படுவது. இவன் பெற்றோர் பெருஞ்சோற்றுதியஞ்சேரல், வேண்மாள் மகள் நல்லினி ஆவர். இவனுடைய தமையன் இமையவரம்பன். சேர நாட்டின் பகுதியான "உம்பற்காடு" இவன் ஆட்சியின்கீழ் வென்றெடுக்கப்பட்டது. "அகப்பா" என்னும் அரணைத் தீக்கொளுத்தியது; தம் குலத்து மூத்தோரை ஆட்சியில் பங்குபெறச் செய்தது, கொற்றவைக்கு விழா நடத்தியது, பாலைக் கௌதமனாரின் விருப்பத்திற்கிணங்கச் செயலாற்றியது, நெடும்பாரதாயனார் என்ற தம் ஆசானின் முன் துறவு பூண்டது ஆகியவை இவன் தனிச் சிறப்புக்களாம். இவனைப் பாலைக்கௌதமனார் சிறப்பித்துப் பாடியுள்ளார் (பதிற்றுப்பத்து, 3 ஆம் பத்து). சான்றோர், கலைஞர்கள்(பாணர் முதலியோர்), பொதுமக்கள் போன்றோர் இவனால் வளம்பெற்று வாழ்ந்தவர்கள். இவனாட்சிக் காலம் முழுதும் பல்வேறு கொடைகளைச் செய்து சிறப்புற்றிருக்கிறான்.*

### 2.1.20. பாலை பாடிய பெருங்கடுங்கோ

*பாலை பாடிய பெருங்கடுங்கோ சேர மரபினைச் சார்ந்தவன். பெருங்கடுங்கோ என்பதே இவன் இயற்பெயர். புலவர்களைப் போலப் பாடல் இயற்றியதாலும் பாலைத் திணையைச் சிறப்பித்துப் பாடியதாலும் இப்பெயர் பெற்றான் என்பர்.[30] இவன் மொழிப்புலமை பெயரிலேயே இணைக்கப்பட்டிருக்கின்றது. "பேய்மகள் இளவெயினி" இவனைப் பாடிய பாடல் ஒன்று புறநானூற்றில் (11) இடம்பெற்றுள்ளது. இரவலர்க்குப் பொருள் வழங்காமையும் தலைவியைப் பிரிவதும் துயரம் மிகுந்தவை என இவன் பாடிய பாடல் குறுந்தொகையுள் காணப்படுகிறது (137). கல்வியிற் சிறந்த புலவர் குழாத்துள் வைத்தெண்ணப்படும் அரசன் இவன். இவன்மீது பாடப்பெற்ற பாடல்களும் மிகச்சிலவே எனத் தெரிகிறது. இச்சில பாடல்களிலும் இம்மன்னனின் கொடைச் சிறப்பு விளங்குகின்றது.*

### 2.1.21. யானைக்கட்சேய் மாந்தரஞ்சேரல் இரும்பொறை

யானைக்கட்சேய் மாந்தரஞ்சேரல் இரும்பொறை சேரமரபினைச் சார்ந்தவன். இவன் இயற்பெயர் மாந்தரன். சேரருள் இரும்பொறை மரபினன். யானைக்கட்சேய் மாந்தரஞ்சேரல் இரும்பொறை எனச் சிறப்புப் பெயரால் அழைக்கப் பெற்றான். இவன் அந்துவஞ்சேரலின் மகன், செல்வக்கடுங்கோவின் தம்பி என்ற குறிப்புகள் இவன் வரலாற்றில் உண்டு.[31] கபிலர் இறந்த நிலையில், இவனைப் புகழ்ந்து பாட அவர் இல்லையென வருந்தியுள்ளான். இதனை,

செறுத்த செய்யுள் செய்செந் நாவின்
வெறுத்த கேள்வி விளங்குபுகழ்க் கபிலன்
இன்றுள னாயின் நன்றுமன் (புறம்.53)

என்ற பாடல் உணர்த்தும்.

ஐங்குறுநூறு தொகுக்கக் கூடலூர் கிழார்க்கு இவன் உதவியுள்ளான். இவனைக் குறுங்கோழியூர்கிழார், கூடலூர்கிழார் ஆகிய இருவரும் பாடியுள்ளனர் (புறம்.17, 20, 22, 229). தம்பால் விரும்பி வருவோர்க்குப் பரிசில் வழங்கக் கூடியவனாக இவன் விளங்குகின்றான். பழம்புலவர் கபிலரை இம்மன்னன் சிறப்பித்துப் பாடியிருப்பது பலராலும் பாராட்டப்படுகிறது (புறம்.53).

### 2.2. குறுநில மன்னர்கள்

மன்னர்கள் ஆண்ட நிலப்பகுதிகளை ஒப்பிடுங்கால் குறுநில மன்னர்கள் அரசாண்ட நிலப்பகுதி மிகச்சிறியதாகும். பேரரசர்களிடம் இருந்து போரிலோ அல்லது வேறு சூழல்களிலோ பெற்ற சிறு நிலப்பகுதியில் இவர்கள் ஆண்டு வந்துள்ளனர். சிலர் வழிவழியாகத் தமக்குரிய சிறு நிலப்பகுதியை ஆண்டு வந்தவர்களாகவும் காணப்படுகின்றனர். குறுநில மன்னர்கள் என்ற தொடர் காரணப்பெயராய் அமைகிறது. குறுநிலங்களை ஆண்டிருந்த மன்னர்களாக இவர்கள் கருதப்பட்டனர்.[32] குறுநில மன்னர்கள் பேரரசர்களின் ஆட்சியில் அவர்களுக்குக் கீழ், படைத்தலைவராய் இருந்தும் குறிப்பிட்ட நிலப்பகுதியை ஆண்டும் வந்தனர் என்றும் கூறப்படுகின்றது.[33] பேரரசர்களைப் போல்

படைமுதலான அரசு அங்கங்கள் மிகப் பெரிய அளவில் இருப்பதில்லை. தனிப்பட்ட வகையில் போர்க் குணங்களும், வலிமை, வள்ளல் தன்மை போன்றவையும் இவர்களிடம் காணப்படுகின்றன.

களம்புக லோம்புமின் றெவ்விர் போரெதிர்ந்
தெம்முளு முளனொரு பொருநன் வைகல்
எண்டேர் செய்யுந் தச்சன்
திங்கள் வலித்த காலன் னோனே (புறம்.87)

இச்செய்யுள் அதியமான் நெடுமான் அஞ்சியின் வலிமையையும், எளிமையையும் கூறுகின்றது. குறுநில மன்னரைச் சிற்றரசன் எனக் குறிக்கின்றனர். குறுநில மன்னர்கள் சேர, சோழ, பாண்டியர் வழியில் வந்தவர்களாகவும் வள்ளல்களாகவும் காணப்படுகின்றனர். இவர்கள் அகுதை, அதியமான், ஆதனுங்கன், கடிய நெடுவேட்டுவன், கண்டீரக்கோப்பெருநள்ளி, கரும்பனூர் கிழான், குமணன், சோழிய ஏனாதி திருக்குட்டுவன், தாமான் தோன்றிக்கோமான், தொண்டைமான் இளந்திரையன், நல்லியக்கோடன், நன்னன், நாஞ்சில் வள்ளுவன், பிட்டங்கொற்றன், பொகுட்டெழினி, பொறையாற்று கிழான், மல்லிகிழான் காரியாதி, மலையமான் திருமுடிக்காரி, மூவன், வல்வில் ஓரி, வில்லியாதன் ஆகியோர் இவ்வரிசையில் அடங்குவர். இவர்கள் பரிசில் வாழ்க்கையில் உறவுடைய மன்னர்களாகக் காணப்படுகின்றனர்.

### குலமரபு (அரசமரபு)

இவர்கள் சேர, சோழ, பாண்டியர் என்னும் மூவேந்தர் மரபைச் சார்ந்தவர்களாகக் காணப்படுகின்றனர். இம்மூவேந்தரும் தனித்தனிக் குலமரபைப் பின்பற்றி வந்துள்ளனர்.

### சேர, சோழ, பாண்டிய மரபினர்

அதியமான் நெடுமான் அஞ்சி, குமணன், சோழிய ஏனாதி திருக்குட்டுவன், தாமான் தோன்றிக்கோன், பிட்டங்கொற்றன், பொகுட்டு எழினி, மல்லிகிழான் காரியாதி, மலையமான் திருமுடிக்காரி, மூவன், வல்வில் ஓரி ஆகியோர் சேரர் மரபினைச் சார்ந்தவர்களாவர். அகுதை,

ஆதனுங்கன், கம்பனூர் கிழான், தொண்டைமான் இளந்திரையன், நல்லியக்கோடன், நன்னன், பொறையாற்றுகிழான், வில்லியாதன் ஆகியோர் சோழர் மரபினைச் சார்ந்தவர்கள். கடிய நெடுவேட்டுவன், கண்டீரக்கோப்பெருநள்ளி, நாஞ்சில் வள்ளுவன் ஆகியோர் பாண்டியர் மரபினைச் சார்ந்தவர்கள். இவருள் சேரர் எண்ணிக்கை குறிப்பிடத்தக்கதாக உள்ளது.

**பெயர் அமைந்த முறை**

குறுநில மன்னர்களின் பெயர்கள் இயற்பெயர், மன்னர் மரபைச் சுட்டும் பெயர், ஒன்றுக்கு மேற்பட்ட பெயர், நாட்டுடன் இணைந்த பெயர், ஊருடன் இணைந்த பெயர், மலையுடன் இணைந்த பெயர், வழக்காற்றுப் பெயர், சிறப்புப் பெயர் எனப் பலவகையாகப் பிரிகின்றன. வழக்காற்றுப் பெயர் என்பது வாய்மொழியாக வழங்கப்படுவதாகும். கதைகளின் அடிப்படையில் இப்பெயர்கள் ஏற்பட்டிருக்கின்றன. செயல்கள் பண்புகள் குறித்து வந்த பெயர்கள் சிறப்புப் பெயர்களாகின்றன. இப்பெயர்களை மேலும் நுட்பமாக நோக்கி ஆராய இடம் இருக்கின்றது. ஆய்வுக்குக் கிடைத்த பெயர்களை நோக்கிய பொழுதே இப்பொருட்களை உணர்த்தும் அளவில் தெளிவாக உள்ளன. இம்முறையில் இப்பெயர்கள் கீழே வரிசைப்படுத்தப்படுகின்றன.

அகுதை

அதிகன்

ஆதனுங்கன்

குமணன்

மூவன்

அதியமான் நெடுமான் அஞ்சி

நல்லியக்கோடன்

நன்னன்

பொகுட்டு எழினி

வில்லியாதன்

கடிய நெடுவேட்டுவன்

சோழிய ஏனாதி திருக்குட்டுவன்

மலையமான் திருமுடிக்காரி

கண்டீரக் கோப்பெருநள்ளி

நாஞ்சில் வள்ளுவன்

கரும்பனூர் கிழான்

பிட்டங் கொற்றன்

பொறையாற்றுக் கிழான்

மல்லிகிழான் காரியாதி

தாமான் தோன்றிக் கோன்

தொண்டைமான் இளந்திரையன்

வல்வில் ஓரி

மேற்குறித்த பெயர்களுள் அகுதை, அதிகன், ஆதனுங்கன், குமணன், மூவன் ஆகிய பெயர்கள் சிறப்புத் தொடர்கள் ஏதுமின்றித் தனிப்பெயர்களாகக் காணப்படுகின்றன. அதியமான் நெடுமான் அஞ்சி, நல்லியக்கோடன், நன்னன் உதியன், பொகுட்டு எழினி, வில்லியாதன் என்ற பெயர்கள் மன்னர் மரபைச் சுட்டுவனவாய் அமைந்துள்ளன. கடிய நெடுவேட்டுவன், சோழிய ஏனாதி திருக்குட்டுவன், மலையமான் திருமுடிக்காரி என்போர்க்கு இப்பெயர்களும், வேறு பெயர்களும் இருந்ததாக வரலாற்று ஆசிரியர்கள் குறிப்பிடுகின்றனர். கண்டீரக் கோப்பெருநள்ளி, நாஞ்சில் வள்ளுவன் இவ்விரு பெயர்களிலும் கண்டீரம், நாஞ்சில் ஆகிய இரண்டு நாடுகளுடன் பெயர்கள் இடம்பெற்றுள்ளன. கரும்பனூர் கிழான், பிட்டங்கொற்றன், பொறையாற்றுக் கிழான், மல்லிகிழான் காரியாதி ஆகிய இப்பெயர்களுக்கு முன்னால் மன்னர்களின் ஊர் சொல்லப்பட்டுள்ளது. தாமான் தோன்றிக் கோன் இப்பெயரில் தோன்றி என்னும் மலையின் பெயர் இடம்பெற்றுள்ளது. தொண்டைமான் இளந்திரையன் என்ற பெயர் வழக்காற்றுப் பெயராக உள்ளது. வழக்காற்றுப் பெயர் என்பது பெயர் உருவானதற்குரிய கதைப் பின்புலத்தோடு அமைவது.[34] வல்வில் ஓரி என்பது அவனுடைய போர்த்திறனின் சிறப்புக் கூறும் பெயராகக் காணப்படுகிறது.

**குறுநில மன்னர் ஆளுகை**

*ஆளுகை என்பது மன்னர்கள் ஆண்ட இடப்பகுதியைக் குறிக்கிறது. ஒவ்வொரு மன்னருக்கும் அரசாட்சிக்குட்பட்ட பகுதி* (Kingdom) *உண்டு. மன்னர்களுடைய நில எல்லை அடிப்படையில் அவர்களின் தனிச்சிறப்பைக் கூறமுடிகிறது. இந்நிலையில் அரசர்களின் நாட்டெல்லையைக் குறிப்பது தேவையானதாகிறது. குறுநில மன்னர்கள் அனைவரும் சிறுசிறு பகுதிகளை ஆண்டவர்கள். குறுநில மன்னர் என்ற பெயரும் இதை உறுதி செய்யும். ஒவ்வொரு மன்னரும் தனித்தனி இடத்தை ஆண்டுள்ளனர்.*

**அகுதை**

*அகுதை என்னும் மன்னன் கூடல் நகரிலிருந்து அதனைச் சுற்றியுள்ள பகுதியை ஆண்டான். கூடல் என்னும் பெயர் மதுரையைக் குறிப்பதன்று. இக்கூடல் புறப்பாட்டில் 'குண்டுநீர் வரைப்பின் கூடல்' (புறம்.347) என்று சிறப்புடன் குறிக்கப்பட்டு உள்ளது.*

**அதிகன்**

*அதிகன் என்பான் பாண்டி நாட்டிலுள்ள வேங்கை மலை சுற்றியுள்ள பகுதியை ஆண்டவன். இவன் ஆண்ட மலையை "வேங்கை வெற்பின் விரிந்த கோங்கு" எனப் புறநானூறு பாடுகின்றது (பா.336).*

**ஆதனுங்கன்**

*ஆதனுங்கன் தமிழகத்தின் வடபாலுள்ள வேங்கட நாட்டை ஆண்டவன். வேங்கட நாடு என்பது இன்றைய திருப்பதி சுற்றிய பகுதியைக் குறிக்கக் கூடும்.*

**குமணன்**

*குமணன் பொதினிமலைத் தொடர்களுள் முதிர மலையையும் அதனைச் சூழ்ந்த நாட்டையும் ஆண்டு வந்த குறுநில மன்னன். சங்க இலக்கியங்களில் குமணன் "முதிரத்துக்கிழவ", "முதிரத்தோனே", "முதிரத்துக்கிழவன்" என ஆட்சி செய்த மலைப்பெயரோடு அழைக்கப்பட்டுள்ளான் (புறம்.158, 160, 163).*

**மூவன்**

*மூவன் சேரநாட்டின் தெற்கில் மேலைக் கடலோரத்துக் குறுநிலம் ஒன்றை ஆண்டு வந்தவனாக அறியப்படுகின்றான். இவன் நாட்டுப்பகுதி சிற்றூர்களைக் கொண்டதாக உள்ளது.*

**அதியமான் நெடுமான் அஞ்சி**

*அதியமான் நெடுமான் அஞ்சி தகடூரைத் தலைநகராகக் கொண்ட குதிரைமலை உள்ளிட்ட நாட்டை ஆண்டு வந்தவன். குதிரைமுகம் போன்ற மலையை அதியமானுடன் தொடர்புபடுத்தி "நெடுநெறிக் குதிரைக் கூர்வேல் அஞ்சி" எனப் புலவர் பாடியுள்ளனர் (அகம்.372). அதியமானுக்குப் பின் அவன் மகனாகக் கருதப்படும் பொகுட்டு எழினி தகடூரைச் சூழ்ந்த நிலப்பகுதியை ஆண்டுவந்துள்ளான்.*

**நல்லியக்கோடன்**

*நல்லியக்கோடன் "ஓய்மானாடு" என்னும் சிறுநிலப்பகுதியை ஆண்டவன். இவ்வோய்மாநாடு வேறு பெயர்களாலும் குறிக்கப்பட்டுள்ளது. அப்பெயர்கள் மாவிலங்கை, இலங்கை என்பதாம். இவன் ஆண்ட இந்நிலப்பகுதியை வில்லியாதன் என்பானும் இவனுக்குப் பின் ஆண்டிருக்கிறான்.*

**நன்னன்**

*நன்னன் கொண்கான நாடு என்னும் குறுநிலப்பகுதியை ஆண்டு வந்தவன். கொண்கானம் பிற்காலத்தில் கொங்கணம் என மருவி அழைக்கப்பட்டது. இலக்கியங்களில் 'கொண்கான நாடு' எனவே வழங்கப்படுகிறது (நற்.391).*

**கடிய நெடுவேட்டுவன்**

*கடிய நெடுவேட்டுவன், கோடைமலையை ஆண்டு வந்த குறுநில மன்னன். இப்பகுதி இன்றைய கொடைக்கானல் ஆகும்.*

**மலையமான் திருமுடிக்காரி, சோழிய ஏனாதி திருக்குட்டுவன்**

*மலையமான் திருமுடிக்காரி சேரநாட்டில் எல்லைக்குட்பட்ட பகுதியை ஆண்டவன். தென்பெண்ணையாற்றங்கரையிலுள்ள திருக்கோவிலூரைச் சுற்றியுள்ள பகுதியை ஆட்சி செய்தமை அறியமுடிகின்றது. இவனுக்குப் பின் இந்நிலப்பகுதியை இவன் மகன் சோழிய ஏனாதி திருக்குட்டுவன் ஆட்சி செய்துள்ளான்.*

**கண்டீரக் கோப்பெருநள்ளி**

*கண்டீரக் கோப்பெருநள்ளி தோட்டியென்ற மலையைச் சூழ்ந்த நாட்டை ஆண்டவன். இவன் ஆண்ட நிலப்பகுதி ''கண்டீர நாடு'' ஆகும்.*

**நாஞ்சில் வள்ளுவன்**

*நாஞ்சில் வள்ளுவன் நாஞ்சில் நாட்டை ஆண்டவன். தமிழகத்தின் தெற்கிலுள்ள பொதிகை மலைத் தொடர்களுள் ஒன்றான நாஞ்சில் மலையும், அதனைச் சூழ்ந்த நாஞ்சில் நாடும் இக்குறுநில மன்னன் ஆட்சி செய்த பகுதியாகும். நாஞ்சில் மலையை மருந்துவாழ் மலையென்று கூறும் வழக்கம் உண்டு.*

**கரும்பனூர் கிழான்**

*கரும்பனூர் கிழான் தமிழகத்தின் வடபாலிலுள்ள வேங்கட மலையை ஒட்டிய குறுநிலத்தை ஆட்சிசெய்தவன். ''ஒலிவெள் அருவி வேங்கட நாடன் … கரும்பனூர் காதல் மகனே'' என்னும் புறப்பாடலால் வேங்கட மலையைச் சார்ந்தது கரும்பனூர் என்பதை அறியமுடிகின்றது (பா.381).*

**பிட்டங் கொற்றன்**

*பிட்டங்கொற்றன் சேரநாட்டின் சிறுபகுதியை ஆண்டவன். அங்குள்ள குதிரைமலை சூழ்ந்த நிலப் பகுதிக்குக் குறுநில மன்னனாய் விளங்கியவன். இவன் ''ஊராக்குதிரைக் கிழவ'' என்னும் புறநானூற்றுத் தொடர் இவன் ஆண்ட நாட்டைக் குறிக்கிறது (பா.168). அகநானூற்றில்,*

பொய்யா வாய்வாள் புனைகழற் பிட்டன்
மைதவழ் உயர்சிமைக்குதிரை கவாஅன்
அகலறை நெடுஞ்சுனைத் துவலையின் மலர்ந்த
தண்கமழ் நீலம் (அகம்.143)

*இவனுடைய பெயரும் நாடும் இப்பாடலில் குறிப்பிடப்பட்டுள்ளன.*

**பொறையாற்று கிழான்**

*'பொறையாற்று கிழான்' கீழைக் கடற்கரை நகரான பொறையாற்றையும் அதனைச் சூழ்ந்த குறுநிலத்தையும் ஆட்சி செய்தவன்.*

**மல்லிகிழான் காரியாதி**

*'மல்லிகிழான் காரியாதி' குடநாட்டை ஆண்டுவந்தவன். குடநாடு சேரநாட்டிற்கு உட்பட்ட சிறுநாடுகளுள் ஒன்றாகும். இதனை வேறுசில குறுநில மன்னர்களும் ஆண்டுவந்துள்ளனர். "பெரும்பெயர் ஆதி பிணங்கரில் குடநாடு" என்ற வரிகளால் மல்லிகிழான் காரியாதி குடநாட்டை ஆண்டு வந்தமையை அறியமுடிகிறது (புறம்.179).*

**தாமான் தோன்றிக் கோன்**

*தாமான் தோன்றிக்கோன் தோன்றியென்னும் மலையையும் அதனைச் சூழ்ந்த நாட்டையும் ஆண்ட குறுநில மன்னன் ஆவான்.*

**தொண்டைமான் இளந்திரையன்**

*தொண்டைமான் இளந்திரையன் தமிழகத்து வடவெல்லையாக விளங்கிய வேங்கட மலைக்கு உட்பட்ட தெற்கில் அமைந்த நிலத்தை ஆண்டு வந்தவனாய் அறியவருகிறான்.*

**வல்வில் ஓரி**

*வல்வில் ஓரி கொங்கு நாட்டிலுள்ள கொல்லி மலையை ஆட்சி செய்தவன். இதனை "வல்வில் ஓரிக் கொல்லிக் குடவரை" (குறுந்.100),*

"கொல்லிப் பொருநன்" (புறம்.152), "கொல்லியாண்ட வல்வில் ஓரி" (புறம்.158) என்ற வரிகளால் அறியமுடிகிறது.

**தனிச்சிறப்புகள் - குறுநில மன்னன்**

குறுநில மன்னர்களைப் பொருத்தவரையில் நில எல்லைக்கும் அரசியல் சூழலுக்கும் பொருளியல் தன்மைக்கும் ஏற்றாற்போல் அவர்களுடைய தனிச்சிறப்புகள் குறுகிய அளவில் அமைந்துள்ளன. சிலருக்குக் கொடைத்தன்மை மட்டுமே சிறப்பாக அமைந்துள்ளது. போர் முதலானவை பேரரசர்கள் படையெடுப்பிலிருந்து வேறுபட்டுக் காணப்படுகின்றன.

**அகுதை**

'அகுதை'யைக் கபிலர் (புறம்.347), கல்லாடனார் (அகம்.113), பரணர் (அகம்.76, 208; குறுந்.298), மருதம் பாடிய இளங்கடுங்கோ (அகம்.96), வெள்ளெருக்கிலையார் (புறம்.233) ஆகியோர் பாடியுள்ளனர். இவனுடைய படைச்சிறப்புக் குறித்த சங்க இலக்கியப் பதிவுகள் சில காணப்படுகின்றன. அகநானூறு (208) "வசைவிடக் கடக்கும் வயங்குபெருந்தானை அகுதை" எனக் கூறுகிறது. புறநானூறு (347) "மறப்போரகுதை" என இவனைக் குறிக்கிறது. தனிச்சிறப்புக்களுள் ஒன்றாக இவனுடைய ஈகைத்திறமும் கூறப்படுகிறது.

**அதிகன்**

அதிகனை இடைக்கழிநாட்டு நல்லூர் நத்தத்தனார் (சிறு.103), பரணர் (அகம்.162; குறுந்.393) ஆகிய இருவர் பாடியுள்ளனர். தலையாலங்கானத்துச் செறுவென்ற பாண்டியன் நெடுஞ்செழியன் ஆட்சியில் இவன் படைத்தலைவனாய் இருந்தான். இரவலர்க்குப் பொருளாசை தீர வழங்கியவன் இவன் (அகம்.212).

**ஆதனுங்கன்**

ஆதனுங்கன் கள்ளில் ஆத்திரையர் என்ற புலவர் ஒருவரால் இரு பாடல்களில் பாடப்பட்டுள்ளான் (புறம்.175, 389). ஒரு மன்னரைப் பாடுங்கால்

*அவர்தம் வழித்தோன்றல்களையும் சிறப்புக்களையும் கூறிப் புகழ்ந்துரைத்தல் என்னும் தமிழ்க் கவிதையியல் மரபில் ஆதனுங்கன் சிறப்பிக்கப்படுகிறான். அதாவது இவனது சிறப்பைக் கூறிப் புகழ்ந்து பாடியுள்ளது அறியத்தக்கது. பசித்துயர் போக்கியமையும் காட்சிக்கு எளியனாயிருந்தமையும் இவனுடைய சிறப்புக்கள்.*

**குமணன்**

*குமணனை அரிசில் கிழார் (பதிற்.71), பரணர் (அகம்.135), பெருஞ்சித்திரனார் (புறம்.158-163), பெருந்தலைச்சாத்தனார் (புறம்.164, 165) ஆகியோர் பாடியுள்ளனர். சாத்தனார் அவன் தங்கியிருந்த காட்டிற்குச் சென்று அவன் பண்புள்ளத்தைக் கண்டறிந்து பாடியிருப்பது குறிப்பிடத்தக்கது. தன் உயிரையே தரும் அளவிற்குக் கொடைப்பண்புடையவன் இவன்.*

**மூவன்**

*குமணனைப் பாடிய பெருந்தலைச் சாத்தனார் (புறம்.209) மூவனையும் பாடியிருக்கின்றார். இவனை நன்னாட்டுப் பொருநன் என்றும், வாள் மேம்படுனன், பெருவரை மார்பினன் என்றும் இவர் குறித்திருப்பது நாட்டுச் சிறப்பையும், போர்ச் சிறப்பையும் உணர்த்தும். இவன் கொடையில் முதன்மையாய் இருந்தவன் என்றும் கூறப்படுவது அறியத்தக்கது (புறம்.209).*

**நல்லியக்கோடன்**

*நல்லியக்கோடனை நல்லூர் நத்தத்தனார் (சிறுபாணாற்றுப்படை முழுதும்), புறத்திணை நன்னாகனார் (புறம்.176, 376) ஆகியோர் பாடியுள்ளனர். இவன் செய்ந்நன்றியறிதல், சிற்றினமின்மை போன்ற நற்பண்புகளை உடையவன் என்பதைச் சிறுபாணாற்றுப்படை கூறுவதால் அறியமுடிகிறது (207). இவனுடைய போர்ச் சிறப்பும், இவன் வேற்படையில் சிறந்தவன் என்பதும் இந்நூல் எடுத்துரைக்கின்ற செய்திகளாகும். கைவண்மையிற் சிறந்தவனென்று இவன் போற்றப்பெறுகிறான்.*

**நன்னன் உதியன்**

கொண்கானங் கிழான் நன்னனைக் கல்லாடனார் (அகம்.209), காப்பியாற்றுக் காப்பியனார் (பதிற்.3 ஆம் பத்து, 40, பதிற்.பதி.7), குடவாயிற்கீரத்தனார் (அகம்.44), பரணர் (அகம்.142, 152, 208, 356, 396; குறுந்.73, 292; நற்.279), பாலைபாடிய பெருங்கடுங்கோ (நற்.391), பெருங்குன்றூர்க் கிழார் (பதிற்.9 ஆம் பத்து, 88), பெருந்தலைச் சாத்தனார் (புறம்.151), மாங்குடி மருதனார் (மது.618), மாமூலனார் (அகம்.15, 349), முள்ளியூர்ப்பூதியார்(அகம்.173), மோசிகீரனார் (அகம்.392) ஆகியோர் பாடியுள்ளனர். மாங்குடி மருதனார் போன்ற புலவர் பலர் பாடியிருப்பது இவனுடைய சிறப்புக்களை எடுத்துக் கூறப் பொருந்தும் சான்றுகளாகும். இவனுடைய போர்ச் சிறப்புக்கள் அகப்பாடல்களில் இவனைப் பாடிய புலவர்களால் எடுத்துக் கூறப்பட்டுள்ளன.

விரியுளைப் பொலிந்த பரியுடை நன்மான்
வேந்தர் ஒட்டிய ஏந்துவேல் நன்னன்
கூந்தல் முரற்சியின் கொடிதே (நற்.270)

என்று பரணர் கூறியிருப்பது இவனது போர் வெற்றியை விளக்கும். "வேந்தர் ஓட்டிய ஏந்துவேல் நன்னன்" என்ற தொடர் இவனது வீரத்தைக் குறிக்கின்றது. பதினொருவர் புலவர்கள் இவனைப் பாடியிருப்பதால் போர்த்திறமும், கொடைத் திறமும் உடையவன் என்பது தெரிகிறது.

**அதியமான் நெடுமானஞ்சி**

அதியமானை ஒளவையார் (குறுந்.91; நற்.381; புறம்.87, 103, 206, 315, 392), பரணர் (அகம்.372), பெருஞ்சித்திரனார் (புறம்.208) ஆகிய மூவரும் பாடியுள்ளனர். அதியமான் சேரப் பேரரசர்களின் ஆளுகைக்குட்பட்ட ஒரு குறுநில மன்னன். எனினும் பேரரசர்களாகிய சேர வேந்தர்களுக்கு அடிபணியாது எதிர்த்தே வந்திருக்கின்றான்.[35] களங்காய்க்கண்ணி நார்முடிச்சேரல் என்ற பேரரசனுக்கும் இவனுக்கும் பெரும் போர் நிகழ்ந்துள்ளது[36] என்பதால் மேற்சொன்ன கருத்து உறுதிப்படுத்தப் படுகிறது.

*இவன் குறுநில மன்னனாயினும் போர்த் திறமும் வலிமையும் உடையவன் என்பதை,*

களம்புகல் ஓம்புமின் தெவ்விர் போர் எதிர்ந்து
எம்முளும் உளனொரு பொருநன்; வைகல்
எண்டேர் செய்யும் தச்சன்
திங்கள் வலித்த காலன் னோனே (புறம்.87)

*என்ற பாடலில் 'எம்முளும் உளனொரு பொருநன்' என்பது குறுநிலமன்னன் என்பதையும், 'திங்கள் வலித்த காலன்னோனே' என்ற தொடர் அவனது வலிமையையும், "பொருநன்" என்பது வீரர்க்குரிய சிறப்புப் பெயரையும் குறிப்பன. புலவர் யாவர்க்கும் இவன் பசிபோக்கியது சிறப்பாகக் கூறப்படுகிறது.*

### அதியமான் பொகுட்டெழினி

*பொகுட்டெழினி அதியமானின் மகன். அதியமானின் படைத்தலைவனாக இருந்தவன். இவனைப் பற்றியும் ஔவையார் (புறம்.96, 102, 392) பாடியுள்ளார். இளமைக் காலத்திலேயே அரசியலில் ஈடுபட்டுத் தம் தந்தை காலத்தில் படையெடுத்துப் போர் செய்துள்ளான். இவனது போர்ச் சிறப்பைப் பாடும் ஔவையார் ஈகைப் பண்பினையும் எடுத்துச் சிறப்பிக்கின்றார்.*

### ஓய்மான் வில்லியாதன்

*புறத்திணை நன்னாகனார் நல்லியக்கோடனை மட்டுமல்லாமல் அவன் வழித் தோன்றலாகிய வில்லியாதனையும் தம் பாடலில் (புறம்.376, 379) பாடியுள்ளார். நல்லியக்கோடனை மட்டும் பாடி வேறு யாரையும் பாடாது இருந்த நன்னாகனார் இவனைப் பாடியதாகக் கூறுவது இவன்மீது அவர் கொண்டுள்ள மதிப்பைக் காட்டுகிறது. தாய்போல் வழங்கும் உள்ளம் உடையவன் எனக் கூறப்பெறுகிறான் இவன்.*

**கடிய நெடுவேட்டுவன்**

*சிறப்புடைய மன்னர் பலரைப் பாடிய பெருந்தலைச் சாத்தனார் இவனைப் பாடியுள்ளார் (அகம்.13, புறம்.205). பகைவர்கள் அஞ்சி அவனிடத்து வந்தால் அவர்களை ஏற்றுக் கொள்வான்.*[37] *இவனுடைய வெற்றியில் இவனது காலாட்படை தனிச்சிறப்பாகக் கூறப்படுகிறது. "தாளுளந் தபுத்த வாண்மிகு தானை" (புறம்.205) எனப்பட்டது. இவன் அரச மரபில் வந்த பாண்டியனுக்குப் படைத் தலைவனாய் இருந்துள்ளான். அரச நடைமுறைகளில் கொடை வழங்குதல் இவனிடத்திலும் காணப்படுகிறது.*

**சோழிய ஏனாதி திருக்குட்டுவன்**

*சோழிய ஏனாதி திருக்குட்டுவனை மாறோக்கத்து நப்பசலையார் (புறம்.174), கோனாட்டு எறிச்சலூர் மாடலன் மதுரைக்குமரனார் (புறம்.394) ஆகிய இருவரும் பாடியுள்ளனர். இக்குறுநில மன்னன் சோழன் கிள்ளிவளவனுக்குத் துணையாய் நின்று கிள்ளிவளவன் தாயத்தாருக்கு எதிராகப் போரிட்டு வென்றான். மாறோக்கத்து நப்பசலையார், முன்னோர்களைப் பாடும் மரபில் நின்று இவன் தந்தையின் சிறப்பைப் பாடுகின்றார். அதாவது அரச மரபில் தந்தையின் இடத்தை இவன் நிரப்பினான். அப்புலவர் இவனை,*

கவலை நெஞ்சத்து அவலந் தீர,
நீ தோன்றி னையே - நிரைத்தார் அண்ணல் (புறம்.174)

*எனப் பாடுகின்றார். குறுநில மன்னர்களின் பொதுவான கொடைப் பண்பினை இவனும் பெற்றிருக்கிறான்.*

**மலையமான் திருமுடிக்காரி**

*மலையமான் திருமுடிக்காரியை அம்மூவனார் (அகம்.35), இடைக்கழி நாட்டு நல்லூர் நத்தத்தனார் (சிறு.95), கபிலர் (குறுந்.312; நற்.77, 320; புறம்.121-124), கல்லாடனார் (அகம்.209), மாறோக்கத்து நப்பசலையார் (புறம்.126) ஆகிய ஐவரும் பாடியுள்ளனர். சேர மரபினனான இவன் சோழன் இராசசூயம் வேட்ட பெருநற்கிள்ளிக்குப் படைத்துணை செய்தான். பின்னர் சேரர்க்கும் சோழர்க்கும் நடந்த போரில் இவன் இயல்பாகச் சேரர் பக்கம் இருந்ததாக*

*வரலாறு கூறுகிறது. இவன் கடையெழு வள்ளல்களுள் ஒருவன். கொடைத்திறம் உடைய குறுநிலத்தாருள் இவனும் சிறப்புடையவன்.*

**கண்டீரக் கோப்பெரு நள்ளி**

*கண்டீரக் கோப்பெருநள்ளியைக் கபிலர் (அகம்.238), காக்கைப் பாடினியார் நச்செள்ளையார் (குறுந்.210), பெருஞ்சித்திரனார் (புறம்.158), வன்பரணர் (புறம்.148, 149, 150) ஆகிய நால்வரும் பாடியுள்ளனர். இப்புலவர்கள் அனைவரும் இவன் கொடைச் சிறப்பையே எடுத்தியம்புகின்றனர்.*

**நாஞ்சில் வள்ளுவன்**

*நாஞ்சில் வள்ளுவனை ஒருசிறைப் பெரியனார் (புறம்.137), ஔவையார் (புறம்.140), கதப்பிள்ளையார் (புறம்.380), மருதநில நாகனார் (புறம்.138, 139) ஆகிய நான்கு புலவர்கள் பாடியுள்ளனர். இவனை, 'தென்னவர் வயமறவன்' (புறம்.380) எனப் பாடியிருப்பதால் இவன் வீரச்சிறப்புத் தெரிகிறது. நண்பர்களைப் போற்றியும், பகைவர்களை எதிர்த்தும் புலவர்களை வரவேற்றும் அரசாண்டான் என்பது குறிப்பு. மிகச்சிறந்த ஈகை மேம்பாடு வாய்ந்தவனாக இவன் கூறப்பெறுகிறான்.*

**பிட்டங்கொற்றன்**

*பிட்டங்கொற்றனை ஆலம்பேரி சாத்தனார் (அகம்.143), உறையூர் மருத்துவன் தாமோதரனார் (புறம்.170), கருவூர்க் கதப்பிள்ளைச் சாத்தனார் (புறம்.168), காவிரிப்பூம்பட்டினத்துக்காரிக் கண்ணனார் (புறம்.169, 171), மருதனிள நாகனார் (அகம்.77), வடமவண்ணக்கண் தாமோதரனார் (புறம்.172) ஆகிய புலவர்கள் அறுவர் பாடியுள்ளனர். இவன் சேரர் ஆட்சியில் படைத் தலைவனாக இருந்தான். இவன் கொடைத்தன்மை பலராலும் சிறப்பித்துப் பாடப்பெற்றுள்ளது.*

**பொறையாற்று கிழான் நற்றேர்ப் பெரியன்**

*பொறையாற்று கிழானை உலோச்சனார் (நற்.131), கல்லாடனார் (புறம்.391) ஆகிய இருவர் பாடியுள்ளனர். வேளிர்க்குல மன்னன் திதியனுக்கும், குறுநில மன்னன் அன்னியென்பானுக்கும் இடையே நடைபெற்ற போரில் அன்னிக்குத் துணையாக நின்றான். இப்போர்க்களத்தில் திதியனது காவல் மரத்தை வெட்டினான் என்று சங்கச் செய்யுள் கூறுகின்றது. கல்லாடனார் இவன் கொடைத்திறனைச் சிறப்பாகப் பாடியுள்ளார்.*

**கரும்பனூர் கிழான்**

*கரும்பனூர் கிழானை நன்னாகனார் (புறம்.381, 384) தம் பாடல் இரண்டனுள் பாடியுள்ளார். அறவழியே நடப்பவன் என இவன் சுட்டப்பட்டுள்ளான். இதில் அவன் கொடைத்திறன் குறிப்பாகக் காட்டப்பட்டுள்ளது.*

**மல்லிகிழான் காரியாதி**

*மல்லிகிழான் காரியாதியை ஆவூர் மூலங்கிழார் (புறம்.177) தம் பாடல் ஒன்றில் பாடியுள்ளார். இவன் ஊர்ச் சிறப்பைக் கூறுவதன் மூலம் இம்மன்னனின் பெருமையை அறியமுடிகிறது. அரசர்களுக்கே உரிய கொடைத் தன்மையுடன் இக்குறுநில மன்னனும் இடம்பெறுகின்றான்.*

**தாமான் தோன்றிக் கோன்**

*தாமான் தோன்றிக்கோனை ஐயூர் முடவனார் (புறம்.399) ஒரு பாடலில் பாடியுள்ளார். இவன் ஊர்ச் சிறப்பையும், கொடைச் சிறப்பையும் ஒரு சேர இப்புலவர் பாடியுள்ளார். இவனது கொடைச் சிறப்புப் பொதுத் தன்மையாகச் சுட்டப்பட்டுள்ளது.*

**தொண்டைமான் இளந்திரையன்**

*தொண்டைமான் இளந்திரையனை ஔவையார் (புறம்.95), கடியலூர் உருத்திரங்கண்ணனார் (பெரும்பாணாற்றுப்படை, காட்டூர் கிழார் மகனார் கண்ணனாரும் (அகம்.85) ஆகிய மூவரும் பாடியுள்ளனர். இவன் நற்றிணையில்*

மூன்று பாடல்களும், புறநானூற்றில் ஒரு பாடலும் பாடியுள்ளான். இவனது பாடல் (புறம்.185) வழி அரசியல் அறிவினை அறியமுடிகிறது. புலமைத் திறனும் ஆட்சித் திறனும் உடைய மன்னனாக இவன் விளங்கியுள்ளான். இம்மன்னனது சிறப்புக் குறித்த செய்திகள் சிலவே கிடைக்கின்றன. இவன் புலவர்களைப் பெரிதும் போற்றிப் பொருள் வழங்கியமை தனிச்சிறப்பாகும்.

**வல்வில் ஓரி**

வல்வில் ஓரியை இடைக்கழிநாட்டு நல்லூர் நத்தத்தனார் (சிறு.111), கபிலர் (குறுந்.100, நற்.320), கல்லாடனார் (அகம்.209), கழைதின் யானையார் (புறம்.204), நப்பாலத்தனார் (நற்.52), பரணர் (அகம்.208; குறுந்.199; நற்.6, 265; புறம்.153, 152), பெருஞ்சித்திரனார் (புறம்.158) ஆகிய எழுவர் பாடியுள்ளனர். இவன் வேட்டையாடுதலில் வல்லவன். பரணர் இவன் வேட்டைத் தொழிலை வியந்து பாடுகின்றார். சேர மரபினனாயினும் அதியமானோடு துணையாகச் சென்று பெருஞ்சேரல் இரும்பொறையுடன் (சேரன்) போர் செய்தான். இவனுடைய கொடைத்தன்மையும் புலவர்களால் பாடப்பெற்றுள்ளது. வள்ளல்களுள் ஒருவனாக இவன் பாராட்டப்பட்டுள்ளான்.

## 2.3. வேளிர்

வேளிர் என்னும் மரபினர் குறுநில மன்னர்களாகத் திகழ்ந்துள்ளனர். பெருங்கதையைக் "கொங்கு வேளிர் மாக்கதை" என்றும் குறிப்பர். "வேளிர்" என்பார் ஒரு குறிப்பிட்ட அரச மரபினராகத் தெரிகின்றனர். சேர, சோழ, பாண்டியர் என்ற பேரரசர்களில் சிலரும் வேளிருடன் இணைந்து தங்களை வேளிர் மரபினராக அழைத்துக் கொண்டனர். பழமையான மரபிலிருந்து கிளைத்துக் கொண்ட குறுநில மன்னர்களே "வேளிர்" என்று அழைக்கப்படுகின்றனர். ஆய் அண்டிரன், ஆய் எயினன், இளவெளிமான், திதியன், நன்னன் சேய் நன்னன், பேகன், வேள் எவ்வி, வேள் பாரி ஆகியோர் பரிசில் வாழ்க்கையுடன் தொடர்புடையவர்களாகக் காணப்படுகின்றனர். "வேளிர்" - வேள் என்னும் சொல்லடியாகப் பிறந்ததாகத் தெரிகிறது. 'வேள்' தலைமை சான்றவன் என்னும் பொருள்படுவதோர் சொல்லாகும். முருகவேள், தமிழவேள் என்னும் சொற்கள் தமிழ் வழக்காறுகளாம்.

**வேளிர் குல மரபு**

*வேளிர் மரபில் வரும் குறுநில மன்னர்கள் அனைவரும் வேளிர் என்றழைக்கப்படும் எண்மரும் சேர, சோழ, பாண்டிய மரபிலிருந்து வந்ததாகத் தெரிகிறது. ஆய் எயினன், இளவெளிமான், பேகன் ஆகிய மூவரும் சேர மரபினைச் சார்ந்தவர்கள். திதியன், நன்னன்சேய் நன்னன் ஆகிய இருவரும் சோழ மரபு சார்ந்தவர்கள். ஆய் அண்டிரன், பாரிவேள் ஆகியோர் பாண்டிய மரபைச் சார்ந்தவர்கள். வேளிர் எண்ணிக்கை பற்றி ஆய்விற்குப் பயன்படும் வகையில் சங்க இலக்கியங்களில் சில தொடர்கள் காணப்படுகின்றன. “பதினொரு வேளிர் ...” (அகம்.246), “ஈரேழு வேளிர் ...” (அகம்.135) எனக் கூறப்படும் தொடர்கள் எண்ணத்தக்கவை. இவை காலத்திற்குக் காலம் மாறுபட்டிருக்கலாம்.*

**வேளிர் பெயர்கள்**

*ஆய் அண்டிரன், இளவெளிமான் ஆகிய இருவரின் பெயர்களும் அடை இல்லாமல் இடம்பெற்றுள்ளன. “நன்னன் சேய் நன்னன்” என்பானின் பெயர் தந்தை பெயருடன் இணைக்கப்பட்டுள்ளது. “வெளியன் வேண்மான் ஆய் எயினன்” என்ற பெயரில் வரும் ‘வெளியம்’ என்பது ஊர்ப்பெயர்.[38] பொதியிற் செல்வன் திதியன் என்பது ஆட்சி செய்த பகுதியான பொதியமலை இடத்தோடு சேர்ந்து வந்துள்ளது.*

*வையாவிக்கோப்பெரும் பேகன் என்ற பெயரில் உள்ள ‘வையாவி’ மரபைக் குறிப்பதாகும். இப்பெயர் மரபுப்பெயருடன் இணைந்த பெயராக உள்ளது. வேள் பாரி, வேள் எவ்வி என்ற இரு பெயரும் மரபை அடையாகக் கொண்டு வந்த பெயர்களாகும். இவ்வாறு வேளிர் பெயர்கள் குறித்த சில குறிப்புக்கள் வரலாற்றில் காணக்கிடைக்கின்றன.*

**வேளிர் ஆண்டபகுதி**

*வேளிர் மன்னர்கள் ஆண்ட நிலப்பகுதியைப் பொருத்த வரையில் பெரும் பகுதியினர் தனித்தனி நிலப்பகுதியினை ஆண்டு வந்துள்ளனர். சிலர் குறிப்பிட்ட ஒரு பகுதியிலேயே ஆட்சி செலுத்தியுள்ளனர்.*

**ஆய் அண்டிரன், திதியன்**

*ஆய் அண்டிரன், திதியன் இருவரும் முன் பின்னாகப் பொதியமலையை ஆண்டு வந்துள்ளனர். பொதிய மலைப்பகுதி மேற்குத் தொடர்ச்சி மலையின் தொடக்கம் ஆகும். "பொதிகை மலை" என இதனைக் கூறும் வழக்கம் உண்டு. "ஆய் மலைதவழ் பொதியில்" என்னும் தொடரால் இம்மலை ஆய் என்னும் வள்ளலுக்குரியது என ஆய்வாளர் கருதுகின்றனர்.[39] அகநானூற்றில் "பொதியிற் செல்வன்" (அகம்.25) என வரும் தொடர் இச்செய்தியினைக் குறிப்பதாகக் கருதப்படுகிறது. சங்க இலக்கிய உரையாசிரியர் சிலர் இவ்வாறு கருதுகின்றனர்.*

**ஆய் எயினன்**

*ஆய் எயினன் "வெளியம்" என்ற ஊரையும், இதனை அடுத்துள்ள "வாகை" என்ற ஊரையும் தன் ஆட்சிக்குரியதாகக் கொண்டிருந்தான் (புறம்.351).*

**இளவெளிமான்**

*இளவெளிமான் என்ற பெயரில் வரும் வெளி என்பது ஊரைக் குறிக்கின்றது. ஊர்ப்பெயருடன் இயற்பெயர் இணைந்துள்ள பெயர் இது.*

**நன்னன் சேய் நன்னன்**

*நன்னன் சேய் நன்னன் பல்குன்றக் கோட்டத்துச் செங்கண்மாவில் இருந்து ஆட்சி புரிந்துள்ளான். இவன் பல குன்றங்களைக் கொண்ட நாட்டை ஆட்சி செய்தமையைக் "குன்று சூழ் இருக்கை நாடு கிழவோனே" (மலை.583) என்ற தொடரால் அறியமுடிகிறது.*

**பேகன்**

*'வையாவிக் கோப்பெரும் பேகன்' என்று பேகன் அழைக்கப் பெறுகிறான். 'பேகன்' என்று கூறப்படும் இவன் பெயரில் உள்ள "வையாவி" எனும் அடை அப்படிப்பட்டதோர் ஊரைக் குறிப்பதாகக் கூறப்படுகிறது. இந்த*

ஊரைக் குறிப்பிடும் ஆய்வாளர்கள், ''ஆவிநன்குடி உள்ளிட்ட பழநிமலை நாட்டிற்கு வைகாவூர் நாடென்ற பெயர் வழக்கத்தைப் பிற்காலத்தில் காண்கிறோம்''[40] என்று குறிப்பிடுகின்றனர்.

### வேள் எவ்வி

''வேள் எவ்வி'' சோழ நாட்டில் கீழைக் கடற்கரை சார்ந்த ''மிழலைக் கூற்றம்'' என்னும் பகுதியை ஆட்சி செய்தவன். நீடூர் கிழவோன் (அகம்.266), எவ்வி நீழல் (அகம்.366) என்னும் பெயர்களும் இவனைக் குறிக்கின்றன. இதனால் நீடூர், நீழல் என்ற நிலப்பகுதிகளும் இவன் ஆட்சிக்குரியன எனத் தெரிகிறது.

### வேள் பாரி

பறம்பு மலையையும், அதனைச் சூழ்ந்த முந்நூறு ஊர்களும், வேள்பாரியின் நாடு என்று வரலாற்று ஆசிரியர்கள் கூறுகின்றனர். ''முந்நூறு ஊர்த்தே தண் பறம்பு நன்னாடு'' (புறம்.110) என்று பறம்புமலை சார்ந்த நாட்டுப்பகுதி இவனுடையது எனக் கூறப்பட்டிருக்கின்றது.

### தனிச்சிறப்பு

தனிச்சிறப்பு என்ற அடிப்படையில் ஊர்ச்சிறப்பு, கொடைச்சிறப்பு, போர்ச் சிறப்பு ஆகியவை பெரும்பாலோர்க்குக் காணப்படுகின்றன. ஆய் அண்டிரன், நன்னன் சேய் நன்னன், வேள் எவ்வி, வேள் பாரி இவர்களுடைய ஊர்ச் சிறப்பை இலக்கியங்கள் எடுத்துக் கூறுகின்றன. இவர்களின் போர் வலிமையும் எடுத்துரைக்கப்படுகின்றன. ஆற்றல், வலிமை, கொடைத்திறன் ஆகியவை இம்மன்னர்களின் தனிச்சிறப்புக்களாக எண்ணப்படுகின்றன.

### ஆய் அண்டிரன்

ஆய் அண்டிரனைப் பதின்மர் பாடியுள்ளனர். அவருள் ஒருவர் பெயர் கிடைத்திலது (பாடல் உள்ளது, நற்.167). இடைக்கழிநாட்டு நல்லூர் நத்தத்தனார் (சிறு.95-96), உமட்டூர்க் கிழார் மகனார் பரங்கொற்றனார்

(அகம்.69), உறையூர் ஏணிச் சேரி முடமோசியார் (புறம்.127-135, 241, 374, 375), காரிக்கண்ணனார் (நற்.237), குட்டுவன் கீரனார் (புறம்.240), துறையூர் ஓடைக்கிழார் (புறம்.136), பரணர் (அகம்.152, 198), பெருஞ்சித்திரனார் (புறம்.158), மோசிகீரனார் (குறுந்.84) ஆகிய புலவர்கள் ஆய்அண்டிரனைச் சங்க இலக்கியங்களில் பாடியுள்ளனர். கொங்கு நாட்டுப் பகுதியில் வாழ்ந்த கொங்கர்கள் எனும் குறுநில மன்னர் சிலரை இவன் வென்றடக்கிய செய்தியை அறியமுடிகிறது. "கொங்கர்க் குடகடலோட்டிய ஞான்றைத் தலைப்பெயர்த் திட்ட வேலினும் பலவே" என்பது புறநானூறு (150). பொதியமலை இவன் நாட்டின் பாதுகாப்பு எல்லையாக இருந்தது எனக் கூறப்படுகிறது. குறுநில மன்னர் வரலாற்றில் இவன் கொடைச்சிறப்பு சங்க இலக்கியங்களில் சுட்டப்பட்டுள்ளது.

### ஆய் எயினன்

ஆய் எயினனைப் பரணர் (அகம்.148, 181, 208, 392, 142), மதுரைப் படைமங்க மன்னியார் (புறம்.351) ஆகிய புலவர் இருவர் பாடியுள்ளனர். இவனுடைய நண்பனான குறுநில மன்னன் (புன்னாட்டு மன்னன்) ஒருவனுக்குப் போரில் இவன் உதவி செய்தான். கற்றவர்களுக்கு வழங்குவதில் விருப்பமுடையவனாக இருந்த இவன் பறவைகள் வளர்ப்பதிலும் ஆர்வம் செலுத்தினான் என்பது இவனைப் பற்றிய வரலாற்றுக் குறிப்பாகும்.[41]

### இளவெளிமான்

இளவெளிமான் சங்கப் புலவர்களுள் ஒருவரான பெருஞ்சித்திரனாரால் மூன்று பாடல்களில் பாடப்பட்டுள்ளான் (புறம்.162, 207, 237). இவன் பெருஞ்சித்திரனார்க்கு வழங்கிய கொடை பற்றி இப்பாடல்கள் தெரிவிக்கின்றன.

### திதியன்

திதியன் இளங்கீரனார் (நற்.113), ஒல்லையூர் தந்த பூதப்பாண்டியன் (அகம்.25), கயமனார் (அகம்.145), நக்கீரர் (அகம்.36, 126), பரணர் (அகம்.196, 262, 322), மாமூலனார் (அகம்.331), வெள்ளிவீதியார் (அகம்.45) ஆகிய புலவர்

எண்மரால் பாடப்பட்டுள்ளான். "ஒளிறுவேல் தானை" (அகம்.322) என இவனது படை கூறப்படுவதால் சிறந்த காலாட்படை உடையவன் இவன் என்பதை அறியமுடிகிறது. இவனது புன்னை மரம் பகைவர்களால் வெட்டப்பட்டது இவனுக்கு மிகுந்த சினத்தை உண்டாக்கிற்று. ஆலங்கானம் என்ற இடத்தில் நடந்த போரில் இவன் உயிர் துறந்தான். தன் ஆட்சியில் இவன் கொடையாளனாகவும் விளங்கியுள்ளான்.

**நன்னன் சேய் நன்னன்**

நன்னன் சேய் நன்னனைப் பெருங்கௌசிகனார் (மலைபடுகடாம்) பாடியுள்ளார். இவனைப் பாடிய புலவர் இவனூரைப் பொருள் பொருந்தப் பாடியுள்ளார். ஈகைப் பண்பிலே சிறந்து விளங்கியவனாக இவனைக் கூத்தராற்றுப் படையினால் அறியலாம்.

**பேகன்**

பேகனை அரிசில்கிழார் (புறம்.146), இடைக்கழி நாட்டு நல்லூர் நத்தத்தனார் (சிறு.87), கபிலர் (புறம்.143), பரணர் (அகம்.262, புறம்.141, 142, 144, 145), பெருங்குன்றூர் கிழார் (புறம்.147), பெருஞ்சித்திரனார் (புறம்.158) என்ற அறுவரும் பாடியுள்ளனர். இவன் சிறந்த குதிரைப்படை, யானைப்படை ஆகியவற்றைப் பெற்றவனாக அறியப்படுகின்றான். இவன் வள்ளல்களுள் ஒருவனாகவும் பாடப்பட்டுள்ளான். வள்ளல்கட்குரிய தனிப்பண்புகள் இவனிடத்துக் காணப்படுகின்றன.

**வேள் எவ்வி**

வேள் எவ்வி கபிலர்(புறம்.202), குடவாயிற் கீரத்தனார் (அகம்.366), நக்கீரர் (அகம்.126), பரணர் (அகம்.126, 266; குறுந்.19), மாங்குடி மருதனார் (புறம்.24), மாமூலனார் (அகம்.115), வெள்ளெருக்கிலையார் (புறம்.233, 234) ஆகிய எழுவரால் பாடப்பட்டுள்ளான். இவன் ஆட்சிக்குட்பட்ட ஊர்களெல்லாம் கடல்வளத்தில் மிகுந்திருந்தது. திதியனின் காவல் மரத்தை வெட்டச் சென்றதைத் தடுக்க அன்னியென்பானுக்கு அறிவுரை கூறியது சிறப்பாகப் பேசப்படுகிறது. பகைவரின் வலிமையறிந்து அவர்களைத் தன் கீழ்

*வைத்திருந்தமையும், வீரர் முதலானோர்க்குக் கொடையளித்தமையும் இவனது வரலாற்றில் காணப்படும் முக்கியக் குறிப்புக்களாகும்.*

**வேள் பாரி**

*வேள் பாரியை இடைக்கழிநாட்டு நல்லூர் நத்தத்தனார் (சிறு.91), ஔவையார் (அகம்.303), கபிலர் (நற்.253; பதிற்.6; புறம்.105-111, 113-120, 200, 201, 236, 337), நக்கீரர் (அகம்.78), நன்னாகனார் (புறம்.176), பாரி மகளிர் (புறம்.112), பெருஞ்சித்திரனார் (புறம்.158), மதுரை அறுவை வாணிகன் இளவேட்டனார் மிளைக் கந்தன் (குறுந்.196) ஆகிய ஒன்பதின்மர் பாடியுள்ளனர். இவர்களுள் எண்மர்தம் பாடல்கள் கிடைத்துள்ளன. மூவேந்தர்களை எதிர்த்துப் போரிட்ட குறிப்புக்கள் இவன் வரலாற்றில் காணப்படுகின்றன. இலக்கிய வரலாற்றில் இவனுடைய கொடைத்திறம் தனித்துக் கூறப்படுகிறது (முல்லைக்குத் தேர் கொடுத்தது).*

## 2.4. சீறூர் மன்னர்கள்

*சிற்றூர்த் தலைவர்கள் ஓர் ஊருக்குத் தலைவர்கள். பிற்காலத்தில் கண்ணப்ப நாயனார் ஊர்ப்பகுதி ஒன்றற்குத் தலைவராக இருந்ததை அவர் வரலாறு குறிப்பிடுகிறது. இவர்களையும் மன்னர் என்பது பழைய வழக்கு. இவர்கள் மன்னர் மரபின் வழி வந்தவர்கள். சங்க இலக்கியத்தில் "சீறூர்" (அகம்.9) என்ற சொல்லாட்சி காணப்படுகின்றது. இயல்பாக இலக்கிய வழக்கில் ஆடவர்களை (தலைமக்கள்) அவர்தம் ஊருடன் சேர்த்துச் சுட்டுவது வழக்காகக் காணப்படுகிறது. ஊரன், நாடன், கிழான் போன்ற சொற்கள் இவ்வாறமைந்தவை. இவ்வாறு கூறுவது இலக்கணத்தில் 'புலநெறி வழக்கு' எனக்கூறலாம். பெயரமைவிலும் பிற சிறப்பிலும் ஊர்கள் குறிப்பிடத்தக்க இடமாய் இருந்ததைச் சங்க இலக்கியங்கள் உணர்த்துகின்றன. "யாதும் ஊரே யாவரும் கேளிர்" (புறம்.192) என்பதிலிருந்து இதனை உணரலாம். மன்னர், வேளிர், குறுநிலமன்னர், சீறூர் மன்னர் என்ற வரிசை முறை உரையாசிரியர், ஆய்வாளர்கள் போன்றோர் அமைத்துக் கொண்டவை.*

**பெயர் அமைந்த முறை**

*இயற்பெயர், சிறப்புப் பெயர், ஊர்ப்பெயருடன் இணைந்த பெயர் எனப் பலவாறாகச் சீறூர் மன்னர் பெயர்கள் அமைந்துள்ளன. வீரான் என்பது இயற்பெயர், தழும்பன் என்பது சிறப்பால் வந்தது. போரில் யானை மிதித்துத் தழும்பு ஏற்பட்டதால் தழும்பன் எனச் சிறப்புப் பெயர் பெற்றான். அம்பர்கிழான் அருவந்தை, ஈந்தூர் கிழான் தோயன் மாறன், சிறுகுடிகிழான் பண்ணன், முசுண்டை, வல்லார் கிழான் பண்ணன் ஆகியவை ஊர்ப் பெயருடன் இணைந்தவை.*

**சீறூர் மன்னர் ஆண்ட பகுதி**

*சீறூர் மன்னர்களைப் பற்றி ஆராய்ந்தோர் ஓர் ஊர் எல்லைக்குரிய தலைவர்களாகவே சுட்டப்படுகின்றனர். இவர்களது ஆட்சி எல்லையை அறிவதற்கு அடையாளமாகப் பெயரிலோ இவர்கள் குறித்த பாடல்களிலோ ஆராய்ச்சியாளர் வரலாற்றிலோ சில குறிப்புக்கள் இடம்பெற்றுள்ளன.*

*“அம்பர் கிழான் அருவந்தையின் ஊர் நெல் விளையும் கழனிகளை உடையது.”[42] ஈந்தூர் கிழான் தோயன் மாறன் என்பவனின் ஊர்ப் பகுதி “ஈர்ந்தை யோனே” (புறம்.180) என்று அழைப்பதன் வழித் தெரிகிறது. சோழநாட்டில் காவிரியின் வடகரையில் அமைந்த சிறுகுடியென்னும் வளமிக்க சீறூர் ஆண்ட மன்னன் பண்ணன் தழும்பன் ஊனூர் என்னும் சீறூரை ஆண்டு வந்தவன். நாலைக்கிழவன் நாகன் பாண்டிய நாட்டில் நாலையென்ற சீறூரை ஆண்டவன். “தோலா நல்லிசை, நாலை கிழவன்” என்ற தொடர் நாலைக் கிழவன் நாகன் ஆண்ட பகுதியைக் குறிக்கின்றது. முசுண்டை ஆட்சி செய்தது வேம்பி என்னும் ஊர்ப்பகுதி.[43] “வலாஅரோனே, வாய்வாள் பண்ணன்” (புறம்.181) என்பதில் இவனது ஊர்ப்பகுதி சுட்டப்படுகிறது. இருப்பையூர் பகுதியை ஆண்ட சீறூர் மன்னன் வீரான். பரணர் அவ்வூரோடு இணைத்து இவனைப் பாடியுள்ளார்.*

**சீறூர் மன்னர் சிறப்புகள்**

*சீறூர் மன்னர்களின் தனிச்சிறப்புக்கள் பற்றிச் சில குறிப்புகள் காணப்படுகின்றன. இவர்களுடைய ஊர்ச் சிறப்பு, நாட்டு வளம், கொடைத்தன்மை போன்றவை தனிச்சிறப்புகளாகக் கூறத்தக்கன. கொடைப் பண்புகள் நுணுகி ஆராயத்தக்கன.*

**அம்பர்கிழான் அருவந்தை**

*கல்லாடனார் புறப்பாடல் (385) ஒன்று காவிரியின் வளத்தைக் கூறி அதனுடன் இணைந்துள்ள இவனது ஊர்ச் சிறப்பைக் குறிப்பிடுகிறது. அரச மரபில் வரும் ஈதல் பண்பு இவனிடத்தும் காணப்படுகிறது.*

**ஈந்தூர் கிழான் தோயன் மாறன்**

*கோனாட்டு எறிச்சிலூர் மாடலன் மதுரைக்குமரனார் என்பார் ஈந்தூர் கிழான் தோயன் மாறனைப் பற்றிப் பாடிய பாடல் ஒன்று புறநானூற்றில் (புறம்.180) காணப்படுகிறது. போரில் ஈடுபட்டு விழுப்புண் பட்டதை மதுரைக் குமரனார் எடுத்துரைக்கின்றார்.[44] இவன் பிறர் பசி தீர்க்கும் பண்புடையவன் என்று கூறப்பட்டிருக்கிறது. அற்றார் அழிபசி தீர்க்கும் பண்பை மட்டும் தனித்துக் கூறியிருப்பது எண்ணத்தக்கது.*

**சிறுகுடிகிழான் பண்ணன்**

*சிறுகுடிக்கிழான் பண்ணன், கொற்றங்கொற்றனார் (அகம்.54), கோவூர் கிழார் (புறம்.70), செயலூர் இளம்பொன் சாத்தன் கொற்றனார் (அகம்.177), சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளி வளவன் (புறம்.173), மதுரை அளக்கர்ஞாழர் மகனார் மள்ளனார் (புறம்.388) ஆகிய ஐவரால் பாடப்பட்டுள்ளான். எதிரிப் படைகளின் போர் யானையை வென்றழிக்கும் அளவிற்குப் படைத்திறன் மிக்கவன் என்பது சங்கப்பாடல் தரும் குறிப்பு. குறுநில மன்னர்கள் பிறருடன் ஒப்பிடுகையில் இவனுடைய ஈகைத்திறம் தனித்துக் கூறத்தக்கதாயுள்ளது. ''பசிப்பிணி மருத்துவன்'' என்ற சிறப்புத் தொடர் இவனைக் குறிக்க எழுந்ததே ஆகும்.*

**தழும்பன்**

*நக்கீரர் (அகம்.227), பரணர் (நற்.300; புறம்.348), தூங்கலோரியார் ஆகிய மூவர் தழும்பனைப் பாடியுள்ளதாக வரலாற்றுக் குறிப்புகள் உள்ளன. இவருள் ஒருவர் பாடல் கிடைத்திலது. இவன் வாட்போரில் சிறந்து விளங்கியது தனித்துக் கூறப்படுகிறது. பகைவரின் யானைப்படைகளை வெல்லும் அளவிற்குப் படைத்திறன் வாய்ந்தவனாக இருந்தான் எனச் சங்க இலக்கியத்தில் பாடப்பட்டுள்ளான். பாணர்களை இவன் பாதுகாத்ததாகக் கூறப்படும் செய்தி இவனது கொடைத்திறன் மேம்பாட்டைக் குறிக்கிறது.*

**நாலைகிழவன் நாகன்**

*வடநெடுந்தத்தனார் புறப்பாட்டில் (179) இவனைத் தம் பாடலொன்றில் பாடியுள்ளார். போர்க்களத்தில் பகைவர் பலரைக் கொன்றழித்தான் என்று இவனைப் பற்றிய பாடல் குறிப்பிடுகிறது. மேலும் இவன் பருந்துபசி தீர்ப்பவன் என்று குறிக்கப்பட்டுள்ளான். போர் வன்மையும், கொடை வன்மையும் உடையவன் இவன். பருந்து பசி தீர்ப்பவன் என்பதில் பருந்து என்ற பெயர் கடும்பசியைச் சுட்டுகிறது.*

**முசுண்டை**

*முசுண்டை என்ற சீறூர் மன்னனை நக்கீரர் (அகம்.249) பாடியுள்ளார். "பல்வேல் முசுண்டை" (அகம்.249) எனக் கூறப்படுவதால் இவன் போர்த்திறமை வெளிப்படுகிறது. பல்வகைப் பொருளையும் தந்துதவியது இவனது கொடைத்தன்மை.*

**வல்லார்கிழான் பண்ணன்**

*வல்லார்கிழான் பண்ணனைப் புறப்பாடலில் (181) சோணாட்டு முகையலூர்ச் சிறுகடுத்தும்பியார் பாடியுள்ளார். வாய்வாட் பண்ணன் (புறம்.181) என்பது போர்க்குணம். பசிப்பகைத் தீர்ப்பவனாக இவன் கருதப்படுகின்றான்.*

**வீரான்**

*"வீரான்" என்ற சீறூர்த் தலைவன் பற்றிய ஓரம்போகியார் பாடல் ஒன்று ஐங்குறுநூற்றில் (58) காணப்படுகின்றது. நற்றிணையில் பரணர் பாடிய இரு பாடல்கள் (260, 350) உள்ளன. ஐங்குறுநூற்றிலும் நற்றிணையிலும் இவன் கொடைச் சிறப்புக்கள் பதிவாகியுள்ளன.*

*பொருள் வழங்குவோர், அவர்கள் வழங்கும் நிகழ்வுகளைக் குறிப்பிடும் இலக்கிய விவரங்கள் பின்வரும் அட்டவணையில் தரப்படுகின்றன.*

**மன்னர்கள்**

| **பொருள் வழங்கியோர்** | **பாடல் இடம் பெற்ற இலக்கியம் / எண்** |
|---|---|
| ஆடுகோட்பாட்டுச் சேரலாதன் | பதிற்.பதி.6, 6:52, 55 |
| இமயவரம்பன் நெடுஞ்சேரலாதன் | பதிற்.பதி.2, 2:12, 14, 17, 18 |
| இளஞ்சேட்சென்னி | புறம்.203, 370, 378 |
| இளஞ்சேரல் இரும்பொறை | பதிற்.பதி.9, 9:85, 86 |
| உதியஞ்சேரலாதன் | புறம்.2 |
| கடல்பிறக்கோட்டிய செங்குட்டுவன் | பதிற்.5:42, 43, 44, 47, 49 |
| கரிகாற் பெருவளத்தான் | பொரு.80–85, 102–115, 120–129, 161–169 |
| கருங்கையொள்வாள் பெரும்பெயர் வழுதி | புறம்.3 |
| களங்காய்க்கண்ணி நார்முடிச்சேரல் | பதிற்.4, 37, 38, 40 |
| குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவன் | புறம்.34, 38, 69, 70, 226, 377, 386, 393, 397 |
| கோப்பெருஞ்சோழன் | புறம்.67, 212, 221 |
| செல்வக்கடுங்கோ வாழியாதன் | பதிற்.பதி.7, 7:61, 66, புறம்.14, 387 |
| சேரமான் கோதை | புறம்.54, 343 |
| சேரமான் வஞ்சன் | புறம்.398 |
| சோழன் நலங்கிள்ளி | புறம்.27, 32, 33, 68, 377, 382, 400 |
| தகடூர் எறிந்த பெருஞ்சேரல் இரும்பொறை | பதிற்.8, 76, 79 |

| பொருள் வழங்கியோர் | பாடல் இடம் பெற்ற இலக்கியம் / எண் |
|---|---|
| தலையாலங்கானத்துச் செருவென்ற பாண்டியன் நெடுஞ்செழியன் | புறம்.24, 370, 371, 372, மது.98–105, 210–220, 748–751 |
| பல்யாகசாலை முதுகுடுமிப்பெருவழுதி | புறம்.12 |
| பல்யானைச் செல்கெழு குட்டுவன் | பதிற்.பதி.3, 3:21, 22, 23 |
| பாலை பாடிய பெருங்கடுங்கோ | புறம்.11 |
| யானைக்கட்சேய் மாந்தரஞ்சேரல் இரும்பொறை | புறம்.22, 229 |

**குறுநில மன்னர்கள்**

| பொருள் வழங்கியோர் | பாடல் இடம் பெற்ற இலக்கியம் / எண் |
|---|---|
| அகுதை | அகம்.76, குறுந்.298, புறம்.233 |
| அதிகன் | அகம்.162, குறுந்.393 |
| அதியமான் | அகம்.325, குறுந்.91, சிறு.100, நற்.381, புறம்.91, 95, 101, 103, 208, 235, 315, 390 |
| ஆதனுங்கன் | புறம்.389 |
| கடிய நெடுவேட்டுவன் | புறம்.205 |
| கண்டீரக்கோப்பெருநள்ளி | அகம்.238, குறுந்.59, சிறு.105, புறம்.148, 149, 150 |
| கரும்பனூர் கிழான் | புறம்.381, 384 |
| குமணன் | புறம்.158, 159, 160, 161, 162, 163, 164, 165 |
| சோழிய ஏனாதி திருக்குட்டுவன் | புறம்.394 |
| தாமான் தோன்றிக்கோன் | புறம்.399 |
| தொண்டைமான் இளந்திரையன் | பெரும்.23–28 |
| நல்லியக்கோடன் | சிறு.138, 139, 215, 240–245, 257–260, புறம்.376 |
| நன்னன் | அகம்.152, 349, மலை.78–85, 575–580 |
| நாஞ்சில் வள்ளுவன் | புறம்.138, 139 |
| பிட்டங்கொற்றன் | அகம்.143, புறம்.168, 169, 171, 172 |
| பொகுட்டு எழினி | புறம்.392 |
| பொறையாற்றுகிழான் | புறம்.391 |
| மல்லிகிழான் காரியாதி | புறம்.177 |

| பொருள் வழங்கியோர் | பாடல் இடம் பெற்ற இலக்கியம் / எண் |
|---|---|
| மலையமான் திருமுடிக்காரி | அகம்.209, சிறு.92, நற்.100, புறம்.121, 122, 123, 124, 126 |
| மூவன் | புறம்.209 |
| வல்வில் ஓரி | சிறு.109, புறம்.152, 153, 204 |
| வில்லியாதன் | புறம்.379 |

**வேளிர்**

| பொருள் வழங்கியோர் | பாடல் இடம் பெற்ற இலக்கியம் / எண் |
|---|---|
| ஆய் அண்டிரன் | அகம்.152, சிறு.96, நற்.167, 237, புறம்.127, 128, 129, 130, 131, 133, 135, 136, 140, 240, 241 |
| ஆய் எயினன் | அகம்.208 |
| இளவெளிமான் | புறம்.207 |
| திதியன் | அகம்.331 |
| நன்னன் சேய் நன்னன் | மலை.575–580 |
| பேகன் | சிறு.85, புறம்.141, 142, 145, 146, 147 |
| வேள் எவ்வி | அகம்.266, குறுந்.19, புறம்.233 |
| வேள் பாரி | அகம்.303, சிறு.90, பதிற்.7:61, புறம்.105, 106, 108, 109, 110, 111, 114, 115, 118, 119, 201. |

**சீறூர் மன்னர்**

| பொருள் வழங்கியோர் | பாடல் இடம் பெற்ற இலக்கியம் / எண் |
|---|---|
| அம்பர் கிழான் அருவந்தை | புறம்.385 |
| ஈந்தூர்கிழான் தோயன்மாறன் | புறம்.180 |
| சிறுகுடிகிழான் பண்ணன் | புறம்.173, 388 |
| தழும்பன் | அகம்.227 |
| நாலைகிழவன் நாகன் | புறம்.179 |
| முசுண்டை | அகம்.249, புறம்.320 |
| வல்லார்கிழான் பண்ணன் | புறம்.181 |
| வீரான் | நற்.350 |

## 2.5. பொதுவாகச் சுட்டப்படுவோர்

*மன்னர்கள் பெயர் குறிப்பிடாமல் வேந்தர், மன்னர் எனும் சொற்களால் குறிப்பிட்டு அவர்களின் கொடைச் சிறப்பைச் சில பாடல்கள் தெரிவிக்கின்றன. மன்னர்களின் பெயர்களைக் குறிப்பிட்டு அவர்களின் கொடைச் சிறப்பைத் தனித்தனியாகக் கூறாமல் பொதுவில் கூறிச் செல்லும் பாடல்களும் உள்ளன. இவ்வாறு வருவோரைச் செய்யுளில் கிடந்தவாறே இப்பகுதி விளக்குகிறது.*

### சீறூர் மன்னன்

*புறநானூற்றில் (319) சீறூர் மன்னன் என ஒருவன் குறிக்கப்பட்டுள்ளான். சீறூர் மன்னன் மனைவி உட்படக் குடும்பத்தார் அனைவரும் கொடைப் பண்புடையவராய், விருந்தயரும் பண்புடையவராய் இருந்ததைப் புறநானூறு (319) கூறுகின்றது. இதனை ஆலங்குடி வங்கனார் பாடியுள்ளார்.*

### சோழ மன்னன்

*பெயர் சுட்டப்படாத மன்னர்களில் சோழர் இருவர் சுட்டப்படுகின்றனர். தாயங்கண்ணனார் பாடிய அகநானூறு (213) பாடல் வழி இவனது சில சிறப்புக்கள் தெரிய வருகின்றன. இவன் வாள் சிறப்பு, வீரச்சிறப்பு, கொடைச் சிறப்பு, ஊர்ச் சிறப்புப் போல்வன இப்பாடலில் (அகம்.213) காணப்படுகின்றன. நற்றிணையில் குடவாயில் கீரத்தனார் பாடிய பாடல் ஒன்று (379) சோழர் என்று பொதுவாகச் சுட்டப்பட்டுள்ளது. இச்செய்யுளில் இவன் ஊரின் நீர்வளம், கொடைச்சிறப்பு ஆகியனவும் கூறப்பட்டுள்ளன.*

### பாண்டியன்

*‘தேர்வண் கோமான்’ (ஐங்.மரு.55) என்பது பாண்டியனைக் குறிக்கும் பெயர். ஓரம்போகியார் ஐங்குறுநூற்றில் ஒரு பாடலில் (மருதம்.55) இப்பாண்டியனைப் பாடியுள்ளார். இவன் தகுதிக்கேற்பப் பரிசுகளை வழங்கும் தன்மையுடையவன் எனச் சிறப்பித்துப் பேசப்படுகிறான்.*

**வேந்தர் (மூவேந்தர்)**

*சேர, சோழ, பாண்டிய மூவேந்தரும் ஒருங்கிருந்த செய்தி ஔவையார் பாடலொன்றில் புனையப்பட்டுள்ளது. மூவரின் மீதும் பற்றுடைய ஔவையாரின் மனநிலையை இப்பாடல் காட்டுகிறது. அவர்களுடைய புகழ் சிறக்க ஆற்றவேண்டிய பணிகளை இப்புலவர் எடுத்துரைக்கிறார்.[45] இதில் இவர்கள் கொடைச்சிறப்பு இடம்பெற்றுள்ளது.*

**2.6. புலவர்கள் (வழங்குவோர்)**

*வழங்குவோர் (கொடையளிப்பவர்) வரலாற்றில் புலவர்களும் இடம்பெறுகின்றனர். இலக்கியப் படைப்பாளிகள் சமூக மரபில் கூறியவாறு தங்களால் இயன்றதைப் பிறர்க்குக் கொடுத்து அதனால் மகிழ்ந்தனர். கொடை வழங்குவோர் வரலாற்றில் இவர்களுக்குத் தனியிடம் உண்டு. குறிப்பாகப் பெருஞ்சித்திரனார் போன்ற புலவர்களின் வரலாற்றில் அவர்களின் கொடைச் செயல் மிகுதிப்பட்டிருப்பதைக் காணலாம். ஆய்விலும் இத்தகையோர் (புலவர் இருவர்) இடம்பெறுகின்றனர்.*

*கபிலர், பெருஞ்சித்திரனார் ஆகிய இருவரும் இப்பகுதியில் விவரிக்கத் தகுந்தவர்கள். கபிலர் தமிழ் மரபைப் பின்பற்றினார் என்பதற்குப் பல சான்றுகளைக் கூறுவர். "ஆரிய அரசன் பிரகதத்தனைத் தமிழ் அறிவித்தற்கு இதனைக் கபிலர் பாடியதாகப் பாடல் உரை இறுதியில் ஒரு குறிப்புக் காணப்படுகிறது"[46] என்று குறிஞ்சிப்பாட்டின் இறுதியில் எழுதப்பட்டிருப்பதாக ம.ரா.போ.குருசாமி குறிப்பிட்டுள்ளார். இவர் பாரி மகளிரை அழைத்துக் கொண்டு மன்னர்களிடம் சென்று அவர்கள் பொறுப்பில் பாதுகாக்கும்படி கபிலர் கேட்டுள்ளதைக் கொடை போலவே குறிப்பிட்டுள்ளார் (புறம்.201). இவர் பாரியிடம் சிறந்த நட்புடன் இருந்ததைத் தமிழுலகம் போற்றியுள்ளது.*

**பெருஞ்சித்திரனார்**

*பரிசில் குறித்து இளவெளிமானை இகழ்ந்தும் குமணனைப் புகழ்ந்தும் பாடிய பாடல்கள் குறிப்பிடத்தக்கன. இவர்தம் மனைவி முதலான*

*குடும்பத்தாரையும் பிறர்க்குப் பொருள் வழங்குவதில் ஈடுபடச் செய்தார் என்பது வரலாறு (புறம்.163).*

## 2.7. திணைசார் மக்கள்

*மன்னர்கள், குறுநில மன்னர்கள், வள்ளல்கள் தவிரப் பிறரும் பரிசில் வழங்குவதில் ஈடுபட்டுள்ளனர். இவர்கள் அகப்பாடல்களிலும், புறப்பாடல்களிலும் வருகின்றனர். அகப்பாடலில் வருவோர் வெட்சி முதலிய புறத்திணை சார் மக்களாகக் காணப்படுகின்றனர். திணை அடிப்படையிலேயே அவர்களின் பெயர் முதலிய தனித்தன்மைகளை ஆராய்ந்து பரிசில் வழங்கலின் பொதுப்பண்பினை உறுதி செய்ய முடியும். அகத்திணையில் வருவோர் நூல்கள் அடிப்படையில் இங்கு விமர்சிக்கப்படுகின்றனர். இருதிணை சார்ந்த மக்களின் வரலாற்றுக் குறிப்புக்கள் கொடைக் குறிப்புக்கள் போன்றவை கீழே விளக்கப்படுகின்றன.*

### 2.7.1. அகநானூறு

*அகநானூற்றில் ஐவர் பரிசில் தருவதில் இடம்பெற்றுள்ளனர். அவர்கள் முறையே ஆயர்கள் (311), இடையர் தாய்மார்கள் (393), ஊர் மக்கள் (237), தலைவன் (30, 335, 377, 389), தலைவியின் தந்தை (282) என்போர் ஆவார்.*

#### ஆயர்கள்

*ஆயர் முல்லை நிலத்தைச் சார்ந்தவர். ஆவினை வளர்க்கும் தொழில் புரிபவர். இவர்கள் தெய்வம் திருமால். கால்நடைச் செல்வங்களை வளர்த்து அதன்வழிக் கிடைக்கும் பொருளில் வாழ்க்கையை அமைத்துக் கொண்டனர். இவர்கள் வாழ்ந்த நிலம் (முல்லை) காடும் காடு சார்ந்த பகுதியுமாகும். காடு சார்ந்த நிலப்பகுதியிலேயே இல்லம் அமைத்து இவர்கள் வாழ்ந்தனர். அரசு கூறும் கட்டளைக்கிணங்கி வினைவயிற்பிரிதல் முல்லை நிலத்திற்குரியது.*[47] *முல்லை மலர் தமிழில் கற்புக்குரிய அடையாளமாகக் கூறப்படுகிறது.*[48] *தெய்வத்திற்கு வழிபாடு செய்யுங்கால் முல்லை மலரை வைத்துப் படைத்ததாகக் கூறப்படுகிறது. இவர்கள் பசித்தோர்க்கு உணவு தந்து உதவினர் என்பர்.*

**இடையர் பெண்டிர்**

*செய்யுளில் இவர்கள் 'குடவர்' என்று குறிக்கப்படுகின்றனர் (அகம்.393). இக்குடவருள் பெண்களும் சுட்டப்படுகின்றனர். பாடலில் இவர்கள் "வரியணி பணைத்தோள் வார் செவித் தன்னையர்" எனக் கூறப்படுவதால் தாயர் எனச் சுட்டப்படுகின்றனர். இவர்களும் உணவு வழங்கி உதவியவர்களாகக் கருதப்படுகின்றனர்.*

**ஊர்மக்கள்**

*ஊர்மக்கள் என்பது செய்யுளில் உறையூர் என்று குறிப்பிடப்படுகிறது. உறையூர் மக்கள் பொருள் கொடுப்பதாகப் பாடலில் இடம்பெறுகிறார்கள். 'பால்பெய் செந்நெய் பாசவல் பகுக்கும் புனல்பொரு புதவின்; உறந்தை' (அகம்.237) என்பதில் உறந்தை என்பது ஊர் மக்களைக் குறிக்கிறது. பாசவல் - 'அவல்'. உறையூர் மக்களே வழங்குவர் என்பதை உறையூர் வழங்குவதாகக் குறிப்பிடப்பட்டுள்ளது.*

**தலைவன்**

*நெய்தல் திணையில் 'துறைவன்' எனக் கூறப்படுகிறான் (அகம்.30). துறைவன் என்பது நெய்தல் நிலத் தலைவனின் பொதுப்பெயர். செய்யுளில் "கோடுஉயர் திணிமணல் துஞ்சும் துறைவ" என இவன் பெயர் சுட்டப்பட்டுள்ளது. பாலைத்திணையில் 'மனைவயின் இருப்பவர் மன்னே' (அகம்.389) எனச் சுட்டப்பட்டுள்ளது. இங்கு 'இருப்பவர்' என்பது தலைவனைச் சுட்டுகிறது. இந்த அகத்தலைவன் கொடைப்பண்பு உடையவனாகக் காணப்படுகிறான்.*

**தலைவியின் தந்தை**

*நெய்தல் திணையின் தலைவன் தலைவியின் தந்தை. செய்யுளில் 'பெருந்துறைப் பரதவன்' எனச் சுட்டப்படுகிறான் (அகம்.280). இவன் வள்ளல் தன்மை கொண்டவனாகக் காணப்படுகிறான்.*

### 2.7.2. ஐங்குறுநூறு

*ஐங்குறுநூற்றில் கொடைத் தொடர்பான மூன்று பாடல்கள் உள்ளன. இதில் இல்லறத்தலைவி (ஐங்.மரு.2), தலைவியின் தந்தை (ஐங்.மரு.6, குறி.300) ஆகியோர் வழங்குவோராக இடம்பெறுகின்றனர்.*

**இல்லறத் தலைவி**

*இல்லறத் தலைவி மருதத்திணை சார்ந்தவள். நாடும் அரசும் வளம் பெற வாழ்த்தும் இயல்புடையர். நாடும் அரசும் வளமுடன் இருந்தால் பிறருக்கு உதவ முடியும் என்ற தன் ஈகைப் பண்பை வெளிப்படுத்துபவளாகின்றாள்.*

**தலைவியின் தந்தை**

*தலைவியர் தம் தந்தையை "எந்தை" எனத் 'தன் கூற்றில்' பேசுவர். அம்முறைச் சொல்லே ஈண்டும் வருகின்றது (ஐங்.மரு.6, குறி.300). இதில் தலைவியின் தந்தை கொடை உள்ளம் கொண்டவராக இடம்பெறுகிறார்.*

### 2.7.3. கலித்தொகை

*கலித்தொகையில் தலைவன், தலைவி, தலைவியின் தந்தை ஆகியோர் கொடை வழங்குவதாக உள்ளது. இவர்களின் தனிச்சிறப்பைக் காட்டுவதாக இது அமைகிறது.*

**தலைவன்**

*தலைவனின் ஈகைப் பண்பைக் கூறும் பல பாடல்கள் இடம்பெற்றுள்ளன (கலி.2, 47, 50, 95) செய்யுளில் தலைவன் 'நன்மலை நாடன்' (கலி.2), வண் கையவன் (கலி.42) எனக் குறிக்கப்படுகிறான்.*

**தலைவி**

*தலைவி பரிசளித்ததாகத் தலைவன் கூறும் பாடல்கள் நான்கு இடம்பெற்றுள்ளன. இத்தலைவியைச் செய்யுளில் 'உறீஇயாள்' (கலி.139),*

'எழினுதல்' (கலி.25), நேரிழை (கலி.31), சுடர்இழை (கலி.138) எனக் குறிக்கப்படுகிறாள். உறீஇயாள் ஈத்த இம் மா, எழிணுதல் ஈத்த இம்மா, நேரிழை ஈத்த இம்மா என வரும் தொடர்கள் எண்ணத்தக்கன.

**தலைவியின் தந்தை**

தலைவியின் தந்தை கொடை மாண்பு உடையவனாகக் குறிப்பிடப் பெறுகிறான். 'எந்தை' (கலி.61), 'எமர் கொடை நேர்ந்தார்' (கலி.104), 'கொடுத்தார் தமர்' (கலி.141). இவற்றில் எந்தை, எமர், தமர் என்பன தந்தையைக் குறிப்பவனவாக இடம்பெறுகின்றன. தமர் - தந்தை முதலான பலரையும் குறிப்பது.

## 2.7.4. குறுந்தொகை

குறுந்தொகையில் தலைமகள், தலைவன், தலைவியின் தந்தை (75, 137, 233) ஆகிய மூவரும் பரிசில் வழங்குவோராகக் காணப்படுகின்றனர்.

**தலைமகள்**

தலைவனின் வருகையைத் தெரிவித்த பாணனுக்குத் தலைவி கூறிய சொற்கள் அவருடைய ஈகைப் பண்பைக் காட்டுவதாக அமைகிறது. இந்த வகையில் தலைவியரும் ஈகைப் பண்புடையவர்களாக விளங்கினார் எனத் தெரிகிறது.

**தலைவன்**

தலைவன் கூற்றாக வரும் பாடல் ஒன்றில் (குறுந்.137) தலைவன் தலைவியைப் பிரியேன் என்று உறுதி கூறுகிறான். அவ்வாறு பிரிந்தால் இரவலர்க்குப் பொருள் வழங்க முடியாத தீயவனாவேன் என்று தன்னையே கூறுகின்றான்.

**தலைவியின் தந்தை**

தலைவன் தலைவியின் தந்தையைச் சிறப்பித்துக் கூறுகிறான். அப்போது அத்தந்தையின் வள்ளல் தன்மையை எடுத்துரைக்கின்றன. இந்நிலையில் தலைவியின் தந்தை ஈகைத்தன்மை தெரிகிறது.

### 2.7.5. சிறுபாணாற்றுப்படை

*சிறுபாணாற்றுப்படையில் உழவரின் தங்கை, எயினர் குல மகளிர், பரதவர் (சிறு.178-195, 164-177, 143-163) ஆகியோர் பரிசில் வழங்குவோராக இடம்பெறுகின்றனர்.*

**உழவரின் தங்கை**

*சிறுபாணாற்றுப்படையில் தங்கை என்ற உறவுப்பெயர் கூறப்பட்டுள்ளது. குடும்பத்தாரான பாணர்க்கும் அவர்தம் சுற்றத்தார்க்கும் உணவு வழங்கி மகிழ்வதைப் போற்றுகின்றவராகக் காணப்படுகிறாள்.*

**எயினர் குல மகளிர்**

*எயினர் குல மகளிர் பிறர்க்கு உதவி புரிந்து வாழ்ந்து வந்ததாகச் சிறுபாணாற்றுப்படை கூறுகிறது.*

**பரதவர்**

*சிறுபாணாற்றுப்படையில் பரதவர் வருகின்றனர். இவர்கள் மீன் பிடித்தலை முதன்மைத் தொழிலாகக் கொண்டவர். ஆகவே தமக்கு மிகுதியாகக் கிடைத்த பொருள்களை வழங்கும் எண்ணம் உடையோராய் இருந்ததாகச் சிறுபாணாற்றுப்படை கூறுகின்றது.*

### 2.7.6. திருமுருகாற்றுப்படை

*இச்செய்யுளில் பரிசிலர், 'பரிசில்' என இரண்டு இடங்களில் இடம்பெறுகின்றன. இதில் முருகன் பரிசிலரைக் காத்ததாகவும் பரிசில் வழங்கியதாகவும் அமையும் பொருளில் உள்ளது (பா.273, 295).*

### 2.7.7. நற்றிணை

*நற்றிணையில் ஊர் மக்கள், தலைவன், தலைவியின் தந்தை, வள்ளல் (நற்.91, 347, 136, 376) ஆகியோர் பரிசில் வழங்கியோராக இடம்பெறுகின்றனர்.*

**ஊர் மக்கள்**

*நற்றிணையில் ஊர் மக்கள் கொடைத்தன்மை வாய்ந்தவராகச் சுட்டப்படுகின்றனர். "பெருநல் ஈகைநம் சிறுகுடிப் பொலிய" (நற்.91) என்பதில் சிறுகுடி என்பது அங்குள்ள மக்கள் கொடைப் பண்பை வெளிக்காட்டுகிறது.*

**தலைவன்**

*தலைவனைப் பரிசில் பெறுவோர் "இன்ன நிலையன்; பேர் அன் பினன்" (நற்.349) எனக் கூறுவதால் தலைவனின் ஈகை உள்ளம் புலப்படுகிறது.*

**தலைவியின் தந்தை**

*தலைவி தனக்குப் பரிசளித்ததாகத் தன் தந்தையைக் குறிப்பிடும் பாடல் ஒன்று நற்றிணையில் இடம்பெற்றுள்ளது (நற்.136).*

**வள்ளல்**

*இரவலர்கள் வள்ளல்களிடம் சென்று பரிசில் பெறுவதிலிருந்து வள்ளல்களின் கொடைப்பண்பு வெளிப்படுகிறது. செய்யுளில் "வரையோன் வண்மை" (நற்.376) என வள்ளலைச் சுட்டுகிறார் புலவர்.*

## 2.7.8. பதிற்றுப்பத்து

பதிற்றுப்பத்தில் பாணரும், மலைநாட்டு மக்களும் இடம்பெறுகின்றனர். இவர்கள் வள்ளல் தன்மையினராய் இருப்பது குறிப்பிடத்தக்கது. இவர்கள் பற்றிய விவரம் கீழே தரப்பட்டுள்ளது.

**பாணர்**

*பாணர்களும் பொருள் வழங்குவதில் ஆர்வம் உடையவராய் இருந்தனர் (பதிற்.2:18).*

**மலைநாட்டு மக்கள்**

*மலைநாட்டு மக்களுக்கு ஒரு பொதுப்பண்பு காணப்படுகிறது. இவர்கள் விருந்தினருக்கு உணவளித்தலை விரும்பினர் (பதிற்.3:30).*

## 2.7.9. பரிபாடல்

*பரிபாடலில் இறைவனே கொடையளிப்போராகக் காணப்படுகின்றார்.*

| பெயர் | செய்யுட் பெயர் | பாடல் எண்-அடி |
|---|---|---|
| இந்திரன் | செல்வன் | 5:59 |
| எமன் | ஞமன் | 5:61 |
| தலைவன் | கள்வன் | 20:36 |
| தலைவியின் தந்தை | எந்தை | 20:76 |
| திருமால் | இருகைமால் | 3:35 |
| தீக்கடவுள் | அனலன் | 5:57 |
| முருகன் | செவ்வேள் (பாடல் முழுதும்) | 5 |

## 2.7.10. புறநானூறு

*புறநானூற்றில் கொடையளித்தோர் அறுவர் காணப்படுகின்றனர். அவர்கள் பற்றிய விவரங்கள் கீழே தரப்படுகின்றன.*

| பெயர் | செய்யுட் பெயர் | பாடல் எண் |
|---|---|---|
| அகத்தோர் | அகத்தோர் | 28 |
| இல்லறத் தலைவி | -<br>இற்பொலி மகடூஉ<br>மனையோள், மனைவி | 319<br>331<br>333, 334, 326 |
| ஊர்த் தலைவன் | சீறூர் மன்னன் | 328 |
| கொடையாளர் | வள்ளியோர் | 47 |
| தலைவன் | சென்னியன்<br>பெருந்தகை | 285<br>361 |
| படைவீரர் | படைகொண் மாக்கள்<br>-<br>நெடுந்தகை<br>வண்மையோன் | 29<br>317<br>327, 329<br>330 |

*இவர்கள்தம் இயல்பிற்கேற்றவாறு கொடையளித்தலை விரும்பியவர்களாய்க் காணப்படுகின்றனர்.*

### 2.7.11. பெரும்பாணாற்றுப்படை

பெரும்பாணாற்றுப்படையில் இடம்பெறுவோரில் எழுவர் கொடைப் பண்புடையவராய்க் குறிப்பிடப்படுகின்றனர். அவர்தம் விவரம்

| பெயர் | செய்யுட் பெயர் | பாடல் அடி |
|---|---|---|
| அந்தணர் | மகடூஉ (பார்ப்பனி[49]) | 304 |
| இடையர் மகள் | ஆய்மகள் | 162 |
| உழவர் | வினைஞர் | 255 |
| எயிற்றியர் | எயிற்றியர் | 94 |
| எயினர் | எயினக்குறும்பீர் | 129 |
| முல்லை நில மக்கள் | - | 184 |
| வலைஞர் குடியினர் | வலைஞர் குடி | 274 |

அந்தணர்கள் கொடையாளராய் இருப்பதும் சில நிலப்பகுதிப் பெண்கள் பொருள்களைப் பிறர்க்குக் கொடுத்தமையும் இதன்வழி அறியக்கிடக்கின்றன.

### 2.7.12. மலைபடுகடாம்

மலைபடுகடாம் இதே தன்மையினர் ஐவரைக் குறிக்கின்றது.

| பெயர் | செய்யுட் பெயர் | பாடல் அடி |
|---|---|---|
| இடையர் | கோவலர் | 409 |
| உழவர் | வினைஞர் | 462 |
| கானவர் | கானவர் | 155 |
| குடிசைவாழ் மக்கள் | குரம்பைக்குடி | 439 |
| சிற்றூர் மக்கள் | - | 158-169 |

இங்குக் குறிக்கப்பெறுவோர் முல்லைத்திணை மக்களாகக் காணப்படுகின்றனர். சங்கச் சான்றோர் பொருள் வழங்குவோரைக் "கொடுக்குவர்" என்றும் கூறுவர். "புகழ் எனின் உயிரும் கொடுக்குவர் . . ." (புறம்.182).

**தொகுப்புரை**

வரலாற்று நோக்கில் இலக்கியங்களில் பிறர்க்கு ஒன்றை வழங்குவோரின் நீண்ட பட்டியலைக் காணமுடிகிறது. இவ்வியல் இது பற்றி விளக்குகிறது. சங்க இலக்கியம் முழுவதும் காணப்படும் கொடையாளர்கள் கூறப்படுவதுடன் (மன்னர்கள்), கொடைத்திறன்களும் எடுத்துக் கூறப்பட்டுள்ளன. குறுநில மன்னர்கள் அரசாண்ட நிலப்பகுதி. அம்மன்னர்கள் பெயர்ச் சிறப்பு, கொடைக் குறிப்பு ஆகியன எடுத்துரைக்கப்பட்டுள்ளன. வேளிர் குலமரபு, கொடைத்தன்மைகள் விளக்கப்பட்டுள்ளன. சீறூர் மன்னர்களின் ஊர்கள் பற்றியும், பெயர்கள் பற்றியும், கொடைக் குறிப்பும் விளக்கப்பட்டுள்ளன. பொதுவாகச் சுட்டப்படுவோர் பற்றிய விவரங்கள், கொடைத்தன்மைகள், புலவர்கள் கொடைத்தன்மை, திணை சார் மக்கள் கொடைத் தொடர்பு ஆகியவை இவ்வியலின் இன்றியமையாச் செய்திகள் ஆகும்.

## சான்றெண் குறிப்புகள்

1. அ.தட்சிணாமூர்த்தி, "முன்னுரை", **சங்க இலக்கியம் உணர்த்தும் மனித உறவுகள்,** ப.11.
2. "சான்றோர் செய்யுட்கள்", தொடர் மேற்குறித்த நூலில் இடம்பெற்றுள்ளது, ப.245.
3. சு.சக்திவேல், **தமிழ்மொழி வரலாறு,** ப.32.
4. கே.ஏ.நீலகண்ட சாஸ்திரி, **சோழர்கள்** (மொ.பெ.), **புத்தகம் 1,** ப.3.
5. பொ.வே.சோமசுந்தரனார் (உ.ஆ.), **பதிற்றுப்பத்து, ஆறாம் பத்து, பதி.6.**
6. ப.அருணாசலம் (ப.ஆ.), **சங்க இலக்கியப் பொருட்களஞ்சியம், தொ.3,** ப.188.
7. அரங்க.இராமலிங்கம், **சங்க இலக்கியத்தில் வேந்தர்,** ப.371.
8. ஔவை சு.துரைசாமிப் பிள்ளை (உ.ஆ.), **புறநானூறு,** பா.203.
9. **சிலம்பு., காதை.**28:147.
10. இரா.சாரங்கபாணி (ப.ஆ.), **சங்க இலக்கியப் பொருட்களஞ்சியம்,** தொ.1, ப.335.
11. வ.குருநாதன், **சங்க கால அரச வரலாறு,** ப.107.
12. மேலது., ப.202.
13. மேலது.,
14. மேலது.,
15. **சிலப்பதிகாரம்,** இந்திர விழவு எடுத்த காதை 90-104.
16. **புறநானூறு,** பா.3.
17. மேலது.,
18. அ.ஜம்புலிங்கம், **சங்ககால வேந்தர்களின் சமுதாயப் பணி,** ப.66.
19. மேலது., ப.66.
20. வ.குருநாதன், மு.கு.நூ., ப.238.
21. செ.உலகநாதன் (உ.ஆ.), **முத்தொள்ளாயிரம்,** பா.49.
22. வ.குருநாதன், மு.கு.நூ., ப.232.
23. ப.அருணாசலம் (ப.ஆ.), மு.கு.நூ., தொ.3, ப.156.
24. அ.ஜம்புலிங்கம், மு.கு.நூ., ப.95.

25. **திருக்குறள்,** அதிகாரம் 75.

26. கா.கோவிந்தன், **சங்ககால அரசர் வரிசை,** ப.61.

27. அ.ஜம்புலிங்கம், மு.கு.நூ., ப.175.

28. மேலது., ப.156.

29. மேலது., ப.158.

30. கா.கோவிந்தன், மு.கு.நூ., ப.98.

31. வ.குருநாதன், மு.கு.நூ., ப.90.

32. மேலது., ப.293.

33. மேலது.,

34. **க்ரியாவின் தற்காலத் தமிழ் அகராதி,** ப.907.

35. வ.குருநாதன், மு.கு.நூ., ப.305.

36. மேலது.,

37. ஔவை சு.துரைசாமிப் பிள்ளை (உ.ஆ.), **புறநானூறு,** பா.205.

38. அ.பாலையன், புலியூர்க்கேசிகன் (உ.ஆ.), **சங்க இலக்கியம் - அகநானூறு - புறநானூறு மூலமும் உரையும்,** அகம்.359.

39. அ.மா.பரிமணம் (மு.ஆ.), **வாழ்வியற் களஞ்சியம்,** தொ.13, ப.47.

40. வ.குருநாதன், மு.கு.நூ., ப.260.

41. அ.பாலையன், புலியூர்க்கேசிகன் (உ.ஆர்.), மு.கு.நூ., அகம்.208.

42. உ.வே.சாமிநாதையர் (உ.ஆ.), **புறம்.385.**

43. புலியூர்க்கேசிகன் (உ.அ.), **அகம்.249.**

44. உ.வே.சாமிநாதையர் (உ.ஆ.), புறம்.180.

45. அ.பாலையன், புலியூர்க்கேசிகன் (உரை.), மு.கு.நூ., புறம்.367.

46. ம.ரா.போ.குருசாமி (உ.ஆ.), "முன்னுரை", **கபிலம்,** ப.xi.

47. பெ.மாதையன், **அகத்திணைக் கோட்பாடும் சங்க அகக்கவிதை மரபும்,** ப.165.

48. வ.சுப.மாணிக்கம், **தமிழ்க்காதல்**, ப.145.

49. பொ.வே.சோமசுந்தரனார் (உ.ஆ.), **பத்துப்பாட்டு, பகுதி 1, பெரும்.**304.

## இயல் 3

# பரிசில் பெறுவோர்

சங்க கால சமூகத்தில் அரசாட்சி முறையில் பல கூறுகள் இருந்தன. திருக்குறள் இவற்றை ‘படை, குடி, கூழ், அமைச்சு, நட்பு, அரண்’ என்று வரிசைப்படுத்துகிறது.[1] இவை ஓர் அரசின் உறுப்புகள் எனச் சுட்டப்படுகின்றன. வடமொழியில் இவற்றை “அங்கம்” என்பதாகப் பரிமேலழகர் குறிப்பிடுகின்றார்.[2] இவ்வாறு கூறப்படும் அடிப்படைப் பகுதிகளுடன் வேறுசிலவும் அரசாட்சி முறையில் இருந்தன. அவை அரசுக்குப் பெருமையையும் புகழையும் தந்தன. இவ்வாறு அரசு உறுப்புகளுள் இணைக்கப்பட்ட செயற்பாடுகள் கலை, இலக்கியம், கல்வி, நுண்கலைகள் ஆகியவையும் அரசு சார்ந்ததாக அமைந்தன. அரசனுக்குப் பெருமை தரும் இக்கூறுகளில் பரிசு வழங்கலும் ஒன்றாகக் கருதப்பட்டது. போரில்லாத அரசு இல்லை என்பது போலக் கொடை வழங்காத மன்னர்கள் இல்லை என்றே கூறலாம். மன்னர்களைப் போலவே வேறு சிலரும் குறிப்பாகப் புலவர், செல்வந்தர் ஆகியோரும் இப்பணியைச் செய்துவந்திருக்கின்றனர். கொடை வழங்குதலைப் பலரும் பணியென மேற்கொண்ட சமூகத்தில் பரிசு (பொருள்) பெறுவோரும் பலதிரத்தினராய்க் காணப்பட்டனர். அரசர்களுக்கும் கொடை வழங்கப்பட்டிருக்கிறது. அமைச்சர், வீரர் போன்றோரையும் இவ்வரிசையில் காணமுடிகிறது. பரிசில் பெறுவோரைக் குறித்த விளக்கமாக இவ்இயல் அமைந்திருக்கிறது.

ஆய்வுக்கு எடுத்துக் கொண்ட இலக்கியங்களில் காணப்பெறும் ‘கொள்வோர்’ (கொடை) பல வகையினர். அவர்களை வகைப்படுத்தி அவர்களது பொருள்பெறு சூழலை விளக்குவது இவ்வியலுக்குத் தேவையாகிறது. கொடை பெறுவதாகத் தெய்வமும், அஃறிணைப் பொருள்களும் சுட்டப்பட்டிருப்பதைக் காணமுடிகிறது. அடுத்துத் தரப்பெறும் வரிசை முறை, பரிசில் பெறும் மக்கள் முதலான பல பெயர்களைச் சுட்டிக் காட்டுகிறது. மிகுதியும் உயர்திணைப் பெயர்கள் இருப்பதாலும் சிலவே அஃறிணைப் பெயர்கள் வருவதாலும் இயல் தலைப்பு ‘பரிசில் பெறுவோர்’

என உயர்திணைத் தொடராய் அமைக்கப்பட்டது. இப்பெயர்த் தலைப்புக்கள் அகரவரிசையாய் அமைக்கப்பட்டுள்ளன.

3.1. அஃறிணை

3.2. அந்தணர்

3.3. இரவலர்

3.4. கலைஞர்கள்

3.5. சான்றோர்

3.6. தெய்வம், தேவர், புராணம்

3.7. பரிசிலர்

3.8. பொதுமக்கள்

3.9. மன்னர்

3.10. வீரர்

## 3.1. அஃறிணை

மக்கள் தாம் விரும்பிய பொருளைப் பிறர்க்குத் தருதல் பண்பாட்டின் அடையாளமாகத் தமிழில் சுட்டப்படுகிறது. இதன் அடிப்படையில் எழுந்ததே பரிசு வழங்குதலும், கொடை அளித்தலும் ஆகும். வரலாற்றில் பொருளியல் (Wealth) வாய்ப்புடையோர் நம்பிக்கையின் (மதம்) அடிப்படையில் பொருள் தருதலும், புகழின் அடிப்படையில் கொடை வழங்கலும் நடைபெற்றன. அதிகாரத்தில் இருந்த அரசர்கள் பண்பாடும், சான்றாண்மையும், கல்வியும், கைவரப் பெற்ற நிலையில் அஃறிணைப் பொருள்களுக்கும் ஒன்றை வழங்குவதைத் தம் வாழ்நாள் கடமையென உணர்ந்து செயல்பட்டனர். இதில் அடுத்த கட்டமாக நல்மனப்பான்மையின் மிகையில் அஃறிணைப் பொருட்களுக்கும் உரிய தேவையை நிறைவு செய்வதும் பெரியோரின் நற்சிந்தனையாக இருந்தது. பொருள் வழங்கல் நிகழும் இடத்தில் கொடையைப் பெறும் பொருள்களாக அஃறிணைப் பொருள்கள் இருந்துள்ளன. பிற்காலத்தில் ''காக்கை குருவி எங்கள் ஜாதி''[3] எனப் பாரதி பாடியதும் மேற்குறிப்பிட்ட நல்உணர்வின் மற்றொரு பகுதியாகக் காணமுடியும்.

மக்கள் அஃறிணைப் பொருளின் மீது கொண்ட இரக்க உணர்வு அவற்றிற்கு வழங்குதலைச் செய்யுமாறு தூண்டிற்று. இலக்கியங்களில் இத்தகைய புனைவுகளும் காணப்படுகின்றன.

தாவரம், விலங்கு, பறவை போன்ற அஃறிணைப் பொருள்களுக்கு அரசர்கள் பரிசு வழங்குவதாகப் புலவர்கள் புனைந்துள்ளனர். இஃது இலக்கியப் புனைவாகவும், வரலாற்றுச் செய்தியாகவும் உள்ளது. சிறுபாணாற்றுப்படையிலும், புறநானூற்றிலும் இச்செய்தி காணப்படுகிறது. அன்னம், மயில், முல்லை, யானை ஆகிய நான்கும் பரிசில் பெறுவதாகப் பாடப்பெற்றுள்ளது. அன்னப்பறவை தமிழ் இலக்கியத்தில் பரவலாக இடம்பெற்றுள்ளது. சங்க இலக்கியம், திருக்குறள் போன்ற இலக்கியங்களில் இதனைக் காணலாம். அன்னப்பறவை இலக்கிய வழக்கில் உள்ளது. இது புராணங்களிலும் கூறப்படும் ஒன்று. இது போல மயில் என்ற பறவையும் கொடை பெறுவதில் பேசப்படுகிறது. மயில் தமிழ்ச் சமூகத்தில் பழங்காலந்தொட்டே பேசப்படும் ஒரு பறவை. “மயிற்பீலி” மருத்துவக் குணமுடையது. மயில் மக்களுடன் நெருக்கமான பறவை. புராணங்களில் மயிலை ஊர்தியாகக் கொண்டு முருகன் வருவதாகக் கூறும் கதை உண்டு. இப்பறவையை இரக்கத்துடன் மக்கள் நோக்கினர். மயில் கார்காலத்தில் தோகை விரித்து ஆடும் என்பது இலக்கியப் புனைவு. மயில் தோகை விரித்தாடுதல் அழகு மிகுந்தது என்பது வழக்கு. “கான மயிலாடக் கண்டிருந்த வான்கோழி”[4] என்பது மயிலின் அழகிய தோற்றத்தைச் சுட்டுதற்கு உரைக்கப்பட்டது.

சங்க இலக்கியத்தில் மிகுதியாகப் பயிற்சியுடைய மலர் முல்லை. கொடை பெறுதலில் முல்லைக்கொடி சுட்டப்பட்டுள்ளது. முல்லை மலர் பெண்கள் சூடக்கூடியது. கற்பிற்கு அடையாளமாக முல்லை மலர் கூறப்படுகிறது. முல்லைப் பூவையும், நெல்லையும் வைத்து இறைவனுக்குப் படையல் செய்த முறை பழந்தமிழகத்தில் இருந்தது. “முல்லையும் பூத்தியோ ஒல்லையூர் நாட்டே” (புறம்.242) என்று புறநானூறு கூறுகிறது. முல்லைமலர்

சமூகத்தில் மிகுந்த பயன்பாடுடையது. இத்தகைய பயன்பாடுடைய முல்லைக்கொடி கொடை பெறுதலில் பயன்படுத்தப்பட்டுள்ளது.

### 3.2. அந்தணர்

தமிழ் மரபில் தமிழர்களுக்கு அடுத்த நிலையில் அந்தணர்கள் வைக்கப்படுகின்றனர். ஒட்டு மொத்தத் தமிழ்ச்சமூகமே அந்தணர்களைப் போற்றிய வரலாற்றுக் குறிப்புக்கள் காணப்படுகின்றன. பண்டைத் தமிழ்ப் புலவர்களில் அந்தணர் சிலர் உளர். கபிலர் ''யானும் ஓர் அந்தணன்'' (புறம்.200) என்று தன்னை அறிமுகப்படுத்தியுள்ளார். வேதம் முதலியவற்றைக் கற்றவர்கள் என்றும், அவர்களைப் போற்றுவது சமூகக் கடமை என்றும் போற்றப்பட்டது. அந்தணர்களுக்குப் பொருள் வழங்குவது ''தருமம்'' என்றும் கூறப்பட்டது. ''அந்தணர் என்போர் அறவோர்''[5] போன்ற தொடர்களும் சிந்திக்கத்தக்கவை. புராணங்களிலும், காவியங்களிலும் அந்தணர்கள் இடம் பெற்றுள்ளனர். இந்தியச் சமூகத்தைப் பொருத்தவரையில் அந்தணர்கள் தனி மதிப்புடன் வாழ்ந்ததை வரலாறு உணர்த்துகிறது.

பழங்காலத்தில் மன்னர்கள் செய்த யாகங்களை அந்தணர்கள் நடத்தியுள்ளனர். சங்க இலக்கியத்தில் குறுந்தொகை (233), பதிற்றுப்பத்து (பதி.3), புறநானூறு (362) ஆகிய இலக்கியங்களில் பரிசில் பெறுபவர்களாக அந்தணர்கள் குறிக்கப் பெறுகின்றனர். பார்ப்பார், உயர்ந்தோர் போன்ற பெயர்களில் அந்தணர் சுட்டப்பட்டுள்ளனர். அரண்மனையில் தங்கிக் காலத்தைக் கணித்துக் கூறுதல், தூது செல்லல் போன்ற செயல்களில் இவர்கள் ஈடுபட்டுள்ளனர். வரலாற்றில் அந்தணர்கள் பொருள் பெறும் மதிப்புடையவர்களாகவும் இருந்தனர். ''அந்தணரென்று சொல்லப்படுவார் துறவறத்தில் நின்றவர்''[6] என்றும், ''குலவொழுக்கம் மாறாதவர்கள்''[7] என்றும் போற்றப்பட்டனர். 'பரிசில் பொருள்கள்' என்ற பகுதியில் இவர்கள் பெற்ற பொருள்கள் உணர்த்தப்படுகின்றன.

### 3.3. இரவலர்

"இரவலர்" ஒரு பொருளைப் பிறரிடமிருந்து ஏற்போர்.[8] இரவல் + அர் என இச்சொல் பிரியும். காவல் + அர் எனப்பிரிவது போல இஃது உள்ளது. இரத்தல், இரப்பு ஆகியன பழந்தமிழ்ப் பயிற்சி உடையன. (புறம்.239) ஓரிடத்தில் நிலையாக இராது ஆங்காங்கே சென்று பொருள் பெற்று வாழ்பவர்கள் "இரவலர்" என அழைக்கப்பட்டனர். பொருளைத் தானமாகப் பெறுபவர் என்றும் இவர்களைக் கூறுவர். "இரவலர் ஒன்றை வேண்டிப் பெறுபவர்"[9] என்கிறது பொருட்களஞ்சியம். இரவலரை 'யாசகன்' என்று தமிழ் லெக்சிகன் கூறுகிறது.[10] கிரியாவின் தற்காலத் தமிழ் அகராதி "பொருளைத் தானமாகப் பெறுபவர்"[11] என்கிறது. பொதுவாக மன்னர்களை நோக்கிப் பொருள் பெற வருவோரை இரவலர் என்று கூறுதல் மரபு. இவ்வாறு பொருள் பெற்றுச் செல்வோரை உரையாசிரியர்கள் இரவலர் என்றே குறிப்பிடுகின்றனர். "இரவலர்" சொல் "வரைநிலை இன்றி இரவலர்க்கு ஈயும்" என்று அகநானூற்றில் இடம்பெற்றுள்ளது (அகம்.13). இலக்கியங்கள் பலவற்றில் இச்சொல் இடம்பெறுவதைக் காணமுடிகிறது. இதுபோல் "வருநர்", "உள்ளிச் சென்றோர்" போன்ற பெயர்களும் இடம் பெறுகின்றன. மேலும் கொடுக்கும் செயலுடன் கொடுப்போர் பெயரும் இணைந்து வருவதையும் (தேர்வண் பாரி) அறியமுடிகிறது. இரவலர் என்ற சொற்பதிவு அரசர் முதலான கொடை வழங்குவோரைச் சிறப்பித்தற்பொருட்டு இலக்கியங்களில் இடம்பெறுவதாகத் தெரிகிறது. ஒருவரின் வீரம், ஈகை போன்ற சிறப்புப் பண்புகளை எடுத்துக்கூறும் இலக்கிய மரபு புறப்பொருள் சார்ந்தது. சிறப்பைக் குறித்தல் பொருட்டுக் கொடைத்தன்மை எடுத்துக்கூறப்படும் இடங்களில் இரவலர்கள் வருகின்றனர். இவர்களைப் பொருள் வழங்குவோரின் அடிப்படையில் வகைப்படுத்திப் பார்க்கலாம்.

3.3.1. அரசர் சிறப்பைச் சுட்டும் இரவலர்

3.3.2. வீரர் சிறப்பைச் சுட்டி வருவோர்

3.3.3. களவித் தலைவன் இல்லறத்தலைவி ஆகியோரிடம் வரும் இரவலர்

இரவலரை அறிந்திட இப்பகுப்பு உதவுகிறது.

### 3.3.1. அரசர் சிறப்பைச் சுட்டும் இரவலர்

அரசர்களின் கொடைச்சிறப்பை வெளிப்படுத்தும் கருவியாக இரவலர்கள் கையாளப்பட்டுள்ளனர். புலவர்கள் தம் பாடல்களில் மன்னர்களின் தனிப்புகழைச் சிறப்பிப்பது சங்க இலக்கிய மரபு. இஃது இலக்கியக் கொள்கையாகவும் காணப்படுகிறது. மன்னரின் தோற்றம், அறிவு, ஆற்றல், கொடை போன்றவை இப்புகழ்ச்சியில் அடங்குகின்றன. அறிவுத்திறம் போன்றவை மன்னர்களுடைய சொல், செயல் போன்றவற்றால் வெளிப்படும். கொடைச்சிறப்பைப் புலவர்களின் வாய்மொழியில் இடம்பெறும் கருத்துக்களால் அறியமுடியும். குறிப்பாகப் புலவர், இரவலர், அந்தணர், பொதுமக்கள் போன்றோர்க்கு வழங்கும் தன்மையால் இஃது எடுத்துரைக்கப்படுகின்றது. 'இரவலர்' என்ற சொல்லே பொருள் தருவோரைச் சிறப்பிக்க வருவதாக எண்ண இடமுண்டு.

சங்க இலக்கியங்களில் மிகுதியும் இரவலர் என்ற சொல் காணப்படுகிறது. சங்ககால மன்னர்களான அதிகன், தழும்பன், நள்ளி, பண்ணி, பாரி போன்றோர் குறித்துப் பாடப்பெற்ற பாடல்களில் இரவலர்கள் மிகுதியும் குறிப்பிடப் பட்டுள்ளனர்.

அதிகனைப் பரணர் பாடுங்கால் அவன் இரவலர்க்குப் பரிசளித்ததாகக் குறிப்பிடுகிறார் (அகம்.162). அதியமான் நெடுமான் அஞ்சியின் இருக்கை 'தேர்வீசிருக்கை' (நற்:381) எனப் பாடப்பட்டுள்ளது. இம்மன்னன் இரவலர்க்குத் தேர் வழங்கினான் என்பது உரையாசிரியர் தரும் குறிப்பு.[12] புறநானூறு இவனை 'இரப்போர்க் கீயும்' (புறம்.315) என வெளிப்படையாகக் குறிப்பிடுகிறது. இச்சொல்லிற்கும் (இரப்போர்) 'இரவலர்' என்றே பொருள் கூறப்படுகிறது.[13] இரப்போர், இரவலர் ஒரு பொருட்கிளவிகள்.

ஆடுகோட்பாட்டுச் சேரலாதன் இரப்போர், இரவலர் ஆகியோர்க்குப் பரிசளித்ததாகப் பாடப்பட்டுள்ளது. இச்சொற்கள் முறையே ஆறாம்பத்தில் (பதிற்.ஆறாம்பத்து, பா.52:11, 55:10) இடம்பெற்றுள்ளன. ஆய் அண்டிரன்

இரவலர்க்குப் பரிசளித்ததை "இரவலர் வரூஉம் அளவை, அண்டிரன்..." (நற்.235) என வரும் தொடர் உணர்த்துகிறது. இவனது அரசவை "வண்மகிழ் நாளவை..." (நற்.167) எனப் பாடப்படுகிறது.

நாளவைக்கு இரவலர் வந்த குறிப்புக் காணப்படுகிறது.[14] இவன் இரவலாக்குத் தேரும், யானையும் வழங்கியதைத் "திண்தேர் இரவலர்க்கீத்த..." (புறம்.241), "இரவலர்க் கீத்த யானை..." (புறம்.129) என்னும் தொடர்களால் அறியலாம்.

இளஞ்சேட்சென்னி இரவலர்க்குப் பரிசளித்துள்ளான் (புறம்.203) ஈந்தூர் கிழான் தோயன் மாறனிடம் பொருள் பெற்றோர் 'முதுவாய் இரவலர்' (புறம்.180) எனப்பட்டனர். காரி என்னும் வள்ளல் இரவலர்க்குக் கொடை வழங்கியதாகக் கூறப்பட்டுள்ளது. சிறுபாணாற்றுப்படையும், புறநானூறும் முறையே 'இரவலர்' (சிறு.93, புறம்.122) என்ற சொல்லைக் குறிக்கின்றன. கருங்கையொள்வாள் பெரும்பெயர் வழுதி 'இரவலர்'க்கு வழங்கியதைப் புறநானூறு கூறுகிறது. (பா.3). குட்டுவன் என்பானின் கொடை குறித்த புறப்பாடல் 'வருநர்' என்பாரைக் குறிக்கிறது. (புறம்.343). 'இரவலர்' என்றே இதற்கும் பொருளுரைக்கப்படுகிறது.[15] "முதுவாய் இரவல" என்றும் "இரக்குவார்" (பதிற்.7 ஆம் பத்து) என்றும் செல்வக்கடுங்கோ வாழியாதன் பற்றிய பாடலில் இரவலர் கூறப்படுகின்றனர்.

சோழ மன்னர் ஒருவரைக்குறிக்கும் நற்றிணைப் பாடல், 'இரவலர்'க்கு வழங்கியதை உணர்த்துகிறது.[16] தகடூர் எறிந்த பெருஞ்சேரல் இரும்பொறையைச் சிறப்பிக்கும் பாடல் 'இரப்போர்'க்கு அவன் பொருளீந்ததாகக் குறிக்கிறது (பதிற்.8 ஆம் பத்து, 76:7). 'இரவல் மாக்கள்' என்ற தொடர் தலையாலங்கானத்துச் செருவென்ற பாண்டியன் நெடுஞ்செழியனின் சிறப்புக் குறித்த பாடலில் இடம் பெற்றுள்ளது (புறம்.24). உரையாசிரியர் இதற்கு 'இரக்கும் பரிசிலர்'[17] எனப் பொருளெழுதுகிறார். தழும்பன் என்ற மன்னன் வருநர்க்களித்துள்ளான் (அகம்.227). வருநர் -

இரவலர்.[18] 'நள்ளி' என்னும் வள்ளல் இரப்போர்க்கீந்தான் எனக் கூறப்படுகிறது. (அகம்.238). ஈண்டு 'இரவலர்' இரப்போர் எனக் கூறப்பட்டுள்ளார். சிறுபாணாற்றுப்படையில் முட்டாது கொடுத்தவன் என்று கூறப்படுவதற்கு (சிறு.105) உரையாசிரியர், 'இல்லறத்தார்க்கு வரையாது கொடுத்தான்' என்றெழுதுகின்றார். தன்பால் எய்தியோர் என்ற குறிப்பையும் தருகிறார்.[19] 'பண்ணி' என்னும் மன்னன் இரவலர்க்கீந்தான் என்பது அகநானூறு (பா.13).

பாரி கொடைத்தன்மையில் சிறப்புற்றவன். பொருள் வேண்டி இரந்தோர்க்கும் (புறம்.108), இரவலர்க்கும் (புறம்.119) நல்கிய சிறப்பு,கூறப்பட்டுள்ளது. மலையமான் திருமுடிக்காரி இரவலர்க்கீந்தான் என்பது உரையாசிரியர் குறிப்பு.[20] புறநானூற்றிலும் இத்தகைய குறிப்புள்ளன. அதனை ஔவை சு.துரைசாமிப்பிள்ளை குறிக்கிறார்.[21] சேர, சோழ, பாண்டியர் என்னும் மூவேந்தரும் ஓரிடத்தில் இருந்தகாலை அவர்களைப் புகழ்ந்தும் அறிவுரை கூறியும் ஔவையார் பாடியுள்ளார். இரவலர்க்குக் குறையாது வழங்கியவர்கள் அவர்கள் என்றும், அதனைத் தொடர்ந்து செய்து பெருமை அடைதல் வேண்டும் என்றும் கூறினார் (புறம்.367).

'வல்வில் ஓரி' கடையெழு வள்ளல்களுள் ஒருவன். இரவலர்க்கும் பொருள் உள்ளிச் சென்றோர்க்கும் வழங்கினான் (புறம்.153, 203). குறுநிலத் தலைவன் வீரான் இரவலர்க்குப் பொருள் வழங்கினான். இவனை இரவலர்கள் சென்று கண்டதாகவும் கூறப்படுகிறது.[22]

### 3.3.2. வீரர் சிறப்பைச் சுட்டி வருவோர்

படை வீரர்கள் 'படைகொள் மாக்கள்' எனக் கூறப்படுகின்றனர் (புறம்.29). உறையூர் முதுக்கண்ணன் சாத்தனார் நலங்கிள்ளியைப் பாடுங்கால் அவனுடைய படை வீரர் கூறும் இரவலர்க்குப் பரிசளிக்க வேண்டுகிறார். 'வருநர்க்கு' உதவும்படி அவர் கூறுகிறார். 'வருநர்' இரவலர் எனப் பொருளுரைக்கப்படுகிறது.[23]

### 3.3.3. கிளவித்தலைவன் இல்லறத்தலைவியரிடம் பொருள் பெறும் இரவலர்

கிளவித்தலைவன் செய்யுளுக்கு உரைக்கப்பட்ட துறைகளிலும், செய்யுளிலும் பொதுவாகச் சுட்டப்படும் பெயர்களை உடையவர்கள். இப்பெயர்கள் சிறப்புப் பெயர்களாகவே அமைகின்றன. இவை கருப்பொருள்களை அடையாகக் கொண்டு வரும். பெயர் (இயற்பெயர்) சுட்டப்பெறாமை தனிச்சிறப்பை உணர்த்துகின்றது. 'லெக்சிகன்' கிளவித்தலைவனை "அகப்பொருள் தலைவன்"[24] என்கிறது. இவ்வாறு செய்யுளில் உணர்த்தப்படும் தலைமக்கள், பிறர்க்குப் பொருள் வழங்கியதாகக் குறிப்புக்கள் சான்றோர் செய்யுட்களில் வருகின்றன. இதுபோலவே கிளவித்தலைவியரும் கொடை வழங்கியதாகப் பாடல்கள் தெரிவிக்கின்றன. இவை பற்றிய தகவல்கள் இங்கே விவரிக்கப்படுகின்றன.

கடற்றுறை தலைவர்களைக் கண்டு பொருள் பெற இரவலர்கள் பாத்திரத்துடன் சென்ற குறிப்பு உள்ளது. இது 'இரந்தோர் வருங்கலம்' (அகம்.30) என்று அவர்தம் கையிருந்த பாத்திரத்தைச் சுட்டிக் கூறுகிறது. இவ்வாறு வழங்கிய தலைவனை "கோடுஉயர் திணிமணல் துஞ்சும் துறைவ" (அகம்.30) என்ற தொடரில் காணலாம். துறைவன் கிளவித்தலைவன். இவனை நோக்கி இரவலர் வந்தனர். இரந்தோர்க்கு ஈயாமை தீமை எனத் தலைவன் கூறுகிறான். 'இரந்தோர்க்கு ஒன்று ஈயாமை இழிவு' (கலி.2:11, 15,19) என்பது அவன் கூற்று. இது தலைவன் கூறியதாகத் தோழியின் வழி அறியப்படுகிறது. தலைமக்கள் பொருள் ஈயும் கடப்பாடுடையவர் என்பது கருத்து. கிளவித் தலைவன் ஒருவன் இரவலர் வருவதைப் போற்றிப் பேசுகின்றான். அவனுக்குத் துன்பம் தரும் நாட்களாகத் தன்னை நோக்கி இரவலர் வாராத நாட்களைக் குறிப்பிடுகிறான். இதனை "இரவலர் வாரா வைகல், பலவாகுக..." (குறுந்.137) என்பது தலைவன் கூற்று.

**இல்லறத் தலைவி**

தலைவி தம் இல்லறம் செழிக்க அறநெறி பெருக வேண்டும் என்றும், இரவலர் உதவி பெற்று மகிழ வேண்டும் என்றும் விரும்புகிறாள். இது

*தலைவியின் எண்ணமாகக் குறிப்பிடப்பட்டுள்ளது. "வருக இரவலர்" (ஐங்.மரு.வேட்கைப்பத்து.2) என்பது தலைவிக்கூற்று. குடும்பத்தில் தலைவிக்குரிய தலைமைப் பண்பு இது.*

*பழந்தமிழகத்தில் இல்லறத்தார் குறிப்பாகக் கணவன் மனைவி தம் இல்லம் நோக்கி வருவோரை மகிழ்வுடன் வரவேற்றது மரபாக இருந்தது. கணவன் மனைவி இருவரும் இரவலரை வரவேற்று விருந்தளித்துள்ளனர் (புறம்.333). இஃது 'ஆற்றுப்படை' மரபாகச் செய்யுளில் வந்துள்ளது. கணவன் மனைவி இருவரும் இப்பண்புடையோர் என்பதைப் புலவர் ஒருவர் கூறுவதாக அமைந்துள்ளது.*

### 3.4. கலைஞர்கள் (பரிசில் பெறுவோர்)

*இசை, கூத்துப் போன்ற நுட்பமான கலைகளில் சிறந்தோரையும் கலைஞர் எனக் கூறும் மரபு தமிழில் உள்ளது. பண்டை நாளில் இவர் தம்மை கூத்தர், பொருநர், விறலியர், பாணர் போன்ற பெயர்களால் குறிப்பிட்டனர். கூத்தரை 'ஆடுநர்' எனக் கூறும் மரபுள்ளது. சோழன் நலங்கிள்ளியின் நாட்டின் உட்பகுதி (அகநாடு) கூத்தரின் (ஆடுநர்) ஆடுகளத்தை ஒத்தது என்று புறநானூறு கூறுகிறது.[25] இவர்கள் மன்னர் முதலான பல தரப்பினரிடமிருந்து பொருள் முதலானவற்றைப் பெற்றுள்ளனர். எனவே இவர்களும் பொருள் பெறுவோர் வரலாற்றில் அடங்குகின்றனர். பாணர் - பண் இசைப்போர் (இசை கருவியுடன் பாடுபவர்), பொருநர் - வேடமிட்டு ஆடுபவர். வரலாற்றில் இவர்களும் பெறுவோர் வரிசையில் வைத்தல் பொருந்தும்.*

*அந்தணர், அரசர் போன்ற சமூக உயர் தளத்தில் இருந்தோரிடம் கலைஞர்கள் பொருள் பெற்றமையைப் பின்வரும் அட்டவணை குறிப்பிடுகிறது.*

| பரிசில் பெறுவோர் | இலக்கியம் / பாடல் எண் / அடி |
|---|---|
| கூத்தர் | அகநானூறு - 76<br>பதிற்றுப்பத்து – 2 ஆம் பதிகம், 3 ஆம் பதிகம்:21, 23<br>புறநானூறு -386<br>மலைபடுகடாம் - 158-169, 170-185 |
| பாணர், பாடினி | அகநானூறு - 208, 237, 249, 331, 349<br>கலித்தொகை - 95<br>குறுந்தொகை - 19, 59, 75.<br>சிறுபாணாற்றுப்படை, 129 - 143, 143 - 163, 164 - 177, 178 - 195, 235 - 245, 246 - 261<br>பதிற்றுப்பத்து – 2 ஆம் பத்து:14, 17, 18, 2 ஆம் பதிகம், 3 ஆம் பதிகம்:21, 23, 4 ஆம் பத்து:37, 38, 40<br>5 ஆம் பத்து:43, 48, 7 ஆம் பத்து:67, 9 ஆம் பத்து:86<br>புறநானூறு - 11, 12, 33, 68, 70, 115, 127, 135, 138, 139, 141, 149, 172, 173, 326, 327, 328, 334<br>பெரும்பாணாற்றுப்படை - 23 - 28, 95-105, 117 - 133, 147 - 169, 184 - 196, 243 -256, 257 - 262, 275 - 282, 297 - 310<br>மதுரைக்காஞ்சி - 210 - 237, 751<br>மலைபடுகடாம் -145 – 157 |
| பாடுநர் | அகநானூறு - 349<br>நற்றிணை - 240<br>புறநானூறு - 135, 165, 221, 226, 240, 361 |
| பொருநர் | பதிற்றுப்பத்து – 2 ஆம் பதிகம்<br>புறநானூறு - 138, 279, 386, 389, 390<br>பொருநராற்றுப்படை - 74 - 89, 103 - 119, 120 - 129, 151 - 177<br>மதுரைக்காஞ்சி - 98 - 105 |
| விறலியர் | சிறுபாணாற்றுப்படை - 143 - 163<br>பதிற்றுப்பத்து – 3 ஆம் பத்து:21, 4 ஆம் பத்து:40, 5 ஆம் பத்து:43, 48, 49, 6 ஆம் பத்து:54<br>புறநானூறு - 103, 105, 111, 135, 138, 139, 377<br>மதுரைக்காஞ்சி - 210 -237 |

## 3.5. சான்றோர்

சான்றோர் என்பார் அறிவு, அனுபவம், ஒழுக்கம், பிறர்க்கு உதவுதல், மனிதநேயம் போன்றவற்றில் சிறப்புடைய மனிதர்களை அழைப்பது மரபு. தமிழ்ச் செய்யுளில் சான்றோர் என்ற சொல்லாடல் பயின்றுள்ளது.[26]

இவர்களைப் புலவர் என்று சுட்டுகிற வரலாறு உள்ளது. இச்சான்றோர்கள் மன்னர் முதலானோரிடம் பொருள் பெற்று மகிழ்ந்ததைச் சங்க இலக்கியங்கள் குறிப்பிடுகின்றன. இவர்களுள் ஔவையார், கபிலர், பரணர் போன்ற சான்றோர்களும் இந்த வரிசையில் அடங்குவர். இவர்கள் பற்றிய தனித்தனி விவரங்கள் இங்கே தரப்படுகின்றன.

சான்றோர்களையும் (புலவர்), அவர்களால் பாடப்பட்டோரையும், பரிசில் தருவோரையும், சிறப்புக் குறிப்புக்களையும் ஒரு வரிசை முறையில் குறிப்பிட்ட வேண்டியுள்ளதால் அவ்விவரங்கள் அட்டவணையில் தரப்பட்டுள்ளன.

புலவர்களுக்கும் அரசர்களுக்கும் இருந்த உறவு பற்றிப் பல்வேறு கருத்துக்கள் கூறப்படுகின்றன. புலவர்களில் கிழார் என்போர் செல்வவளம் மிக்கவர்களாக இருந்தனர். இவர்களுடைய செல்வ வளம் அரசர்களுக்கு உதவியாய் இருந்தது என்று கோ.கேசவன் கூறுகிறார்.[27] மற்றவர்கள் நண்பர்களாகவும், அறிவுரை கூறுவோராகவும் இவர்கள் இருந்துள்ளனர்.

**பரிசில் பெறும் சான்றோர் (பெயருடைய புலவர்கள்)**

| | புலவர் பெயர் (சான்றோர்) | பாடப்பட்டோர் | பாடல் இடம்பெற்ற இலக்கியம் | குறிப்புக்கள் |
|---|---|---|---|---|
| 1. | அரிசில் கிழார் | அதியமான், எழினி, கழுவுள், கொங்கர், செல்வக் கடுங்கோ வாழியாதன், தகடூரெறிந்த பெருஞ்சேரலிரும் பொறை, பூழியர், பேகன், பொறையன், வேளாவிக் கோமன் பதுமன், வேளிர் | குறுந்தொகை - 193<br>பதிற்றுப்பத்து - 8 ஆம் பத்து<br>புறநானூறு - 146, 230, 281, 285, 300, 304, 342 | இவருடைய பாடல்களில் ஒரு பாடலில் (புறம்.146) இவர் பரிசில் பெற்ற குறிப்புள்ளது. |

| | புலவர் பெயர் (சான்றோர்) | பாடப்பட்டோர் | பாடல் இடம்பெற்ற இலக்கியம் | குறிப்புக்கள் |
|---|---|---|---|---|
| 2. | ஐயூர் முடவனார் | ஆதன் எழினி, குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளி வளவன், கூடகாரத்துச் துஞ்சிய மாறன் வழுதி, கோசர், செம்பியா, தாமான் தோன்றிக் கோ | அகநானூறு - 216<br>குறுந்தொகை - 123, 206, 322<br>நற்றிணை - 206, 334<br>புறநானூறு - 51, 228, 314, 399 | ஒரு புறநானூற்றுப் பாடல் (399) இவர் கொடைப் பெற்ற செய்தியை கூறுகின்றது. |
| 3. | ஔவையார் | அதியமான் நெடுமானஞ்சி, அதியர், எழினி, கானப் பேர் தந்த உக்கிரப்பெருவழுதி, கைவண் கிள்ளி, கோசர், தொண்டைமான், நாஞ்சில் வள்ளுவன், பசும்பூட் பொறையன், பரணர், பாரி, பொருட்டெழினி, மழவர், மாரிவெண்கோ, முடியன், இராசசூலம் வேட்ட பெருநற் கிள்ளி, வெள்ளி வீதி | அகநானூறு - 11, 147, 273, 303<br>குறுந்தொகை - 15, 23, 28, 29, 39, 43, 80, 91, 99 ? 102, 158, 183, 200, 364, 388<br>நற்றிணை - 129, 187, 295, 371, 381, 390, 394<br>புறநானூறு - 87 - 104, 140, 187, 206, 231, 232, 235, 269, 286, 290, 295, 311, 315, 367, 390, 392 | அதியமானிடம் பரிசில் பெற்றது மிகுதியானப் பாடல்களிலும், நாஞ்சில் வள்ளுவனிடம் பரிசில் பெற்றது ஒரு பாடலிலும் இடம் பெற்றுள்ளது.<br>( புறம்.91-140, 206, 390) |
| 4. | கபிலர் | அகுதை, அந்துவன், ஆரியவரசன் பிரகத்தன், இருங்கோவேள், எவ்வி, ஓரி, கண்ணகி, கழாத் தலையார், செல்வக் கடுங்கோ வாழியாதன், சேரலர், நள்ளி, பாரி, பாரிமகளிர், பேகன், பொறையன், மலையமான் திருமுடிக்காரி, விச்சிக்கோன் | அகநானூறு - 2, 12, 18, 42, 82, 118, 128, 158, 182, 203, 218, 248, 258, 278, 292, 318, 332, 382.<br>ஐங்குறுநூறு - 201 -300 (குறிஞ்சி)<br>கலித்தொகை - 37 - 65 (குறிஞ்சிக் கலி)<br>குறுந்தொகை - 13, 13, 25, 38, 42, 87, 95, 100, 106, 115, 121, 142, 153, 187, 198, 208, 225, 241, 246, 249, 259, 264, 278, | புறநானூற்றில் இரண்டு பாடலிலும் (114, 121), பதிற்றுப்பத்தில் ஒரு பாடலிலும் (9.85), இவரது பரிசில் பொருண்மை குறிப்புள்ளது |

| | புலவர் பெயர் (சான்றோர்) | பாடப்பட்டோர் | பாடல் இடம்பெற்ற இலக்கியம் | குறிப்புக்கள் |
|---|---|---|---|---|
| | | | 291, 312, 355, 357, 361, 385<br>நற்றிணை - 1, 13, 32, 59, 65, 77, 217, 222, 225, 253, 267, 291, 309, 320, 336, 353, 359, 368, 373, 376<br>பதிற்றுப்பத்து - 7ம் பத்து<br>புறநானூறு - 8, 14, 105 -111, 113 -124, 143 - 200, 201, 202, 236, 337, 347<br>பத்துப்பாட்டு: குறிஞ்சிப் பாட்டு | |
| 5. | காவிரிப்பூம்பட்டினத்துக் காரிக்கண்ணனார் | ஆய் அண்டிரன், இலவந்திகைப் பள்ளித்துஞ்சிய நன்மாறன், இளம்பல் கோசர், குராப்பள்ளித் துஞ்சிய பெருந்திருமாவளவன், சோழர், பிட்டங்கொற்றன், வடுகர், வெள்ளியம்பலத்துத் துஞ்சிய பெருவழுதி | அகநானூறு - 107, 123, 285<br>குறுந்தொகை - 297<br>நற்றிணை - 237<br>புறநானூறு - 57, 68, 169, 171, 353 | புறநானூற்றில் இரு பாடல்களில் (169, 171) மட்டும் பரிசில் பெறும்பொருண்மை சுட்டப்பட்டுள்ளது. |
| 6. | கோவூர் கிழார் | இளந்தத்தன், குராப்பள்ளித் துஞ்சிய கிள்ளிவளவன், குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவன், சிறுகுடிகிழான் பண்ணன், தென்னப் பொருப்பன், நலங்கிள்ளி, நலங்கிள்ளி நம்பி மாவளத்தன், நெடுங்கிள்ளி, மலையமான் மக்கள், வடபுலத்தரசு | குறுந்தொகை - 65<br>நற்றிணை - 393<br>புறநானூறு - 31, 32, 33, 41, 44, 45, 46, 47, 68, 70, 308, 373, 382, 386, 400 | இவருடைய பாடல்களில் ஒரு பாடலில் (புறம்.382) இவர் பரிசில் பெற்ற குறிப்பு இடம்பெற்றுள்ளது. |
| 7. | நன்னாகனார் | ஓய்மான் நல்லியக்கோடன், ஓய்மான் வில்லியாதன், கரும்பனூர் கிழான், பாரி | புறநானூறு - 176, 376, 379, 381, 384 | புறநானூற்றில் ஒரு பாடல் (376) இவர் பரிசில் பெறுதலை குறிப்பிட்டுள்ளது. |
| 8. | பரணர் | அகுதை, அதிகன், அதியமான், அழிசி, அறுகை, அன்னி மிஞிலி, ஆட்டனத்தி, ஆதிமந்தி, | அகநானூறு - 6, 62, 76, 116, 122, 125, 135, 142, 148, 152, | பரணர் பாடல்களில் வள்ளல் மூவரிடம் பரிசில் பெற்றமை புறநானூற்று |

| | புலவர் பெயர் (சான்றோர்) | பாடப்பட்டோர் | பாடல் இடம்பெற்ற இலக்கியம் | குறிப்புக்கள் |
|---|---|---|---|---|
| | | ஆய், ஆய் எயினன், ஆரிய அண்ணல், ஆரியப் பொருநன், ஆரியர், உருவப்பஃறேரினஞ்சேட் சென்னி, எழுமுடி மார்பினெய்திய சேரல், எவ்வி, ஐயை, ஓரி, கட்டி, கடல் பிறக்கோட்டிய செங்குட்டுவன், கண்ணகி (கடவுள் பத்தினி), கண்ணகி (பேகன் மனைவி) கணையன், கழுவுள் கட்டுவன் சேரல், குடவர் கோமான், நெடுஞ்சேரலாதன், குறும்பின், கொங்கர், கோசர், செழியன், சேந்தன், சோழர், ஞிமிலி, தழும்பன், தித்தன், திதியன், நல்லடி (வல்லங் கிழவோன்), நள்ளி, நன்னன், நன்னன் உதியன், நெடுமிடல், பசும்பூட் பொறையன், பேகன், பொறையன், மணக்கிள்ளி, மத்தி, மருதி, மலையன், மாந்தரன் பொறையன் கடுங்கோ, மிஞிலி, மோகூர், விச்சியர் பெருமகன் வீரான், வெளியன் வேண்மான், வேண் மகளிர், வேண்முது மாக்கள், வேற்பஃடக்கைப் பெருவிறற்கிள்ளி, வேளிர் | 162, 178, 181, 185, 196, 198, 208, 212, 222, 226, 236, 256, 258, 262, 266, 276, 322, 326, 356, 367, 372, 376, 386, 396<br>குறுந்தொகை - 19, 24, 36, 60, 73, 89, 120, 128, 165, 199, 258, 292, 298, 328, 393, 399<br>நற்றிணை - 6, 100, 201, 247, 260, 263, 270, 280, 300, 310, 350, 356<br>பதிற்றுப்பத்து - 5ம் பத்து (41 - 50)<br>புறநானூறு - 4, 63, 141, 142, 144, 145, 336, 341, 343. 348. 352, 354, 369 | பாடல்களில் (145, 150, 152) இடம்பெற்றுள்ளது. |
| 9. | பெருங்குன்றூர்கிழார் | ஆவியர், உருவப்பஃறேர் இளஞ்சேட்சென்னி, கண்ணகி, கபிலன், கழுவுள், குடக்கோ இளஞ்சேரல், இரும்பொறை, கொங்கர், சென்னியர், நன்னன், பழையன் மாறன், பூழியர், பெருஞ்சோழன், பேகன், பொத்தி, மையூர்கிழான், விச்சி, வேண்மான் அந்துஞ்செள்ளை, வேளிர் | அகநானூறு - 8<br>குறுந்தொகை - 338<br>நற்றிணை - 5, 112, 119, 347<br>பதிற்றுப்பத்து - ஒன்பதாம் பத்து (81 -90)<br>புறநானூறு - 147, 210, 211, 266, 318 | இவருடைய பாடல்களில் ஒரு பாடலில் (புறம்.147) இவர் பரிசில் பெற்ற குறிப்புள்ளது. |
| 10. | பெருஞ்சித்தரனார் | அதியமான் நெடுமானஞ்சி, ஆய், இளவெளிமான், எழினி, | புறநானூறு - 158, 159, 160, 161, 162, 163, | பரிசிலை மறுத்த வரலாறு இவருக்குண்டு |

| | புலவர் பெயர் (சான்றோர்) | பாடப்பட்டோர் | பாடல் இடம்பெற்ற இலக்கியம் | குறிப்புக்கள் |
|---|---|---|---|---|
| | | ஓரி, குமணன், நள்ளி, பாரி, பேகன், மலையன், மோசி, வெளிமான் | 207, 208, 237, 238 | (புறம்.208) பரிசில் பெற்றக் குறிப்பு ஐந்து பாடல்களில் (புறம்.158, 159, 161, 162, 163) உள்ளது. |
| 11. | பெருந்தலைச் சாத்தனார் | இளங்கண்டீரக்கோ, இளங்குமணன், இளவிச்சிக்கோ, கடியநெடுவேட்டுவன், குமணன், தென்னவன், நன்னன், பண்ணி, மூவன் | அகநானூறு - 13, 224<br>நற்றிணை - 37<br>புறநானூறு - 151, 164, 165, 205, 209, 294 | இவர் பரிசில் பெற்றமை புறநானூற்றில் ஒரு பாடலில் (209) குறிப்புள்ளது. |
| 12. | மதுரைக் குமரனார் | இலவந்திகைப் பள்ளித்துஞ்சிய நலங்கிள்ளி, ஈர்ந்தூர்க் கிழான் தோயன் மாறன், ஏனாதி திருக்கிள்ளி, ஏனாதி திருக்குட்டுவன் குராப்பள்ளித் துஞ்சிய பெருந்திரு மாவளவன், குட்டுவன் கோதை, சேட்சென்னி | புறநானூறு - 54, 61, 167, 180, 197, 394 | புறநானூற்றில் ஒரு பாடலில் (394) இவர் பரிசில் பொருண்மை குறிப்பிடப்பட்டுள்ளது. |
| 13. | மாங்குடி மருதனார் | எவ்வி, குட்டுவர், கோசர், கோதை, தலையாலங்கானத்து செருவென்ற பாண்டியன் நெடுஞ்செழியன், தென்பரதவர், தென்னவன், நன்னன், நிலந்தருதிருவின் நெடியோன், பழையன், மழவர், மாறன், மானவிறல்வேள், யாதன் (வேள்), வாட்டிற்று எழினி, வாணன், வேளிர் | அகநானூறு - 89<br>குறுந்தொகை - 164, 173, 302<br>நற்றிணை - 120, 123<br>பத்துப்பாட்டு - மதுரைக்காஞ்சி முழுவதும்,<br>புறநானூறு - 24, 26, 313, 335, 372, 396 | மாங்குடி மருதனார் பரிசில் பெற்றமை (புறம்.372) ஒரு பாடலில் இடம் பெற்றுள்ளது. |
| 14. | மாறோகத்து நப்பசலையார் | அவியன், கபிலன், குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவன், செம்பியன், சோழன், சோழிய ஏனாதித்திருக்கண்ணன், மலையமான் திருமுடிக்காரி, வளவன், வானவன் | குறுந்தொகை - 304<br>புறநானூறு - 37, 39, 126, 174, 226, 280, 283 | இவருடைய பாடல்களில் புறநானூற்றுப் பாடல் (126) ஒன்றில் பரிசில் பெற்றமை பற்றிக் கூறப்பட்டுள்ளது. |

*சான்றோருள் புலவர் என்று (பெயரில்லாது) சுட்டப்படுவோர் பலர் இருந்தனர். இவர்களும் பரிசில் பெறுவோர் வரிசையில் அடங்குகின்றனர். நன்னன் என்ற மன்னன் புலவர்க்குப் பரிசில் வழங்கியமை “புலவோர்க்குச்*

சுரக்கும் அவன் ஈகை மாரியும்" (மலை.72) என்பது இலக்கியம். இதுபோலவே கலித்தொகை, பதிற்றுப்பத்து, பரிபாடல், புறநானூறு, பத்துப்பாட்டு (மலைபடுகடாம்) ஆகிய இலக்கியங்கள், புலவர்கள் பரிசில் பெற்றமையைக் கூறுகின்றன.

## 3.6. தெய்வம், தேவர், புராணம்

சங்க இலக்கியங்களில் பொருள் பெறும் மாந்தர்களுள் தெய்வம், தேவர் போன்றோர் அடங்குகின்றனர். இதுபோலப் புராணக்கதைகளில் வரும் மாந்தர்களும் இரவலராகப் (பரிசிலர்) பொருள் பெறுகின்றனர். இலக்கியப் பதிவுகளை ஆய்வுக்கு உட்படுத்தும்போது அவை ஆய்வுத் தலைப்பை ஒட்டிச் செல்வதால் இவர்களையும் இவ்வரிசையில் அமைக்கவேண்டிய தேவையுள்ளது. இவ்வாறு வரும் இரவலர்கள் பற்றிய தரவுகள் இங்கே விளக்கப்படுகின்றன. ஆய் அண்டிரன், நாகன் என்னும் மன்னனிடம் பெற்ற உயர்ந்த மணிகளையும், சிறந்த ஆடைகளையும் கோயிலில் இறைவனுக்கு வழங்கியதாகச் செய்தி ஒன்று கூறுகிறது (சிறு.95).

தேவதானம் என்பது கோவிலுக்கு வழங்கிய நிலத்தைக் குறிக்கும்.[28] செல்வக்கடுங்கோ வாழியாதன் தன் ஆட்சிக்காலத்தில் கோவிலுக்கு நிலம் வழங்கியது கூறப்படுகிறது (பதிற்.7 ஆம் பத்து).

பரிபாடலில் முருகன், திருமால் போன்ற தெய்வங்கள் சிறப்புற வாழ்த்தப்படுகின்றன. இத்தெய்வங்கள் கோயில் கொண்டிருக்கும் இடங்களும், அவற்றில் சென்று மன்னர் முதலானோர் வணங்கியதும் பலிபொருள் ஈந்ததும் கூறப்படுகின்றன. அவ்வகையில் முருகனுக்குச் செய்த சிறப்புக்கள் கூறப்படுகின்றன. இங்கு முருகன் பொருள் பெறுவோர் வரிசையில் வைத்து எண்ணப்படுகிறான்.

தேவர்கள் கடவுள் தன்மை பெற்றவர்கள் என்பது கருத்து. இவர்களின் இயல்புகள் தமிழ் இலக்கியங்களில் மிகப் பழங்காலந்தொட்டே பதிவாகியிருக்கின்றன. தெய்வம், தேவர் போன்ற சொற்கள் இவர்க்குரியன.

இவை வடமொழிச் சொல்லின் திரிபு என்பர். "மக்கள், தேவர் நரகர்..."[29] "தேவரனையர்..."[30] போன்ற சொற்களின்வழி இதனை அறியலாம். புராணங்களிலும் தேவர்கள் பற்றிய செய்திகள் இடம்பெற்றுள்ளன. பரிபாடலில் திருமாலிடம் தேவர்கள் சிறப்புப் பெற்றுச் சென்றமை காணப்படுகிறது (பா.3:33). இது பரிசில் பெறுதலில் அடங்கும்.

**புராணக் கொடைச் செய்திகள் (சங்க இலக்கியக் குறிப்பு)**

புராணங்களில் கூறப்படும் கொடைச் செய்திகள் சங்க இலக்கியத்தில் இடம்பெற்றுள்ளன. புராணக்கதைகள் காவியத் தொடர்புடையன. குறிப்பாகப் பாண்டவர்கள் குறித்த செய்திகள் மகாபாரதத்தில் இடம்பெறுவன. காப்பிய மாந்தர்களாகிய பாண்டவர் மற்றும் கௌரவர் (கௌரவர்கள்) ஆகியோரின் இருபெரும் படைகளும் அக்காலத்தில் வாழ்ந்த பெருஞ்சோற்றுதியஞ் சேரலாதன் அளித்த பெருஞ்சோறுண்டன (புறம்.3). இங்கு இருபெரும் படைகளும் பொருள் பெறுவோராய்ப் புனைந்து இருப்பது எண்ணத்தக்கது.

### 3.7. பரிசிலர்

பரிசிலர் தமிழில் இலக்கிய வழக்குச் சொல்லாக அமைந்திருக்கிறது. இது சங்க இலக்கியத்தில் பதிவாகியிருப்பதால் இச்சொல்லின் பழமை அறியப்படுகிறது. இச்சொல் சமூக அமைப்பையும் அரசியல் சூழலையும் விளக்குவதாக உள்ளது. பரிசிலர் பல்வேறு வகையினராய்க் காணப்படுவர். "பரிசிலர் என்னும் சொல் புலவர்க்கும் பாணர் முதலான கலைஞர்க்கும் பொதுவாக வழங்கிற்று"[31] என்பர். பரிசில் வழங்கல் பல்வேறு இடங்களில் நடந்துள்ளது. இச்சொல்லை இலக்கிய வழியாகவும், இலக்கிய உரை வழியாகவும் அறிந்துகொள்ள முடிகிறது. சங்க இலக்கியங்களில் "பரிசிலர்" சொல் அகநானூறு, குறுந்தொகை, சிறுபாணாற்றுப்படை, திருமுருகாற்றுப்படை, பதிற்றுப்பத்து, புறநானூறு, மலைபடுகடாம் போன்ற இலக்கியங்களில் காணப்படுகிறது.[32] பரிசிலர்கள் பொருள் பெற்றுச் செல்வதும் பொருள் தருவோரை வாழ்த்திச் செல்வதும் மரபு. "மக்களால்

வரிசை தந்து நன்கு மதிக்கும் உயர்ந்த பரிசுடையராதலின் இவர்களைப் 'பரிசிலர்' என்ற பெயரால் தமிழர் பாராட்டிப் போற்றுவாராயினர்."[33]

பரிசிலர் இருபதுக்கும் மேற்பட்ட இடங்களில் சங்க இலக்கியங்களில் வருகின்றனர். இவர்களின் பண்பு, செயல் ஆகியவை பாடல்களில் பதிவாகியிருக்கின்றன. இவற்றின் மூலம் இவர்கள் வாழ்ந்த நாடு பற்றியும், தொடர்பு கொண்ட மன்னர்கள் பற்றியும் பெற்ற பொருள்கள் குறித்தும், சமூகப் பொருளாதார சூழல் குறித்தும் அறிந்துகொள்ளுமாறு பாடல்கள் இடம்பெற்றுள்ளன.

'பரிசிலர்' மன்னர்களிடம் பொருள் பெற்றுச் செல்வதே அடிப்படை. பரிசிலர்களை உவமையாகக்கூறி அதன்மூலம் மன்னர்களின் கொடைத்தன்மையும், பரிசிலரின் வாழ்க்கையும் கூறப்படுகின்றன (அகம்.65, 311). பொருளை வழங்கும் மன்னர்களின் தனிச்சிறப்புக்களும் பரிசிலர் இடம்பெற்றுள்ள பாடல்கள்வழித் தெரியப்பெற்றுள்ளன. 'பரிசிலர் கோமான்' (குறுந்.59) என்று நள்ளி புகழப்படுகிறான். திருமுருகாற்றுப்படையில் "பரிசிலர் தாங்கும் நெடுவேள்" என முருகன் புகழப்படுகிறான் (அடி.273). பரிசிலர்க்குப் பொருள் கொடுக்கும் அரசர் அந்தப் பொருளாகவே புகழப்படுகிறார் (பதிற்.2 ஆம் பத்து. 15, 38, 5 ஆம் பத்து 65). இவ்வாறு பரிசிலரைப் பற்றிய குறிப்புகள் பரிசு வழங்கும் மன்னர்களையும் இணைத்துக் கூறுகின்றன.

மன்னரைப் புகழும் பரிசிலர் பற்றிய குறிப்புக்கள் மன்னனின் பண்பினையும் புகழ்ந்துரைக்கின்றன. பரிசிலர் வந்து கேட்டால் பாரி தன்னையே கொடுத்துவிடுபவன் என்று பாரியின் பண்பு கூறப்பட்டுள்ளது (புறம்.108). இதனையடுத்துப் பரிசிலர் வாழ்க்கை சிறந்த வாழ்க்கையென்றும் பேசப்படுகின்றது (சிறு.215). 'பரிசிலர்' பரிசு தரும் மன்னர்களை உயர்த்திக் கூறும் பண்பு காணப்படுகிறது (பதிற்.2 ஆம்பத்து 15). போர்க்களத்திலும் தன்னைப் புகழ்வோர்க்குப் பரிசு தருவான் என்று மன்னர்களைப் பரிசிலர்

பாராட்டுகின்றனர் (பதிற்.5ம் பத்து 47). பொருள் வழங்கும் மன்னன் இறந்தபோது பரிசிலர் இரங்கிப் புலம்புகின்றனர் (புறம்.237).

பரிசிலர்களைப் பற்றிய பாடல்கள் அவர்களுடைய செயல்களையும் குறிப்பிட்டுக் காட்டுகின்றன. மன்னர்களைப் பாடுதல் அனைத்தும் பரிசிலரின் செயலாகக் காணப்படுகின்றன. இவர்கள் பாடிப் பரிசில் பெற்ற செய்தி பதிற்றுப்பத்து, புறநானூறு ஆகிய நூல்களில் இடம்பெற்றுள்ளன (பதிற்.4 ஆம் பத்து. 58, புறம்.135). பரிசிலர் பாராட்டு 'நெடுமொழி' எனக் கூறப்படுகிறது (நற்.347). 'பரிசிலர்' அரசனைக் காண வருதல் குறிக்கப்படுகிறது (புறம்.135). மன்னருக்காகப் பரிசிலர் காத்திருந்து கண்டு சென்றுள்ளனர் (புறம்.398). இவர்கள் அருகில் இல்லாமல் வெகு தொலைவிலிருந்து வருகின்றனர் (மலை. அடி.492). பரிசிலர்கள் பற்றிய பாடல்களில் மிகுதியானவை அவர்கள் பெற்ற பொருள்களை விவரிக்கின்றன. சிலவற்றில் வழங்கப்பட்ட பொருள்கள் வெளிப்படையாக குறிக்கப்பட்டிலது.

### 3.8. பொது மக்கள்

பொதுவாகப் பரிசில் வழங்கும் மரபும், மன்னர்களிடமிருந்து பெறும் மரபும் புலவர்களிடமிருந்தும் தோன்றுகின்றன. கால வளர்ச்சிப் போக்கில் கொடுப்போரும் கொள்வோரும் மாறுகின்றனர். கொடுத்தலும், பெறுதலும் என்ற மரபு மட்டும் தொடர்ந்து வருகிறது. இத்தகைய வளர்ச்சியில் பொதுமக்களும் பெறுவோர் ஆகின்றனர். மன்னர் முதலானோர் அல்லாத பொதுமக்கள் 'பிறர்' எனக் குறிக்கப்படுகின்றனர். அவர்கள் பொருள் பெற்றுச் சென்ற நிகழ்வுகள் சங்கப் பாடல்களில் காணப்படுகின்றன. கிளவித்தலைவன், தலைவி, நகரில் உள்ளோர், பரத்தை, பரிசில் மாக்கள், புண்ணியம் செய்ய இயலாதோர், புறஞ்சிறை மாக்கள், பெற்றோர், பொருள் நயந்து வந்தோர், வழிச் செல்வோர், வறியோர், விருந்தினர் ஆகியோர் 'பொதுமக்கள்' எனக் குறிப்பிடப்படுகின்றனர். கொடை வழங்கல் மற்றும் பெறுதல் குறித்து இங்கு இவர்கள் விவாதிக்கப்படுகின்றனர். "கிளவித் தலைவன்" என்பவன் சங்கப் பாடல்களில் பாடலுக்குரிய பெயர்ச்சுட்டபடாத ஆண்மகன். கிளவித்தலைவன் எனச் சுட்டப்படுவது இலக்கிய மரபு. இதுபோல வருகிற தலைமக்கள்

புலவர்களைப் போலவும், இரவலர்களைப் போலவும் பெறுவோராகச் சுட்டப்படுகின்றனர். "கிளவித் தலைவனாகப்படுவோர்" தலைவியிடத்தும், தலைவியின் பெற்றோரிடத்தும் பெறுவோராக வருகின்றனர் (ஐங்.குறி.300, கலி.61, 104, 139, 141).

குடும்ப உறவில் பெண்கள், தந்தை வழங்க, தாம் பெற்றுச் செல்வோராய்க் காணப்படுகின்றனர் (நற்.136, பரி.20:74-78). இவர் தலைவியர் எனப்படுவர். இவர்களுக்கென்று தனித்தனிப் பண்புகள் உள்ளதாகக் குறிப்பிடுவர்.

வெற்றி மகிழ்ச்சியுடன் சென்ற அரசர் தன் எதிரில் நிற்கும் நகர மக்களுக்கு வழங்கியதாகவும், பொதுமக்கள் பெற்றதாகவும் இலக்கியங்கள் கூறுகின்றன. இங்குப் பெறுவோர் நகர மக்கள் (பதிற்.9 ஆம்பத்து). பரத்தை தலைவனிடம் பொருள் பெறுவோராய் வருதல் பரிபாடலில் காணமுடிகிறது (20-33).

பொருள் விரும்பிச் சென்றோர் பாடல் பாடுகின்றவராயினும், பாடும் திறம் இல்லாராயினும் பொருளை விரும்பிச் செல்லுகின்ற மக்களைப் பரிசில் மாக்கள் என உரையாசிரியர்கள் கூறுகின்றனர்.[34]

புண்ணியம் செய்தற்குப் பொருள் வசதியற்றோர் புண்ணியம் செய்தற்காகச் சிலர் உதவியிருக்கின்றனர். இவ்விடத்துப் புண்ணியம் செய்ய இயலாதோர் பெறுவோராகின்றனர் (பட்.210) "புண்ணியம்" என்பது அறச்செயல்களைக் குறிக்கும்; அறச்செயல்களால் உண்டாகும் பயனையும் குறிக்கும்.

வயலின் உட்புறத்தில் இருந்த பொதுமக்கள் கொடுப்போராகவும், வெளியில் இருந்தோர் (புறஞ்சிறை மக்கள்) பெறுவோராகவும் வயலின் விளைபொருள் கொடுபொருளாகவும் பாடலில் இடம்பெற்றுள்ளன (புறம்.28) இங்குப் பெறுவோர் புறஞ்சிறை மாக்கள் ஆவர்.

*திருமண உறவில் சடங்குகளாகச் சிலவற்றைக் கூறுகின்றனர். கொடுப்போர் பெண்ணைப் பெற்றவராகவும் (தந்தை, தாய்) மணமுடிப்போர் பெறுவோராகவும் சுட்டப்பட்டுள்ளனர். இவர்கள் கொடுத்ததும், பெற்றதும் அடுத்த இயல்களில் விளக்கப்படுகின்றன. எனவே இங்குப் பெறுவோர் மணமுடிப்போர் ஆவர் (அகம்.280).*

*நயந்தோர் என்பது கொடைப்பொருளை விரும்பி வந்த ஒரு சாரார் புலவர் அல்லாத பொருள் மட்டும் விரும்பி வந்தோரை "நயந்தோர்" என உரையாசிரியர்கள் குறிக்கின்றனர்.*[35] *பொருள் நயந்து வருவோர் இங்குப் பெறுவோர் ஆகின்றனர்.*

*வழிச் செல்வோரை ஆற செல்வோர் (அகம்.393) என்று கூறுவது சங்க இலக்கிய மரபு. செல்வோர் அவ்வழியிடத்தே வாழும் மக்களிடம் எதையும் பெற்றுச் செல்வது வழக்காக இருந்துள்ளது. இவர்கள் பல்வேறு வாழ்நிலையில் உள்ள மக்களைச் சந்தித்துச் செல்கின்றனர் (அகம்.311, 393, மலை.280, 405, 422).*

*வறியவரைச் சங்க இலக்கியம் "வருந்தி வந்தோர்" எனக் குறிக்கின்றது (புறம்.27). வறியவர்கள் இலக்கியப் பதிவின்படி மன்னர்களிடம் பெறுவோராக வருகின்றனர் (புறம்.27, 95).*

*பெண்கள் வரும் விருந்தினரை விருந்தயர்தல் மரபாக இருந்துள்ளதைப் பழந்தமிழ் இலக்கியங்கள் எடுத்துரைத்துள்ளன. பதிற்.3-30, புறம்.331) ஆய்வில் இவ்விடத்து விருந்தினர் பெறுவோராய் அமைகின்றனர்.*

### 3.9. மன்னர்

*மன்னர்களின் வரலாற்றில் "வழங்குதல்" அவர்தம் ஆட்சிமுறைக்குரியது. இது தமிழ் மரபு. சில இடங்களில் இம்மன்னர்களே பொருள் பெறுவோராகவும் வருகின்றனர். இங்கு, பெறுதல் என்பது அரசியல் குறித்து நிகழ்கிறது. மன்னர்களே பெறுவோராக இடம்பெறுவது*

*புறநானூற்றில் காணமுடிகிறது. புறப்பாடல் ஒன்றில், இருங்கோவேள் என்ற மன்னன் ஒன்றைப் பெற்றுச் செல்லும் பெறுவோராக - பெறுநராகக் கபிலரால் குறிக்கப்பெறுகிறான் (201). கபிலர் மூவேந்தர்களை நோக்கிப் பாரியிடம் ஆற்றுப்படுத்தியது புறநானூற்றில் கூறப்பட்டுள்ளது. அதில் ஆற்றுப்படுத்தப்படுவோராக (பெறுவோர்) மூவேந்தர்கள் வருகின்றனர் (புறம்.109, 110). பாண்டிய மன்னர்கள் போர் நடவடிக்கைகளில் தம் தேவையை நாலைகிழவனிடம் நிறைவு செய்து கொண்டனர் என்பதைப் புறநானூறு கூறுகிறது (பா.176). இங்குப் பெறுவோராகப் பாண்டியர்கள் இடம்பெறுகின்றனர்.*

### 3.10. படைவீரர்

*போரில் கலந்துகொண்டு வெற்றி பெற்ற வீரர்களுக்குப் பாராட்டுச் செய்வது தமிழ் மரபு. தொல்காப்பியப் புறத்திணையியல், புறப்பொருள் வெண்பாமாலை போன்றவற்றில் வீரர்களுக்குப் பாராட்டுச் செய்தல் குறிக்கப்பட்டுள்ளது. போரில் வெற்றி பெற்ற வீரர்களுக்கும் விழுப்புண் பட்டோருக்கும் பாராட்டுக்கள் நடந்துள்ளன. “களிறெறிந்து பெயர்தல் காளைக்குக் கடனே”*[36] *என்பது போர் வீரர்களின் வெற்றியைக் குறிக்கிறது. வெற்றி பெறுவோரைச் சிறப்பிக்கும் அகநானூறு (266, 295), பதிற்றுப்பத்து (5 ஆம் பத்து, 42, 43), புறநானூறு (326, 327, 330) ஆகிய இலக்கியங்களில் பாராட்டு மற்றும் பொருள் பெறுவோராய் வீரர்கள் வருகின்றனர். புலவர்களைப் போலவே வீரர்களும், சிறப்பிக்கப்படுகின்றனர்.*

### பிறர்

*மேற்குறித்த பெயர்களெல்லாம் அகரவரிசைப்படி அமைக்கப்பட்டன. இப்பெயர்ப் பண்புகளுள் வராத மக்கள் இத்தலைப்பில் விவரிக்கப்படுகின்றனர். இவர்கள் நண்பர், விருப்பமுடையவர், நல்லோர், எல்லோர்க்கும் வழங்கும் பண்புடைய ஒருவரிடம் சென்று பெறுவோர் ஆகியோர் இப்பகுதியில் அடங்குகின்றனர். மேலும் இலக்கியத்தில் நின் நயந்தோர்க்கு வழங்குக என்றவிடத்து வருவோரும், ‘நீ நயந்தோர்க்கு*

வழங்குக' என்றவிடத்து வருவோரும், பெறுவோராக வருகின்றனர் (புறம்.331) பொருள் வேண்டாத பரிசிலரைக் "கொள்ளலர்" (புறம்.182) எனவும் கூறுவர்.

**தொகுப்புரை**

பரிசில் பெறுவோர் சங்க இலக்கியத்தின் வழியாகக் கிடைத்த ஆதாரங்களின்படி இவ்இயலில் சுட்டிக்காட்டப்பட்டுள்ளனர். அஃறிணைகளுக்குப் பரிசு வழங்கியமை, அதற்கான காரணங்கள், அந்தணர்கள் பரிசு பெற்றமைக்கு உரிய சூழல்கள், இரவலர்கள் பற்றிய விளக்கம், அவர்கள் பெற்ற பரிசுகள், அவற்றின் தன்மை ஆகியன விளக்கப்பட்டுள்ளன. கலைஞர்கள் என அழைக்கப்படுவோர் விவரம் அவர்கள் பெற்ற பரிசில்கள், பரிசில் பெற்றதன் அடிப்படைகள் (காரணம்) ஆகியன கூறப்பட்டுள்ளன. சான்றோர் பற்றிய குறிப்புகள், சான்றோர் பெற்ற பரிசில்கள், காரணங்கள் ஆகியன குறிப்பிடப்பட்டுள்ளன. தெய்வம், வாழ்த்து முதலியன பெறுவது, தெய்வங்களுக்கு ஆயுதங்கள் வழங்குவது, தேவர்கள் வாழ்த்துப் பெறுவது, புராணக்கதைகளில் கொடை நிகழ்ச்சிகள் வருவது ஆகியன குறிப்பிடப்பட்டுள்ளன. "பரிசிலர்" என்ற பெயரில் வருவோர், பெற்ற பரிசுகள் அவற்றின் தன்மை ஆகியன விவரிக்கப்பட்டுள்ளன. பொதுமக்கள் பிரிவில் அடங்குவோர், பெற்ற பரிசில்கள், பொதுமக்கள் குறித்த வரையறை, மன்னர்களாக வரும் சிலர் பெற்ற பரிசுகள், அவற்றின் அடிப்படையில் போர் வீரர்கள் பெற்ற பரிசுகள், உரிய காரணங்கள் ஆகியவை எடுத்துக் கூறப்பட்டுள்ளன.

## சான்றெண் குறிப்புகள்

1. **குறள்.381.**
2. மேலது.,
3. ம.ரா.போ.குருசாமி (ப.ஆ.), **பாரதி பாடல்கள் ஆய்வுப்பதிப்பு,** "ஜயபேரிகை" 175.
4. சு.அ.இராமசாமிப் புலவர் (ப.ஆ.), **நீதிநூல் வரிசை, மூதுரை,** பா.13:1.
5. **குறள்.**30.
6. மேலது., 30.
7. மேலது., 134.
8. **நா.கதிரைவேற்பிள்ளையின் தமிழ்மொழி அகராதி,** ப.534.
9. இரா.சாரங்கபாணி (ப.ஆ.), **சங்க இலக்கியப் பொருட்களஞ்சியம், தொ.1,** ப.239.
10. **தமிழ் லெக்சிகன்,** ப.315.
11. **க்ரியாவின் தற்காலத் தமிழ் அகராதி,** ப.104.
12. எச்.வேங்கடராமன் (ப.ஆ.), **நற்றிணை மூலமும் உரையும்,** பா.381.
13. ஔவை.சு.துரைசாமிப்பிள்ளை (உ.ஆ.), **புறநானூறு,** பா.315.
14. பின்னத்தூர் நாராயணசாமி ஐயர் '(உ.ஆ.), **நற்றிணை,** பா.167.
15. ஔவை சு.துரைசாமிப்பிள்ளை (உ.ஆ.), மு.கு.நூ., பா.343.
16. பின்னத்தூர் நாராயணசாமி ஐயர் (உ.ஆ.), மு.கு.நூ., பா.379.
17. ஔவை சு.துரைசாமிப்பிள்ளை (உ.ஆ.), மு.கு.நூ., பா.24.
18. அ.பாலையன், புலியூர்க்கேசிகன் (உ.ஆர்.), **சங்கஇலக்கியம் - அகநானூறு - புறநானூறு மூலமும் உரையும்,** அகம்.227.
19. பொ.வே.சோமசுந்தரனார் (உ.ஆ.), **பத்துப்பாட்டு, பகுதி I, சிறு.**104, 105.
20. பின்னத்தூர் நாராயணசாமி ஐயர் (உ.ஆ.), மு.கு.நூ., பா.100.
21. ஔவை சு.துரைசாமிப்பிள்ளை (உ.ஆ.), மு.கு.நூ., பா.121, 124.
22. பின்னத்தூர் நாராயணசாமி ஐயர் (உ.ஆ.), மு.கு.நூ., பா.350.
23. ஔவை சு.துரைசாமிப்பிள்ளை (உ.ஆ.), மு.கு.நூ., பா.20.
24. **தமிழ் லெக்சிகன்,** தொ.2, ப.940.

25. ஔவை சு.துரைசாமிப்பிள்ளை (உ.ஆ.), மு.கு.நூ., பா.28.

26. மேலது., பா.195.

27. கோ.கேசவன், மேற்கோள்: அ.தட்சிணாமூர்த்தி, **சங்க இலக்கியங்கள் உணர்த்தும் மனித உறவுகள்**, ப.271.

28. தமிழ் லெக்சிகன், தொ.4, ப.2065.

29. புலியூர்க்கேசிகன் (ப.ஆ.), **நன்னூல் காண்டிகையுரை, சொல்.**, நூ.261.

30. **குறள்**.1073.

31. அ.தட்சிணாமூர்த்தி, **சங்க இலக்கியங்கள் உணர்த்தும் மனித உறவுகள்**, ப.263.

32. Thomas Lehman and Thomas Meltan, **A Word Index of Old Tamil Cankam Literature**, ப.295.

33. க.வெள்ளைவாரணன், மேற்கோள்: அ.தட்சிணாமூர்த்தி, **சங்க இலக்கியங்கள் உணர்த்தும் மனித உறவுகள்**, ப.264.

34. புலியூர்க்கேசிகன் (உ.ஆ.), **அகநானூறு**, பா.152.

35. இ.வை.அனந்தராமையர் (ப.ஆ.), நச்சினார்க்கினியர் (உரை), **கலித்தொகை**, பா.42.

36. ஔவை சு.துரைசாமிப்பிள்ளை (உ.ஆ.), மு.கு.நூ., பா.312.

25. ஔவை சு.துரைசாமிப்பிள்ளை (உ.ஆ.), மு.கு.நூ., பா.28.

26. மேலது., பா.195.

27. கோ.கேசவன், மேற்கோள்: அ.தட்சிணாமூர்த்தி, **சங்க இலக்கியங்கள் உணர்த்தும் மனித உறவுகள்**, ப.271.

28. தமிழ் லெக்சிகன், தொ.4, ப.2065.

29. புலியூர்க்கேசிகன் (ப.ஆ.), **நன்னூல் காண்டிகையுரை, சொல்.**, நூ.261.

30. **குறள்.**1073.

31. அ.தட்சிணாமூர்த்தி, **சங்க இலக்கியங்கள் உணர்த்தும் மனித உறவுகள்**, ப.263.

32. Thomas Lehman and Thomas Meltan, **A Word Index of Old Tamil Cankam Literature**, ப.295.

33. க.வெள்ளைவாரணன், மேற்கோள்: அ.தட்சிணாமூர்த்தி, **சங்க இலக்கியங்கள் உணர்த்தும் மனித உறவுகள்**, ப.264.

34. புலியூர்க்கேசிகன் (உ.ஆ.), **அகநானூறு**, பா.152.

35. இ.வை.அனந்தராமையர் (ப.ஆ.), நச்சினார்க்கினியர் (உரை), **கலித்தொகை**, பா.42.

36. ஔவை சு.துரைசாமிப்பிள்ளை (உ.ஆ.), மு.கு.நூ., பா.312.

## இயல் 4

# பரிசில் பொருட்கள்

*சங்க காலம் பண்டமாற்று முறையில் மக்கள் தங்கள் பொருளியல் வாழ்க்கையை நடத்திய காலமாகும். ஓரிடத்தில் விளைந்த ஒரு பொருளைப் பிறிதொரு இடத்திற்குக் கொடுத்து அங்குள்ள பொருள்களை வாங்கிக் கொள்வது இயல்பாக இருந்தது. இதனைப் பண்டமாற்று* (Exchange of Commodities for Commodities) *எனக் கூறினர். சங்க இலக்கியத்தில் ''பண்டம்'' என்ற சொற்பதிவு இடம்பெற்றுள்ளது. பொருளுக்குப் பொருள் கொடுத்து வாங்கியதை ''பல்பண்டம் பகர்ந்துவீசும்'' (பட்.210) எனப் பட்டினப்பாலை குறிப்பிடுகின்றது.*

*மக்கள் ஒருவருக்கொருவர் வழங்கவும் பெறவும் வாழ்ந்தமை அறிவு, அன்பு, கருணை, அருள், பொருள் போன்றவற்றால் நிகழ்ந்துள்ளது. எனினும் பொருளையே ஈதலுக்குச் சிறப்பித்துக் கூறுவர். ''இசைபட வாழ்வதற்குக் கல்வி, ஆண்மை முதலிய பிற காரணங்களும் உளவேனும், ''உணவின் பிண்டம் உண்டி முதற்று'' (புறம்.18). ஆதலின், ஈதல் சிறந்தது என்பதற்கு ஞாபகமாக ஈதல் என்றார். 'உயிர்க்கு' என்பது, பொதுப்படக் கூறினாரேனும் விலங்கு உயிர்கட்கு ஏலாமையின், மக்கள் உயிர்மேல் நின்றது'' என்கிறார் பரிமேலழகர்.[1] இவ்வாறு மரபாகப் பொருளையே ஈதலுக்குக் குறிப்பிட்டு வரும் சமூகத்தில் பரிசில் என்பது அரசியல் தொடர்புடையதாக விளங்கிற்று. பரிசில் என்பதும் பரிமேலழகர் கூறுவது போலப் பொருளையே சுட்டிற்று.*

*இந்த அடிப்படையில் பரிசிலாக வழங்கப்பட்ட பொருள் குறித்து ஆராய்வதாக இவ்வியல் அமைகிறது. கிடைத்துள்ள தரவுகளின் அடிப்படையில் பின்வருமாறு இவ்வியல் பகுத்து ஆராயப்படுகிறது.*

*4.1. அணிகலன்கள்*

*4.2. ஆடை*

*4.3. உணவு*

*4.4.* ஊரும் நாடும்

*4.5.* போர்ப் பயன்படு பொருள்கள்

*4.6.* பரிசில் பொருட்களில் பிற

## 4.1. அணிகலன்கள்

அணிகலன்களின் பயன்பாடு சங்ககாலப் பொருளியல் மற்றும் பண்பாட்டுச் சூழலை விளக்குவதாகும். 'அணி' காரணப்பெயர். அரசர்கள் ஆட்சியில் 'அணிகல அரசியல்' ஒன்று உருவாயிற்று. மன்னன் கற்றோரையும் மற்றோரையும் தம்பால் நிறுத்திக் கொள்ளவும் கல்வி, கலை போன்ற துறைகளில் மன்னர்களுக்கிருந்த மதிப்பைக் காட்டவும் அணிகலன்கள் பயன்பட்டன. பிறநாட்டுப் படையெடுப்பிலும் அணிகலன்கள் கவர்ந்து செல்லும் பொருள்களுள் ஒன்றாகவும் அமைந்தன. மன்னர் அணிகலன்களைத் தந்து தம் கொடைப் புகழை நிலைநாட்டினர். ஈதல், அறம், கொடைத் திறம் ஆகியவற்றிற்கிருந்த சமூக மதிப்பு (Social value) உயர்ந்து காணப்பட்டது. இவ்வாறு கொடைப் பொருளாய்ப் பயன்பட்ட அணிகலன்களைப் பலவாறு வகைப்படுத்தலாம். அவை,

*4.1.1.* பொன் அணிகலன்கள்

*4.1.2.* பொன் (பொன்னாலான பொருள்)

*4.1.3.* பொன் பூக்கள்

*4.1.4.* மணிகள்

*4.1.5.* மாலை

*4.1.6.* வளை

*4.1.7.* வயிரமும் பிறவும்

என்பன. 'அணி' என்பது அணிந்து கொள்ளும் பொருள். இதுவேறு வினைப் பொதுச் சொல்லிற்கு எடுத்துக் காட்டப்படுகிறது. அணி என்பது கவிப்பன, கட்டுவன, செறிப்பன, பூண்பன என்பவற்றிற்குப் பொருந்தும் என்பது சேனாவரையர் கருத்து.[2] 'அணி' என்னும் சொல் அழகையும் உணர்த்தும்.[3] "கண்ணிற்கு அணிகலன் கண்ணோட்டம்"[4] என்றவிடத்து, "கண்ணிற்கு அணியும் கலம்"[5] என அணிகலனையே பரிமேலழகர் குறிக்கிறார்.

### 4.1.1. பொன் அணிகலன்கள்

பொன் அணிகலன்கள் பொன்னால் செய்யப்பட்டவை என்பதை வெளிப்படையாகவும், குறிப்பாகவும் உணர்த்துகின்றன. சில தொடர்களில் வரும் அணிகலன்கள் பொன்னால் செய்யப்பட்டவை என்பதை உரையாசிரியர்கள் குறிப்பிட்டுள்ளனர்.[6] இவை தனிப்பெயராகவும் அடைமொழியுடன் கூடிய பெயராகவும் காணப்படுகின்றன. பொன் அணிகலன்கள் இடம்பெற்றுள்ள தொடர்கள் பண்டைத் தமிழகப் புறவாழ்வையும், ஈதல் பண்பையும் அரசியல் வாழ்க்கையையும் எடுத்துக் கூறும் தகையனவாய் அமைந்திருக்கின்றன.[7] குறிப்பாக 'நன்கலம் ஈயும் நாள்மகிழ் இருக்கை' (அகம்.76) என்ற தொடரில் அரசின் ஒரு நாள் நடவடிக்கையும் ஈதல் பண்பையும் மக்கள் பலர் குழுமியிருந்த நிலையையும் விளக்குகிறது. இத்தொடர்களுள் காணப்படும் அனைத்து அணிகலன்களும் பிறர்க்கு வழங்கப்பட்டவை என்பதை உறுதி செய்கின்றன. சற்றொப்ப முப்பத்திரண்டு இடங்களில் "பொன் அணிகலன்" இடம்பெற்றுள்ளது. அணிகலன் என்ற பெயரோடும் செய்யப்பட்டது என்ற வினையோடும் இச்சொற்கள் பதிவாகியுள்ளன. அனைத்துத் தொடர்களிலும் "கலம்" என்ற சொல் இடம்பெற்றுள்ளது. இதற்கு அடையாகப் பொன், நல், அரு போன்ற முன்னொட்டுக்களையும் கொண்டு இவை பொன்னாலான அணிகலன் என்பது உறுதிப்படுத்தப்படுகின்றது. 'சான்றோர்க் கணி'[8] என்பது அழகு என்னும் பொருளில் வந்தது. அழகு நல்லொழுக்கத்தின் மேல் நின்றது.[9]

| பரிசில் வகை | இலக்கியத் தொடர் | பரிசில் பொருண்மைகள் |
|---|---|---|
| பொன் அணிகலன்கள் | நன்கலம் ஈயும் நாள்மகிழ் இருக்கை - அகம்.76:4 | பொதுவான அணிகலன்களைக் கொடுத்தல். |
| | நசையின் வாழ்நர்க்கு நன்கலஞ் சுரக்கும். - அகம்.143:11 | பொதுவான அணிகலன் வழங்கல் |
| | கலம்பெயக் கவிழ்ந்த கழல்தொடித் தடக்கை - அகம்.213:20 | கலம் - பொதுவான அணிகலன் |
| | வரைபுரை . . . நன்கலன் ஈயும் - அகம்.303:9 | பொதுவான அணிகலன்களைக் கொடுத்தல். |

| பரிசில் வகை | இலக்கியத் தொடர் | பரிசில் பொருண்மைகள் |
|---|---|---|
| பொன் அணிகலன்கள் | பாணர் ஆர்ப்பப் பல்கலம் உதவி - அகம்.331:11 | பல அணிகலன் வழங்கல் |
| | அருங்குறும்பு எறிந்த பெருங்கல வெறுக்கை - அகம்.349:7 | பகைப்புலத்திருந்து கொணர்ந்த அணிகலன்களை அளித்தல். |
| | அரிய என்னாது ஓம்பாது வீசி, கலம் செலச் சுரத்தல் அல்லது, - பதிற்.5:44:4-5 | கலம்-பொதுவான பெயர். அணிகலன்கள் பொன் அணி. |
| | உரைசால் நன்கலம் வரைவு இல வீசி - பதிற்.6:54:8 | பொதுவான அணிகலன்களைக் கொடுத்தல் |
| | தென்கடல் . . . நன்கலம் பெறுகுவை - பதிற்.7:67:4 | அணிகலன்கள் வழங்கல் |
| | ஏர் உடைய விழுக் கழஞ்சின் சீர் உடைய இழை பெற்றிசினே; - புறம்.11:12-13 | பொன்னணிகலன் கழஞ்சு-பொன் |
| | பரிசிலர்க்கு அருங்கலம் நல்கவும் . . . - புறம்.14:10 | நல்ல அணிகலன் ஈதல் |
| | அன்புறு நன் கலம் நல்குவன் நினக்கே - புறம்.67:14 | அணிகலன் வழங்கல். |
| | சேயிழை பெறுகுவை - வாள் நுதல் விறலி! - புறம்.105:1 | செந்நிறப் பொன் அணிகலன்கள் |
| | நாள்தொறும் நன்கலம் . . . கொணர்ந்து - புறம்.14:3 | பொதுவான அணிகலன் கொடுத்தல். |
| | வானார்த் தொடுத்த . . . கலனும் - புறம்.153:8 | அணிகலன் - பொது |
| | அருங்கலம் . . . வேண்டினும், பெருந்தகை - புறம்.171:10 | பெறுதற்கரிய அணிகலன்கள் |
| | அருங்கலம் நீரோடு சிதறி - புறம்.361:5 | பெறுதற்கரிய அணிகலன்கள் |
| | வீறுசால் நன்கலம் வீசி - புறம்.362:15 | அணிகலன் - பொது |
| | மேம்படு சிறப்பின் அருங்கல வெறுக்கை - புறம்.378:11 | அரிய அணிகலன் கொடுத்தல். |
| | அருங்கலம் நல்கி யோனே; - புறம்.397:18 | அரிய அணிகலன் ஈதல் |

| பரிசில் வகை | இலக்கியத் தொடர் | பரிசில் பொருண்மைகள் |
|---|---|---|
| பொன் அணிகலன்கள் | .... பெட்டவை கொள்க! தன்னறி யளவையின் தரத்தர - பொரு.126-127 | தருதல் - அணிகலன் உரையாசிரியர் கருத்து.[10] |
| | நலம் சான்ற கலம் சிதறும் - மது.104 | கலம் - அணிகலன்கள் |
| | பலர் புறம் கண்டு, அவர் அருங்கலம் தரீஇ - மலை.71 | பெறுதற்கரிய பொன் அணிகலன்கள் வழங்கல். |
| | சீர்கெழு சிறப்பின் விளங்கு இழைய அணிய - மலை.570 | சிறந்த அணிகலன்களை அணிய வழங்கல் |

*மேலே அட்டவணையில் குறிப்பிடப்பட்டுள்ள அணிகலன்கள் ஒருவரால் வழங்கப்பட்டவையாயும், மற்றவரால் பெறப்பட்டவையாயும் காணப்படுகின்றன. அணிகலன் அல்லாத பொன் சார்ந்த பொருள்களும் இவ்வாறே வந்துள்ளன. பரிசில் வழங்கப்பட்டதற்கு அடையாளமாக, ஈதல், சுரத்தல், உதவுதல், எறிதல், தருதல் (தரீஇ), சிதறுதல், வீசுதல், நல்குதல், கவிழ்தல் போன்ற தொழில்படு சொற்கள் இடம்பெற்றிருக்கின்றன. கொடுப்போரின் நேர்க்கூற்றாகவும், கொடுத்ததை எடுத்துக் கூறும் புலவர் (பெறுவோர்) கூற்றாகவும் இச்சொற்கள் இடம்பெற்றிருக்கின்றன. "சிதறுதல் - கொடுத்தல்" என்னும் பொருளில் இடம்பெற்றுள்ளது.[11]*

*அணிகலன்களைப் பரிசிலாகப் பெறுவதற்கென்று சில வினைச் சொற்களும் பயன்படுத்தப்பட்டிருக்கின்றன. பெறுதல், பெற்று அணிதல், மகளிர் அணிதல், பெற்றுக் கொண்டு வருதல் ஆகிய சொற்கள் அணிகலன்களைப் பெற்றுக் கொள்ளுதலைச் சுட்ட வந்துள்ளன. அணிகலன்களைச் சுட்டும் பொழுது பெண்கள் அணிபவை எனவும் பொதுவாக மக்கள் அணிபவை எனவும் சில வகையினவாகச் சுட்டப்படுகின்றன. ஆடவர்கள் மட்டும் அணியும் அணிகலன்கள் சிலவும் வழங்கப்பட்டிருக்கின்றன. அணிகலன்கள் அழகிற்கு மட்டுமின்றித் தமிழர் பண்பாட்டையும் குறிப்பிடுகின்றன. 'தாலி' போன்றவை இவ்வகையில் அடங்கும். 'மங்கலநாணின் பிறிதணி மகிழாள்'[12] எனச் சிலப்பதிகாரம்*

கண்ணகியைச் சுட்டும். இந்தப் பண்புகளை நாட்டுப்புறப் பாடல்களிலும் காணலாம். சங்க இலக்கியம் போற்றியுள்ள பண்பை நாட்டுப்புறப் பாடல்களும் போற்றியுள்ளன.[13] குழந்தைகள் அணியும் “ஐம்படைத்தாலி”[14] என்பது குழந்தைகளுக்கு மட்டும் அணிவிப்பது.

### 4.1.2. பொன் (பொன்னாலான பொருள்)

அணிகலன்களை வழங்கியது போலவே பொன்னாலான பிற பொருள்களும் வழங்கப்பட்டிருக்கின்றன. இது குறிப்பிடும் புலவர்கள் பொன் என்ற சொல்லையும் அதற்கொத்த வேறு சொற்களையும் இணைத்துக் குறிப்பிட்டுள்ளனர்.

பிரசம் கலந்த வெண்சுவைத் தீம்பால்
விரிகதிர்ப் பொற்கலத்து ஒருகை ஏந்தி (நற்.110)

என்னும் இடத்தில் பொற்கலம் என்பது குழந்தைக்கு உணவூட்டும் கிண்ணமாகச் சொல்லப்பட்டிருக்கிறது. இவ்வாறு பொன்னாலான பல பொருள்கள் தமிழ்ச் சமூகத்தில் இடம்பெற்றுள்ளன. இப்பொருள்கள் பல்வேறு பயன்பாடு உடையனவாய்க் காணப்படுகின்றன. இவை பயன்படு பொருள்களாகவும், அழகூட்டும் பொருள்களாகவும் இருந்தனவாகத் தெரிகின்றன. இப்பொருள்கள் பொன்னாலானவை என்பதால் பரிசுப் பொருள்களாக வழங்கப்பட்டிருக்கின்றன.

| பரிசில் வகை | இலக்கியத் தொடர் | பரிசில் பொருண்மைகள் |
|---|---|---|
| பொன்<br>பொன்னாலான பொருள் | இலம்படு புலவர் ஏற்றகை ஞெமிரப்<br>பொலஞ்சொரி வழுதியின் புனலிறை பரப்பி<br>- பரி.10:126-127 | பொன்னாலான பொருள். |
| | நீ நயந்து நோக்கும் வாய் பொன்பூப்ப<br>- புறம். 38:6 | பொன் பொருள். |
| | தன்மலைப் பிறந்த தாவில் நன்பொன்<br>- புறம். 152:28 | குறைவில்லாத பொன். |
| | அண்ணல் யானை அணிந்த<br>பொன்செய் ஓடைப் பெரும் பரிசிலனே<br>- புறம். 326:14-15 | யானையின் அணிகலன் (ஓடை) |
| | . . . பொன்னும் புனல்பட சொரிந்து<br>- புறம். 367:5 | பொற்காசு |
| | மலைபயந்த. . . . கடறு பயந்த பொன்னும்<br>- புறம். 377:16 | காட்டில் பெறப்பட்ட பொன் |

மேற்குறித்த அட்டவணையிலுள்ள பொருள்கள் சமூகத்தின் பிறிதொருபகுதிச் செல்வ நிலையை உணர்த்துகின்றன. யானைகள் போன்ற

விலங்குகள் அணிந்த அணிகலன்கள் விலை மதிப்புடையனவாய் இருத்தலின் அவையும் பரிசுப் பொருள்களாக வழங்கப்பட்டிருக்கின்றன. பொன்னை மண்ணிலிருந்து எடுத்துப் பிரித்து அவற்றைக் காசுகளாகத் (பொற்காசு) தயாரிக்கும் தொழில் வளம் நிரம்பியிருந்ததும் தெரிகிறது. பல்வேறு பொருள்கள் பொன் கலந்து செய்யப்பட்டிருந்ததால் அவை இன்னவையென வகைப் பிரித்துக் கூறாது பொதுவில் 'பொன் பொருள்கள்' எனக் கூறியிருப்பதும் எண்ணத்தக்கது. நயந்து நோக்கும் வாய் பொன்பூப்ப' என்பதற்கு "அருளி நோக்குமிடம் பொன்பொலியும்"[15] என்கிறார் உரையாசிரியர். இதுவும் கொடையை உணர்த்தும்.

### 4.1.3. பொன் பூக்கள்

பொன்னாலான பூக்கள் பழந்தமிழ்ச் சமூகத்தில் பயன்படுத்தப் பட்டிருக்கின்றன. பொன்னைப் பூ வடிவில் செய்து வைத்துக் கொள்வது மரபாகவுள்ளது. பொற்பூச் சூடி, பொன்பூ அணிந்து என வரும் தொடர்கள் இதையே உணர்த்துகின்றன. போர் வீரர்களுக்கு அணிந்து கொள்ளவும், அரசன் சூடிக்கொள்ளவும் அடையாளப் பூக்களாகப் பொற்பூ பயன்படுத்தப்பட்டுள்ளது. சங்க இலக்கியங்களில் பொது அணிகலன்களுக்கு அடுத்த நிலையில் பொன்னாலான பூக்கள் பயன்படுத்தப்பட்டிருக்கின்றன. சங்க இலக்கியங்களில் பதினொரு இடங்களில் பொன்பூக்கள் பரிசாகக் கொடுக்கப்பட்டுள்ளன.

| பரிசில் வகை | இலக்கியத் தொடர் | பரிசில் பொருண்மைகள் |
|---|---|---|
| பொன் பூக்கள் | பாணர் பைம்பூ மலைய விளையர் - பதிற்.4:40:24 | பொன்னால் செய்த பசிய பூக்கள் ஈதல். |
| | பைம் பெற்றாமரை பாணர்ச் சூட்டி - பதிற்.5:48:1 | பொன்னாலான தாமரை அளித்தல். |
| | பாணர் தாமரை மலையவும் புலவர் - புறம். 12:1 | பொற்றாமரை வழங்கல் |
| | வாடாத் தாமரை சூட்டிய விழுச்சீர் - புறம்.126:3 | பொற்றாமை வழங்குதல் |
| | பாணன் சூடிய பசும்பொன் தாமரை - புறம்.141:1 | பொற்றாமரை அளித்தல் |
| | வாடாத் தாமரை சூட்டுவன் நினக்கே - புறம். 319:15 | பொற்றாமரை வழங்குதல் |
| | பொலந்தாமரைப் பூம்பாணரொடு - புறம்.361:12 | பொற்றாமரை வழங்குதல் |

| பரிசில் வகை | இலக்கியத் தொடர் | பரிசில் பொருண்மைகள் |
|---|---|---|
| பொன் பூக்கள் | பாணன் சென்னிக் கேணி பூவா<br>எரிமருள் தாமரைப் பெருமலர் தயங்க<br>- புறம்.364:2-3 | பொற்றாமரை அளித்தல் |
| | எரியகைந் தன்ன வேடில் தாமரை<br>சுரியிரும் பித்தை பொலியச்சூட்டி<br>- பொரு.159-160 | பொற்றாமரை நல்குதல் |
| | பொலந்தாமரைப் பூச்சூட்டியும்<br>- மது. 103 | பொற்றாமரை வழங்குதல் |
| | தலைவன் தாமரை மலைய விறலியர்<br>- மலை. 569 | பொற்றாமரை வழங்கல் |

*மலர்களில் சிலவற்றை மக்கள் விரும்பிப் பயன்படுத்தினர். புலவர்தம் இலக்கியங்களிலும் இப்பூக்கள் சிறப்பாக இடம்பெற்றன. குறிப்பாகத் தாமரை, குவளை ஆகிய இருமலர்களின் வடிவில் பொன்பூக்கள் செய்யப்பெற்று அரண்மனையிடத்தும் பொருளுடையோர் மாட்டும் இருந்தன. இவற்றை வேண்டுவோர்க்கு வேண்டும் தருணங்களில் அவர்கள் வழங்கி வந்தனர். மிகுதியும் மன்னர்களே இவற்றை வழங்கியிருக்கின்றனர். புலவர்கள், கலைஞர்கள் போன்றோர் இப்பூக்களைப் பெற்றுப் பயன் அடைந்துள்ளனர். இப்பூக்களைத் தாம் விரும்புவோர்க்கும் அணிவிக்கும் செய்கையும் காணப்படுகிறது.*

### 4.1.4. மணிகள்

*ஒளி பொருந்திய மணிகளைக் கொண்டு அமைக்கப்பட்ட அணிகலன்களும், கலகலவென ஒலியை எழுப்பும் மணிகள் இணைக்கப்பட்ட அணிகலன்களும் பழங்கால மக்கள் பயன்படுத்தி வந்ததைத் தமிழிலக்கியங்கள் குறிப்பிடுகின்றன. கலகலவென ஒலித்தல் பறவைகள் குரலிலும் காணப்படுவதாகப் பாரதியார் குறிப்பிடுகிறார்.[16] செயற்கையாகச் செய்யப்பட்ட மணிகளும், இயற்கையாகக் கிடைத்த மணிகளும் (குன்றின் மணி போல்வன) பயன்படுத்தப்பட்டுள்ளன. இவ்வகையான பல மணிகளைச் சேர்த்து வைத்திருத்தல் மரபாகத் தெரிகிறது. பழங்கால அங்காடிகளில் இவ்வகை மணிகள் விற்பனை செய்யப்பட்டதையும், இலக்கியங்களிலிருந்து அறியமுடிகிறது. பொன்னாலான அணிகலன்களைப் பெருமையாக அணிந்து கொண்டது போலவே இவற்றைப் பயன்படுத்தியுள்ளனர். இவை பரிசுப்*

பொருளான வரலாறு பரிபாடலிலும், புறநானூற்றிலும் கூறப்பட்டுள்ளது. இம்மணிகள் குறித்த மூன்று பதிவுகள் காணப்படுகின்றன.

| பரிசில் வகை | இலக்கியத் தொடர் | பரிசில் பொருண்மைகள் |
|---|---|---|
| மணிகள் | தெறுகதிர் ........ மணியும் - பரி.5:67 | ஒலி மணி வழங்குதல் |
| | பன்மணிக் குவையொடும் விரைஇக் கொண்மென - புறம்.152:29 | மிகுதியான மணிகள் அளித்தல் |
| | மலைபயந்த மணியும்...... - புறம்.377:16 | மலையிலிருந்து கொணர்ந்த மணிகளை வழங்கல் |

மேற்குறிப்பிட்ட மூன்று மணிகளுள் முருகனுக்குப் பொதுவான மணிகள் தரப்பட்டுள்ளன. பாவனந்தம் பிள்ளை அகராதியில் மணி என்பதற்கு "மணி-ஓசை". ஓசை தரும் மணி எனக் குறிக்கப்பட்டுள்ளது.[17] இறைவனுக்குச் சார்த்தப்படும் மணிகள் ஒலி தரும் மணிகள் என அழைக்கப்படுகின்றன.

### 4.1.5. மாலை

ஆண்களும், பெண்களும் அணிந்து கொள்வது பொதுவாக மாலை என வழங்கப்பட்டுள்ளது. பொன்னாலாகிய பொருள்களை இணைத்து மாலையாகக் கட்டிப் பயன்படுத்தியுள்ளனர். பிற்காலத்தில் காசுமாலை போன்று வழங்கப்படும் பல தொடர்கள் இவற்றுடன் வைத்து எண்ணத்தக்கன.[18] குறிப்பாகத் தாமரைப்பூ, குவளைப்பூப் போன்ற பூ வடிவில் பொன்னால் செய்யப்பட்ட பொருள்கள் மாலையில் இணைக்கப்பட்டுள்ளன. இவை அணிந்து கொள்வதற்கும், பரிசிலுக்கும் பயன்பட்டுள்ளன. மாலை என்ற சொல்லாலும், ஆரம் என்ற சொல்லாலும் இது குறிக்கப்பட்டுள்ளது. 'ஆரம்' என்பது சந்தனத்தையும் குறிக்கும். பரிசுப் பொருளாக வரும் போது முத்துமாலை, முத்து, பொன் இவற்றால் அமைந்த மாலைகளே காணப்படுகின்றன. அரசன் முதல் பொதுமக்கள் வரை அனைவரும் இந்த மாலைகளைப் பயன்படுத்தியிருக்கின்றனர். "நெஞ்சை அள்ளும் சிலப்பதிகாரம்

*என்றோர் ஆரம் படைத்த தமிழ்நாடு.”*[20] *சங்க இலக்கியங்களில் பதினைந்து இடங்களில் மாலை பரிசில் பொருளாக இடம்பெற்றுள்ளது.*

| **பரிசில் வகை** | **இலக்கியத் தொடர்** | **பரிசில் பொருண்மைகள்** |
|---|---|---|
| மாலை | ஒண்ணுதல் விறலியர்க் காரம் பூட்டி<br>- பதிற்.5:48:2 | முத்துமாலை வழங்குதல் |
| | தெனுகதிர்க். . . . . . மாலையு. . . . . .<br>- பரி.5:67 | பூமாலை அளித்தல் |
| | . . . . . . ஆரமோடு ஈத்தானுடனாக<br>- பரி.20:33 | முத்தாலான மாலை அளித்தல் |
| | எந்தை எனக்கீத்த. . . . . ஆரப்பூண்<br>- பரி.20:76 | பொன்மாலை வழங்குதல் |
| | ஒள்ளழல் புரிந்த தாமரை<br>வெள்ளி நாரால் பூப்பெற்றிசினே<br>- புறம்.11:17-18 | பொன்னாலான தாமரைப் பூ மாலை நல்குதல் |
| | மாணிழை விறலி மாலையொடு விளங்க<br>- புறம்.141:2 | பூமாலை வழங்குதல் |
| | மார்பிற் பூண்ட வயங்குகாழ் ஆரம்<br>- புறம்.150:20 | முத்துமாலை ஈதல் |
| | பனிநீர்ப் பூவா மணிமிடை குவளை<br>வால்நார்த் தொடுத்த கண்ணியும்<br>- புறம்.153:7 | பொன்மாலை அளித்தல் |
| | பாடினி மாலை யணிய . . . சூட்டுவன்<br>- புறம்.319:14 | பொன்மாலை ஈதல் |
| | புரிமாலையர் பாடினிக்கு . . . நல்கின்<br>- புறம்.361:11 | பொன்மாலை வழங்குதல் |
| | வாடா மாலை பாடினி அணிய<br>- புறம்.364:1 | பொன்மாலை வழங்கல் |
| | அரவுறழ் ஆரம் முகக்குவம் எனவே<br>- புறம்.368:18 | முத்துமாலை வழங்குதல் |
| | நிலவுத்திகழ் ஆரம் முகக்குவம் எனவே<br>- புறம்.372:13 | முத்துமாலை அளித்தல் |
| | . . . . . அரவுறழ் ஆரமொடு . . . அருளியோன்<br>- புறம்.398:27 | முத்துமாலை வழங்குதல் |
| | நூலின் வலவா நுணங்கரின் மாலை<br>- பொரு.161 | பொன்மாலை வழங்கல் |

*அணிந்து கொள்ளும் பொன் மாலைகளும் அணிகலன்களாகக் காணப்படுகின்றன. இருவகை மாலைகள் மட்டுமே இடம்பெற்றிருப்பது*

குறிப்பிடத்தக்கது. ஆரப்பூண் (பரி.20:76) என்பது பொன்மாலை. இது தந்தை மகட்குத் தந்தது. எனவே இது பொன்மாலை எனக் கருத இடனுண்டு. விறலியர்க்காரம் (பதிற்.48) என்பது முத்துமாலை எனக் கருதலாம். ஈதலும், பூட்டலும் என இருவகைச் சொற்களும் (வழங்கல், பெறுதல்) இப்பகுதியில் இடம் பெற்றிருக்கின்றன.

### 4.1.6. வளை

கையிலும் தோளிலுமாகப் பெண்கள் அணிந்து கொண்ட அணிகலனை "வளை" என அழைத்தனர். சங்க இலக்கியங்களின்படி இது பொன்னாலானதாகவே தெரிகிறது. பெண்களுக்கே உரிய அணிகலனாகவும் படுகிறது. சமூக அடிப்படையில் ஒவ்வொரு குடும்பத்திலும் இவ்வளைகள் இருந்துள்ளன. குடும்பப் பெண்கள் வளை அணிந்து கொள்வது வழக்கமாக உள்ளது. மரபு வாய்ந்த ஆபரணமாக இது காணப்படுகிறது. சங்க இலக்கியங்களில் நான்கு இடங்களில் இது இடம்பெற்றுள்ளது. காதற்பிரிவால் வருந்தும் மகளிர் உடல் இளைத்து அவர்களின் கைவளையல் கழன்றதாகக் கூறப்படுகிறது.[21]

| பரிசில் வகை | இலக்கியத் தொடர் | பரிசில் பொருண்மைகள் |
|---|---|---|
| வளை | திருந்துகோல் எல்வளை வேண்டியான் அழவும் - நற்.136:1 | பொன்னாலாகிய தோள் வளை அளித்தல் |
| | இடுவளை. . . ஈத்தானுடனாக - பரி.20:33 | பெண்கள் அணியும் கைவளையல் வழங்கல் |
| | எந்தை எனக்கீத்த இடுவளை. . . . . . . - பரி.20:76 | பெண்களுக்குப் பெற்றோர் தந்த பொன் வளையல்கள் அளித்தல் |
| | மடைசெறி முன்கைக் கடகமோ ஈத்தனன் - புறம்.150:21 | கைவளை வழங்கல் |

மேற்குறிப்பிட்டவற்றில் மூன்று கைவளையும், ஒரு தோள்வளையும் காணப்படுகின்றன. புறநானூற்றில் வரும் கைவளை, ஆடவர் அணிவது.

### 4.1.7. வயிரமும் பிறவும்

*வயிரம், முத்துக்கள் ஆகியவை பெயரளவில் சுட்டப்பட்டுள்ளன. அணிகலன்களாக இல்லாமல் பொருள்களாகத் தரப்பட்டுள்ளன. கடலிலிருந்து கிடைத்த முத்துக்கள் சிறப்பிக்கப்பட்டுள்ளன. குறிப்பாக முத்துக்கள் பாண்டி நாட்டுடன் இணைத்துக் கூறப்பட்டுள்ளன. தென்கடல் முத்தம் என்பது இது. வயிரம் எடுக்கப்பட்ட முறை தெரிந்திலது. வயிரத்தைப் பரிசு பொருள்களாகத் தந்தது பதிற்றுப்பத்தில் மட்டும் இடம்பெற்றுள்ளது. இதன் விவரம் அட்டவணையில் தரப்பட்டுள்ளது. முத்துக்கள் கடலிலிருந்து எடுக்கப்பட்டவையாகவே குறிப்பிடப்படுகின்றன.*

| பரிசில் வகை | இலக்கியத் தொடர் | பரிசில் பொருண்மைகள் |
|---|---|---|
| வயிரமும் பிறவும் | ........................ விரிதிரைக் கண்திரள் முத்தம் கொண்டு - அகம்.280:11-12 | முத்துக்கள் வழங்கல் |
| | ............... வயிரமொடு கொண்டு பெருவிறன். . . . . . தந்து பிறர்க்குதவி - பதிற்.பதி.2 | வயிரம் வழங்கப்பட்டது |
| | தென்கடன் முத்தமொடு. . . . . . பெறுகுவை - பதிற்.7:67:4 | முத்து வழங்குதல் |
| | கடல்பயந்த கதிர்முத்தமும் - புறம்.377:17 | முத்து வழங்குதல் |

*மேற்குறிப்பிட்டவற்றுள் மூன்று முத்துக்களையும், ஒரு வயிரத்தையும் கொடுத்ததாக உள்ளது. வயிரம் என்பது அணிகலன் அல்லாத வைரமாகத் (வைரக்கற்கள்) தெரிகிறது. இம்மூன்று இடங்களில் வரும் முத்துக்கள் தனியாக இருந்தவை. அணிகலனில் இணையாத தனித்த முத்துக்கள்.*

*சமுதாயத்தில் பொருள் மதிப்பீட்டிலும் சமூக மதிப்பீட்டிலும் தகுதியானவை எனக் கருதப்பட்ட அணிகலன்களும் அணிகலன்கள் செய்யப் பயன்பட்ட பொருள்களும் அணிகலன் வரிசையில் இடம்பெற்றுள்ளன. இப்பொருள்களுக்குச் சமூக மதிப்பு உயர்வாக இருந்ததால் இவை பரிசில்களாகவும் கருதப்பட்டிருக்கின்றன. இவ்வாறு சமூக மதிப்புடைய பொருள்களுள் பொன், முத்து என்பவை குறிப்பிடத்தக்கன எனக் கூறலாம்.*

## 4.2. ஆடை

புலவர்களுக்கும் மற்றவர்களுக்கும் ஆடை வழங்கிச் சிறப்பிப்பதாகப் பல இடங்களில் இலக்கியப் பதிவு காணப்படுகிறது. இது சில இலக்கியங்களில் வெளிப்படையாக ஆடையை உணர்த்தியும், சில பாடல்களில் உரையாசிரியர்கள் ஆடையை எடுத்து எழுதியும் கூறப்படுவதால் அறியப்படுகிறது. ஆடை - என்பதற்குரிய பல பெயர்களை வாழ்வியல் களஞ்சியம் தொகுத்து வழங்குகிறது.[22] பொதுவாக இஃது எல்லோரும் பயன்படுத்தக் கூடிய துணிப் (உடை) பொருளாக இருக்கலாம். உடை வகைகள் பற்றிய விவரத்தைப் பின்வரும் அட்டவணை தெரிவிக்கிறது.

| பரிசில் வகை | இலக்கியத் தொடர் | பரிசில் பொருண்மைகள் |
|---|---|---|
| உடை | மாசில் காம்புசொலித் தன்ன அறுவை உடீஇ - சிறு.236 | தூய மென்மையான ஆடை வழங்குதல் |
| | வேறுபட்ட உடையுஞ் சேறுபட்ட தசும்பும் - புறம்.377:18 | ஒன்றுக்கொன்று வேறுபாடுடைய உடைகள் அளித்தல் |
| | வெளியதுடீஇயென் பசிகளைந் தோனே - புறம்.385:7 | வெண்மையான உடை தருதல் |
| | திருமலரன்ன புதுமடிக் கொளீஇ - புறம்.390:15 | பகன்றை மலர் போன்ற புதிய ஆடை அளித்தல் |
| | நுண்ணூற் கலிங்க முடீஇ. . . . . - புறம்.392:15 | மெல்லிய ஆடை உடுக்கச் செய்தல் |
| | அகன்றுமடி கலிங்க முடீஇச் செல்வமும் - புறம்.393:18 | உடை வழங்கல் |
| | பாம்புரித் தன்ன வான்பூங் கலிங்கமொடு - புறம்.397:15 | உடை வழங்கல் |
| | புகை விரிந்தன்ன பொங்குதுகிலுடீஇ - புறம்.398:20 | மென்மையான உடை அளித்தல் |
| | கலிங்க மளித்திட்ட மென்னரை நோக்கி - புறம்.400:13 | புதிய ஆடைகளை உடுக்கச் செய்தல் |
| | தன்னறி யளவையின் தரத்தர யானும் என்னறி யளவையின் வேண்டுவமுகந்து கொண்டு - பொரு.126 | அளவறிந்து உடைகள் அளித்தல் |
| | இழைமருங் கறியா நுழைநூற் கலிங்கம் எள்ளறு சிறப்பின் வெள்ளரைக் கொளீஇ - மலை.561-562 | நுண்ணிழை ஆடைகள் வழங்கல் |

| பரிசில் வகை | இலக்கியத் தொடர் | பரிசில் பொருண்மைகள் |
|---|---|---|
| பட்டாடை | நூலாக் கலிங்கம் வாலரைக் கொளீஇ - பதிற்.2:12:21 | பட்டாலான ஆடை தருதல் |
| | அரவுரி யன்ன அறுவை நல்கி - பொரு.83 | மென்மையான பட்டாடை நல்குதல் |
| | கொட்டைக் கரைய பட்டுடை நல்கி - பொரு.155 | பட்டாடை வழங்கல் |
| போர்வை | கான மஞ்ஞைக்குக் கலிங்கம் நல்கிய - சிறு.85 | போர்வையை வழங்குதல் |
| | படாஅ மஞ்ஞைக்கு ஈத்த எம்கோ - புறம்.141:11 | போர்வை வழங்கல் |
| | மடத்தகை மாமயில்பனிக்கு என்று அருளிப் படாஅம் ஈத்த கெடாஅ நல்லிசை - புறம்.145:1-2 | போர்வை அளித்தல் |

மேற்குறித்த உடை வகைகள் சராசரி மக்கள் உடுத்தும் உடைகளாகவும், தரத்தில் உயர்ந்தவையாகவும், நுட்ப வேலைப்பாடுகள் கொண்டவையாகவும் காணப்படுகின்றன. இவை பொருள் கொடுப்போரின் நிலையையும் பெறுவோரின் தரத்தையும் காட்டுகின்றன. இவ்வுடைகள் மக்கள் பயன்பாட்டில் பெரிதும் இருந்தவை எனத் தெரிகின்றன.

## 4.3. உணவு

பழந்தமிழகத்தில் மற்றப் பொருள்களைப் பிறர்க்களித்து மகிழ்ந்ததைப் போல உணவையும் உணவுப் பொருள்களையும் கொடுத்து மகிழ்ந்தனர். இஃது ஒரு பண்பாட்டு நெறிமுறையாகவே இருந்துள்ளது. “இதை விருந்தோம்பல்”[23] என்பதாய்க் குறித்தனர். இதனை,

> புறநானூற்று ஆற்றுப்படைப் பாடல்களிலும், பத்துப்பாட்டிலுள்ள ஆற்றுப்படை நெடும்பாடல்களிலும் புரவலர்கள் வழங்கும் உணவு தவிர, அவர்கள் ஆளும் நாட்டிலுள்ள பல்வேறு நிலங்களைச் சேர்ந்த குடிகள் ‘விருந்து ஓம்பும்’ உணவுகள் பற்றியும் விளக்கங்கள் உள்ளன[24]

என உறுதிப்படுத்துகிறார் ராஜ்கௌதமன்.

"வருவிருந்து வைகலும் ஓம்புவான். . . ."[25] என ஒவ்வொரு நாளும் செய்ய வேண்டிய கடமைகளுள் ஒன்றாக விருந்தோம்பல் கருதப்பட்டதைத் திருக்குறள் கூறுகிறது.

உணவளித்தல் என்பது பண்பாட்டின் ஒரு கூறாகப் படவே மன்னர் முதல் இயல்பாக இருந்த குடிமக்கள் வரை இதனைச் செய்யத் தலைப்பட்டனர். இந்த வளர்ச்சியின் அடுத்த கட்டமாக உண்ணும் உணவு மட்டுமின்றி, உணவு, உணவு ஆக்குவதற்குப் பயன்படும் பொருள்களும் உணவு எனவே கருதப்பட்டன. தமிழ்ச் சூழலில் உணவளித்தல் சிறந்த அறமாக நீதிநூல்களில் உணர்த்தப்பட்டது. காலப்போக்கில் உணவளித்தல் மட்டும் சிறந்த அறமென நிலவுடைமைச் சமூகத்தில் வற்புறுத்தப்பட்டது.[26] பதினெட்டாம் நூற்றாண்டில் இச்சிந்தனை மிகுதியாக வளரவே வள்ளலார் போன்றோர் பசி போக்குதலைச் சிறப்பாகச் செய்தனர். ஆய்வுக்கு எடுத்துக் கொண்ட பழந்தமிழ் நூல்களில் உணவும் உணவுப்பொருள்களும் கொடையாகவும் அறமாகவும் கருதப்பட்டு வழங்கப்பட்டுள்ளன. கிடைத்த தரவுகளின்படி வழங்கப்பட்ட உணவுப்பொருள்களைச் சிலவாக வகைப்படுத்தி விளக்கமுடிகிறது.

புலவர்கள் மன்னர்களை வாழ்த்தி அறம் செய்யக் கூறும் போதும் பசித்து வந்தோர்க்கு உணவிடுக எனக் கூறியுள்ளனர். உணவு வகைகளைப் பின்வருமாறு பிரிக்கலாம்.

4.3.1. உணவு (பொதுச்சொல்லால் வருபவை)
4.3.2. ஊன் வகைகள்
4.3.3. தானியங்கள்
4.3.4. பழங்கள்
4.3.5. பெயர் சுட்டி வரும் உணவு வகை

### 4.3.1. உணவு (பொதுச்சொல்லால் வருபவை)

செய்யுள் மரபில் தொடர் அமைப்புக்கள் மாறி அமைந்தும் நேர்ப்பொருளைக் கொண்டுகூட்டி அமைத்துக் கொள்வது ஓர் இலக்கண அமைதியாகும்.[27]

இது போலப் பொருளைச் சுட்டாமல் பொருளுக்குரிய வினைகளோ பொருளின் பிற அடையாளங்களோ கூறப்படும்பொழுது இவற்றைக் கொண்டு பொருளை அறிந்து கொள்வதும் ஒரு மரபாகும்.[28]

இந்த இரு முறைகளிலும் பரிசளிக்கப்பட்ட பொருள் உணவு என்பதைச் செய்யுட்கள் உணர்த்துகின்றன. பசி தீர்தல், உலை ஏற்றுதல் போன்ற தொடர்களும் சில இடங்களில் உண்ணல், உண் போன்ற வினைச் சொற்களும் இடம்பெற்று உணவு பரிசளிக்கப்பெற்றதை உணர்த்துகின்றன. "சோறு மணக்கும் மடங்களெல்லாம்"[29] என மீனாட்சி சுந்தரம் பிள்ளை பாடியது உணவளிக்கும் அறம் நிகழ்ந்ததைக் குறிக்கும். இப்பொருள்களும், பொருளுக்குரிய வினைகளும் உணவைப் பிறர்க்கு அளித்தல் பொருட்டு இடம்பெற்றிருக்கின்றன என்பது இலக்கிய மரபு. பின்வரும் பட்டியல் இதனைத் தெரிவிக்கின்றது.

| பரிசில் வகை | இலக்கியத் தொடர் | பரிசில் பொருண்மைகள் |
|---|---|---|
| உணவு | வல்லினும் வல்லார் ஆயினும் சென்றோர்க்குச் சாலவிழ் நெடுங்குழி நிறைய வீசும் - அகம்.152:19-20 | கலத்தில் உணவிடல் |
| | ஏறுமுந் துறத்துச் சால்பதம் குவைஇ - அகம்.249:7 | சால் போன்ற கலத்தில் உணவிடல் |
| | பண்ணியம் அட்டியும், பசும்பதம் கொடுத்தும் - பட்.203 | பண்டங்களையும் உணவையும் தருதல் |
| | அமர்ந்துணைப் பிரியாது, பாத்து உண்டு மாக்கள் - பதிற்.3:22:9 | உணவைப் பகிர்ந்துண்ணல் |
| | நெஞ்சு மலி உவகையர் உண்டு மலிந்து ஆட - பதிற்.3:23:8 | உணவு வழங்கி மகிழ்தல் |
| | பகுத்தூண் தொகுத்த ஆண்மை - பதிற்.4:38:15 | உணவைப் பகிர்ந்து கொடுத்தல் |
| | கொளை வல் வாழ்க்கை நும் கிளை இனிது உணீஇயர்! - பதிற்.5:49:3 | உணவு வழங்குதல் |
| | வருந்தி வந்தோர் மருங்க நோக்கி அருள வல்லை ஆகுமதி; அருள் இலர் - புறம்.27:16-17 | பசியுடன் வருவோர்க்கு உணவளித்தல் |
| | உறந்தை யோனே குருசில்; பிறன்கடை மறப்ப நல்குவன் செலினே - புறம்.68:18-19 | இல்லத்தில் உணவளித்தல் |

| பரிசில் வகை | இலக்கியத் தொடர் | பரிசில் பொருண்மைகள் |
|---|---|---|
| உணவு | உண்குவம் பெருமநீ நல்கிய வளனே - புறம்.136:27 | உணவு நல்குதல் |
| | பசியாராகல் மாறுகொல் விசி பிணி - புறம்.153:10 | பசியென்பதை அறியா அளவு உணவு அளித்தல் |
| | யாம் வேண்டியாங்கு எம் வறுங்கலம் நிறைப்போன்; - புறம்.171:5 | கலம் நிறைய உணவு வழங்கல் |
| | ஊண் ஒலி அரவம் தானும் கேட்கும் - புறம்.173:4 | உணவு உண்ணுங்கால் ஒலி எழுந்தது என்பது உணவு வழங்கப்பட்டதைக் குறிக்கிறது. |
| | ஈர்ந்தையோனோ; பாண் பசிப் பகைஞன் - புறம்.180:7 | பசியைப் போக்குபவன் பசிப்பகைஞன் என அழைக்கப்படுதல் |
| | .......................... பாணர் பைதல் சுற்றத்துப் பசிப்பகை ஆகி - புறம். 212:67 | பாணர் பசி தீர்க்க உணவு அளித்தல் |
| | உடையன் ஆயின் உண்ணவும் வல்லன் கடவர் மீதும் இரப்போர்க்கு ஈயும் - புறம்.315:1-2 | இரப்போர்க்கு உணவு ஈதல் |
| | வருவிருந்து அயரும் விருப்பினள்; ........ - புறம்.326:12 | விருந்தினர்க்கு உணவளித்து மகிழ்தல் |
| | இல்லது படைக்கவும் வல்லன்; உள்ளது தவச்சிறிது ஆயினும் மிகப்பலர் என்னாள், நீள்நெடும் பந்தர் ஊண்முறை ஊட்டும் - புறம்.331:6-8 | பசித்தோர்க்கு உணவு ஊட்டல் (வழங்கல்) |
| | பாணர் ஆர்த்தவும், பரிசிலர் ஓம்பவும், ஊணொலி அரவமொடு கைதூ வாளே - புறம்.334:6-7 | உணவு அளித்தல் |
| | பசிப்பகை கடிதலும் வல்லன் மாதோ - புறம்.400:17 | பசிப்பகை - உணவு வழங்கல் முறை |

*அமுதசுரபி என்பது ஒரு பாத்திரத்தின் பெயர். இது உணவை வழங்கிக் கொண்டேயிருக்கும் என்பது மரபு.[30] இது போல மேற்சுட்டிய அட்டவணையில் நெடுங்குழி (அகம்.152), சால்பதம் (அகம்.249), வறுங்கலம்*

*(புறம்.171) என்ற மூன்றும் உணவு உண்ணும் கலங்களைக் குறிப்பிட்டு அவற்றின்வழி உணவு வழங்கியது உணர்த்தப்பட்டது.*

### 4.3.2. ஊன் வகைகள்

*உணவுப் பொருள்களில் ஊன் உணவு வழங்கப்பட்டது. இது பல இடங்களில் (சங்கப் பாடல்களில்) இடம்பெற்றுள்ளது. உணவு இரு வகையாகப் பிரிகிறது.*

1. *சமைக்காத ஊன் பொருள்*
2. *தீயிட்டுச் சமைத்த உணவுப் பொருள்*

*இவற்றுள் ஓரிடத்தில் கடலிலிருந்து கொண்டு வரப்பட்ட மீன் வழங்கப்பட்டதாகக் கூறப்படுகிறது. மற்ற இடங்களில் உடும்பு, ஆடு, கோழி, பன்றி, மான் போன்றவற்றின் தசைகள் சமைக்கப்பட்டுத் தரப்பட்டுள்ளன. சில சூழல்களில் ஊனையும் அரிசியையும் சேர்த்துச் சமைத்துச் சோறாகக் கொடுத்தும் அவற்றை உருண்டைக் கட்டிகளாகக் கொடுத்தும் வந்துள்ளனர். ஊன் பெரும்பகுதியும் வேகவைத்து உண்ணும் நிலையில் உள்ளது. ஊன் இன்றி நெய்கலந்த சோற்றுத் திவலைகளும் வழங்கப்பட்டுள்ளன. "பாலுந் தசைமுண் டேதங்கு வீரெங்கள் பாடியிலே"[31] எனத் தஞ்சைவாணன் கோவை கூறும். இதில் தசை - ஆட்டிறைச்சி எனவும் பால் - ஆட்டுப்பால் எனவும் பொருள் கொள்ளப்படுகிறது.*

| பரிசில் வகை | இலக்கியத் தொடர் | பரிசில் பொருண்மைகள் |
|---|---|---|
| ஊன் வகைகள் | கடல் பாடு அழிய, இன மீன் முகந்து<br>- அகம்.30:2 | மீன் தருதல் |
| | செந்தீ அணங்கிய செழுநிணக் கொழுங்குறை<br>- அகம்.237:9 | சமைத்த உணவு அளித்தல் |
| | அறற்குழல் பாணி தூங்கி யவரொடு,<br>வறற்குழற் சூட்டின், வயின்வயின் பெறுகுவீர்;<br>- சிறு.162-163 | வேகவைத்த குழல் மீன் பெறுதல் |
| | ஆமான் சூட்டின் அமைவரப் பெறுகுவிர்<br>- சிறு.177 | வேக வைத்த மீன் அளித்தல் |
| | அவைப்பு மாண் அரிசி அமலை வெண்சோறு<br>கவைத்தாள் அலவன் கலவையொடு பெறுவீர்<br>- சிறு.194-195 | ஊன் சோறு வழங்கல் |
| | எஃகுபோழ்ந் தறுத்த வானிணக்கொழுங்குறை<br>மைஊன் பெய்த வெண்ணெல் வெண்சோறு<br>- பதிற்.2:12:16-17 | ஊன் சோறு வழங்கல் |

| பரிசில் வகை | இலக்கியத் தொடர் | பரிசில் பொருண்மைகள் |
|---|---|---|
| ஊன் வகைகள் | எறிகதிற்றி! ஏற்றுமின்...! - பதிற்.2:18:2 | திற்றியும் (இறைச்சி) சோறும் கலந்து கொடுத்தல் |
| | விருந்து கண்மாறாது உணீஇய, பாசவர் ஊனத்து அழித்த வால் நிணக் கொழுங்குறை - பதிற்.3:21:9-10 | ஊன் (தசை) தருதல் |
| | பூ நாற்றத்தை புகை கொளீஇ ஊன்துவை கறி சோறு உண்டு வருந்து தொழில் அல்லது - புறம்.14:13-14 | சோறு, ஊன் கலந்த உணவு வழங்கல் |
| | ஊன் சோற்று அமலை பாண் கடும்பு அருந்தும் - புறம்.33:14 | ஊன் சோறு கலந்த உணவு அளித்தல் |
| | அமலைக் கொழுஞ்சோறு ஆர்த்த பாணர்க்கு - புறம்.34:14 | சோற்றுத் திவலைகள் வழங்கல் |
| | மெழுகு மெல் அடையின் கொழு நிணம் பொருப்ப - புறம்.103:9 | ஊன் மட்டும் தருதல் |
| | தான் ஞெலி தீயின் விரைவனன் சுட்டு, ‘நின் இரும் பேர் ஒக்கலொடு தின்ம்’ எனத் தருதலின் - புறம்.150:12-13 | சுட்டமீன் வழங்குதல் |
| | தான் உயிர் செகுத்த மான் நிணப்புழுக்கோடு ஆன் உருக்கு அன்ன வேரியை நல்கி - புறம்.152:26-27 | மான் தசை வழங்குதல் |
| | எயினர் தந்த எய்ம் மான் எறி தசைப் பைஞ்ஞிணம் பெருத்த பசு வெள் அமலை - புறம்.177:13-14 | பன்றி தசை வெண் சோறு அளித்தல் |
| | முயல்சுட்ட ஆயினும் தருகுவேம்; புகுதந்து - புறம்.319:8 | முயல் இறைச்சி தருதல் |
| | .... வாடுஊன் கொழுங்குறை கொய்குரல் அரிசியொடு நெய்பெய்து அட்டு, துடுப்பொடு சிவணிய களிக்கொள் வெண்சோறு - புறம்.328:9-11 | கருவாடும், நெய் கலந்த சோறும் அளித்தல் |
| | மைவிடை இரும் போத்துச் செந்தீச்சேர்த்தி காயம் கனிந்த கண்அகன் கொழுங்குறை - புறம்.364:4-5 | ஆட்டிறைச்சி சோறு வழங்கல் |
| | அரவு வெகுண் டன்ன.... சூடு தருபு நிரயத் தன்னவென் வறன் களைந்தன்றே - புறம்.376:14-15 | சுட்டமீன் தருதல் |

| பரிசில் வகை | இலக்கியத் தொடர் | பரிசில் பொருண்மைகள் |
|---|---|---|
| ஊன் வகைகள் | குறந்தா ளேற்றைக் கொழுங்கணல் விளர்<br>நறுநெய்யுருக்கி நாட் சோறீயா<br>- புறம்.379:8-9 | பன்றி இறைச்சி சோறு வழங்கல் |
| | ஊனு மூணு முனையி னினிதென<br>- புறம்.381:1 | ஊன், சோறு கலந்து தருதல் |
| | நெய்குய்ய ஆனவின்ற<br>பலசோற்றா னின் சுவைய<br>நல்குவனின் பசித் துன்பற<br>- புறம்.382:8-10 | நெய் கலந்த உணவு வழங்கல் |
| | நிணம் பெருத்த கொழுஞ்சோற்றிடை<br>நீர்நாண நெய் வழங்கி<br>- புறம்.384:15-17 | ஊன், சோறு அளித்தல் |
| | சூடுகிழித்து வாடுஊன் மிசையவும்<br>ஊன்கொண்ட வெண்மண்டை<br>- புறம்.386:4-5 | தசை (இறைச்சி) வழங்கல் |
| | அமிழ்தன மரபி னூன்றுவை யடிசில்<br>- புறம்.390:17 | ஊன் கலந்த சோறு வழங்கல் |
| | கூர்ந்த வெவ் வம்விடக் கொழுநிணங் கிழிப்ப<br>- புறம்.393:11 | ஊன் தருதல் |
| | நெய்யுறப் பொரித்த குய்யுடை நெடுஞ்சூடு<br>- புறம்.397:13 | நெய் கலந்த உணவு வழங்கல் |
| | மன்டைய கண்ட மான்வறைக் கருணை<br>- புறம்.398:24 | வறுத்த மான் இறைச்சி தருதல் |
| | வாராது அட்ட, வாடுஊன், புழுக்கல்<br>- பெரும்.100 | கருவாடு-புல்லரிசிச் சோறு வழங்கல் |
| | சுவல்விளை நெல்லின் செவ்அவிழ்ச் சொன்றி<br>குமலி தந்த மனவுச்சூல் உடும்பின் வறைகால்<br>யாத்தது, வயின்தொறும் பெறுகுவிர்<br>- பெரும்.131-138 | உடும்பு இறைச்சி சோறு கலந்த உணவு வழங்கல் |
| | வினைஞர் தந்த வெண்ணெல் வல்சி மனைவாழ்<br>அளகின் வாட்பொடும் பெறுகுவிர்<br>- பெரும்.255-256 | நெல் சோறுடன் கோழி இறைச்சி தருதல் |
| | தண் மீன் சூட்டொடு, தளர்தலும் பெறுகுவிர்<br>- பெரும்.282 | மீன் தருதல் |
| | துராஅய் துற்றிய தருமைஅம் புழுக்கின்<br>பராஅரை வேவை 'பருகு' எனத் தண்டி காழின்<br>சுட்ட கோழ் ஊன் கொழுங்குறை<br>- பொரு.103-105 | ஆட்டிறைச்சி வழங்கல் |

| பரிசில் வகை | இலக்கியத் தொடர் | பரிசில் பொருண்மைகள் |
|---|---|---|
| ஊன் வகைகள் | ..... ஊன் ஆர் வட்டியர் சிறுகட் பன்றிப் பழுதுளி போக்கி<br>- மலை.152-153 | பன்றித்தசை வழங்கல் |
| | பரூஉக்குறை மொழிந்த நெய்க்கண் வேவையொடு குரூஉக்கண் இறடிப்பொம்மல் பெறுகுவீர்.<br>- மலை.168-169 | பொரித்த பன்றியிறைச்சி, திணையரிசி பெற்றுச் செல்லல். |
| | குறைவு இன்று பருகி, நறவு மகிழ்ந்து, வைகறை பழஞ் செருக்கு உற்றதும் அனந்தல் தீர<br>- மலை.172-173 | தேன், நெல்லில் தயாரித்த கள், வைகறைப் பொழுதில் உண்ணம் கள் ஆகியவை தருதல். |
| | வெண் எறிந்து இயற்றிய மாக்கண் அமலை தண்ணென் நுண் இழுது உள்ளீடு ஆக அசையினிர் சேப்பின், அல்கலும் பெறுவீர்<br>- மலை.441-443 | இறைச்சியுடன் சோற்றுத்திரள் நெய்யிட்டு வழங்கல். |
| | கண்பு மலி பழனம் கமழத் துழைஇ வலையோர் தந்த இருஞ்சுவல் வாளை<br>- மலை.454-455 | உடும்பு தசை, பன்றித் தசை, மான் தசை சமைத்துத் தருதல். |
| | முள் அரித்து இயற்றிய வெள் அரி வெண்சோறு<br>........................<br>........................<br>கண்டோர் மருள கடும்புடன் அருந்தி<br>- மலை.465-468 | தசை துண்டுகள் கலந்த வெள்ளிய சோறு தருதல் |
| | முடுவல் தந்த பைந்நிணத் தடியொடு நெடுவெண் ணெல்லின் அரிசி முட்டாது<br>- மலை.564-565 | இறைச்சி கலந்த சோறு வழங்கல். |

*ஊன் வழங்கும் செய்திகள் பல வகை உத்திகளைக் கொண்டு கூறப்பட்டுள்ளன. ஊன் உணவைப் "பெறுவீர்" போன்ற முன்னிலை ஏவல் தொடர்களும், ஊன் உணவைப் பெற்றனன் என்ற முற்றுத் தொடர்களும் மக்கள் உணவு பெற்று மகிழ்ந்தனர் என்பதற்குக் கூறப்பட்டுள்ளன. உணவின் சுவைகள் சில இடங்களில் கூறப்பட்டிருக்கின்றன. உணவு கிடைத்த இடங்கள், உணவை ஆக்கிய இடங்கள், பசித்தோரை அமர்த்தி மகிழ்வோடு உண்ணும்படி வேண்டுதல் முறைகள் ஆகியவை ஊன் வழங்கலில் கூறப்பட்டுள்ளன. ஊன் வழங்கியதைக் கூறுங்கால் அரியணைச் சிறப்பு (நாளிருக்கை) கொடுத்தோர் சிறப்பு, உணவைப் பெறுவோர், கொடுக்கப்படும் கலங்கள் பாத்திரம் பற்றிய*

குறிப்புகள், நெல்லைக் கூறிச் சோற்றை உணர்த்தும் குறிப்புகள், மீன் உணவைச் 'சூட்டு' எனும் சொல்லுடன் இணைத்துக் கூறும் பகுதிகள், உணவாகப் பயன்படும் விலங்குகளின் சிறப்புக்கள் போன்றவை ஊன் வழங்கலை எடுத்துக் கூறுகின்றன. உணவு வழங்கலில் பெறுவோர் முக்கிய இடத்தைப் பெறுகின்றனர். காணார், கேளார், கால் முடப்பட்டோர்க்கே மணிமேகலை உணவு வழங்கியதாகக் காப்பியம் கூறும்.[32]

### 4.3.3. தானியங்கள்

தானியங்கள் தினை, நெல், வெந்நெல், வரகு ஆகிய நான்கும் பழங்காலத்திலும் உணவுப் பொருள்களாய் இருந்தன. இவற்றை மன்னர் முதலானோர், புலவர், கலைஞர்கள் போன்றோர்க்குத் தம்மிடத்து வைத்து வழங்கியுள்ளனர். இதனை 'உணவுப் பொருள் கொடை' எனக் கூறலாம்.

| பரிசில் வகை | இலக்கியத் தொடர் | பரிசில் பொருண்மைகள் |
|---|---|---|
| தானியங்கள் | முறஞ்செவி யானைத் தடக் கையின் தடைஇ<br>இறைஞ்சிய குரல பைந் தாட் செந்திணை<br>- நற். 376:1-2 | திணை தருதல் |
| | களம் மலி நெல்லின் குப்பை வேண்டினும்<br>- புறம்.171:9 | தானியம் வழங்குதல் |
| | சில்விளை வரகின் புல்லென் குப்பை<br>- புறம்.327:2 | உணவு தானியம் (வரகு) வழங்கல் |
| | வரகும் தினையும் உள்ளவை எல்லாம்<br>- புறம்.328:3 | தானியம் (வரகு, தினை) வழங்கல் |
| | வரகும் தினையும் உள்ளவை எல்லாம்<br>இரவல் மாக்கள் உணக்கொளத் தீர்ந்தென<br>குறித்து மாறு எதிர்ப்பைப் பெறா அமையின்<br>குரல் உணங்கு விதைத்தினை<br>உரல்வாய்ப்பெய்து<br>- புறம்.333:9-12 | தானியம் (வரகு, தினை) வழங்கல், விதைத் தினையும் வழங்கப்பட்டது. |
| | மனைக் ...... களம் என்கோ ?<br>- புறம்.387:25 | மிகுதியான தானியம் அளித்தல் |
| | பகடுதரு செந்நெல் பேரொடு நல்கி<br>- புறம்.390:22 | தானியம் வழங்கல் |
| | நெடு வெண்ணெல்லின் அரிசி முட்டாது<br>- மலை.565 | அரிசி நல்குதல். |

மேற்சுட்டிய அட்டவணையில் தானியங்கள் குறித்த செய்தியாக இது தரப்படுகின்றது. தானியங்கள் அந்தந்தப் பகுதியில் கிடைப்பவையாகக் காணப்படுகின்றன. நெல் போன்ற தானியங்கள் அரிசியாகத் தரப்பட்டவையாக உள்ளன. வரகு தானியமாகவும், வரகு அரிசியாகவும் தரப்பட்டுள்ளது. தினையரிசி ‘தினை’ எனவே குறிப்பிடப்பட்டிருக்கிறது. மிகுதியான தானியம் கொடுக்கப்பட்டதென்பது நெல்லைக் குறிக்கிறது. ‘தினைத்துணை நன்றி’[33] அளவைக் குறித்தது. இதுவும் உதவி குறித்து வந்திருப்பது எண்ணத்தக்கது.

### 4.3.4. பழங்கள்

சிறுபாணாற்றுப்படை, புறநானூறு, மலைபடுகடாம் ஆகிய மூன்று இலக்கியங்களிலும் கனிகள் வழங்கியமை குறிப்பிடப்பட்டுள்ளது.

| பரிசில் வகை | இலக்கியத் தொடர் | பரிசில் பொருண்மைகள் |
|---|---|---|
| பழங்கள் | கமழ்பூஞ் சாரல் கவினிய நெல்லி<br>அமிழ்துவிளை தீம்கனி ஔவைக்கு ஈந்த<br>- சிறு.100-101 | நெல்லிக்கனி தருதல் - ஔவை. |
| | சிறியிலை நெல்லித் தீங்கனி குறியாது,<br>ஆதல் நின் அகத்து அடக்கி<br>சாதல் நீங்க, எமக்கு ஈந்தனையே!<br>- புறம்.91:9-11. | நெல்லிக்கனி - ஔவை. |
| | உண்டற்கு இனிய பழனுங் கண்டோர்<br>- மலை.282 | கனிகள் (பொதுவானவை) |

‘கனிகள்’ வழங்கல் ஓரிரு இடங்களில் வருவது காணத்தக்கது. நெல்லிக்கனியை அவ்வையார்க்கு அதியமான் வழங்கியது வரலாற்றுக் குறிப்புகளில் காணக்கிடைக்கின்றது. ‘உண்டற்கினிய பழம்’ எனல் பொதுவான கனிகளைக் குறிக்கிறது. இது குறிஞ்சியும் குறிஞ்சி சார்ந்த இடத்தில் கூறப்பட்டதாதலின் இவற்றை மா, பலா, நெல்லி, வாழை போன்ற கனிகள் எனப் பொதுவாகக் கூறலாம். இவை புன்செய்ப் பகுதியின் விளை பயிர்கள், புன்செய் - நீர் வளமற்ற பகுதி. சேற்றுநிலத்திற்கு மாறானது.[34]

### 4.3.5. பெயர் சுட்டி வரும் உணவு வகை

உணவின் பெயரோ, உணவு தயாரிக்கப்பட்ட மூலப்பொருளின் பெயரோ, ஒரு பொருளை உணவாக்கிய பின் கூறப்படும் பெயரோ, நீர் போல

*அருந்தும் பொருள் பெயரோ, சுவைத்து உண்ணப்படும் பொருளோ அல்லது இவை போன்ற உணவுப் பொருள்களோ வழங்கப்பட்டமை செய்யுட்களில் பதிவாகியிருக்கின்றது. இவை கொடை வழங்கும் சூழலில் தரப்படுதலால் இவையும் கொடைப்பொருளாகின்றன. மிகுதியும் உணவுப் பொருள்களாய் இருத்தலின் இதைப் பெறுவோர் பசிவயப்பட்டோர் என அறியமுடிகிறது. கொடுப்போர், பசித்தோர்க்கு ஈயும் ஈகைச் சிந்தனை கொண்டவராய்க் காணப்படுகின்றனர். இவ்வகையில் வழங்கப்பட்ட பொருள்களைப் பின்வரும் அட்டவணை விளக்குகின்றது.*

| **பரிசில் வகை** | **இலக்கியத் தொடர்** | **பரிசில் பொருண்மைகள்** |
|---|---|---|
| பெயர் சுட்டி வரும் உணவு வகை | மென்திணைப் புன்கம் உதிர்த்த மண்டையொடு இருங்கதிர் அலமரும் கழனிக் கரும்பின் விளைகழை பிழிந்த அம்தீஞ் சோற்றொடு பால்பெய் செந்நெற் பாசவல் பகுக்கும். - அகம்.237:10-13 | தினைச்சோறு, வெல்லம், பால் கலந்த சோறு, அவல் ஆகியன வழங்கப்பட்டது. |
| | கள்ளுடைப் பெருஞ்சோற்று எல்இமிழ் அன்ன - அகம்.266:14 | கள், மிகுதியான சோறு வழங்கல். |
| | மழவிடைப் பூட்டிய குழாஅய்த் தீம்புளி செவியடை தீரத் தேக்கிலைப் பகுக்கும் - அகம்.311:10-11 | புளிச்சோறு வழங்கல். |
| | நனைமுதிர் தேறல் நுளையர்க்கு ஈயும் -அகம்.366:11 | தேன் வழங்குதல். |
| | குடவர் புழுக்கிப் பொங்கவிழ்ப் புன்கம் மதர்வை நல்லான் பாலொடு பகுக்கும் -அகம்.393:16-17 | பசும்பால் கலந்த சோறு. |
| | பழம்படு தேறல் பரதவர் மடுப்ப - சிறு.159 | கள் வழங்குதல் |
| | எயிற்றியர் அட்ட இன்புளி வெஞ்சோறு - சிறு.175 | புளிச்சோறு அளித்தல் |
| | பாம்பு வெகுண்டன்ன தேறல் நல்கி - சிறு.237 | கள் நல்குதல் |
| | . . . . . அட்டியும், பசும்பதம் கொடுத்தும் - பட்.12:18 | பாக்கு கொடுத்தல் |
| | நனையமை கள்ளின் றேறலொடு மாந்நி - பதிற்.2:12:18 | கள் வழங்கல் |
| | உண்மின் கள்ளே யடுமின் சோறே - பதிற்.2:18:1 | கள், சோறு வழங்கல் |
| | மாரியங் கள்ளின் போர்வல் யானை - பதிற்.3:21:17 | கள் அளித்தல் |

| பரிசில் வகை | இலக்கியத் தொடர் | பரிசில் பொருண்மைகள் |
|---|---|---|
| பெயர் சுட்டி வரும் உணவு வகை | மென்றினை நுவணை முறைமுறை பகுக்கும் <br> - பதிற்.3:30:24 | தினை மாவு கொடுத்தல் |
| | தீம்சேறு விளைந்த மணிநிற மட்டம் <br> ஒம்பா ஈகையின் வண்மகிழ் சுரந்து <br> - பதிற்.5:42:12-13 | கள் வழங்கல் |
| | . . . . . . நெல்லின் <br> அம்பண வளவை விரிந்துறை போக்கிய <br> ஆர்பத நல்கு மென்ப கறுத்தோர் <br> - பதிற்.7:66:7-9 | நெல்லிருந்து பெற்ற அரிசி உணவு மிகுதியாக அளித்தல் |
| | நகையச் சாக நல்லமிர்து கலந்த <br> நடுவுநிலை திறம்பிய நயமி லொருகை <br> இருகை மாஅல் <br> - பரி.3:33-35 | அமிர்தம் வழங்கல் |
| | பெருஞ்சோறு மிகுபதம் வரையாது <br> கொடுத்தோய் <br> - புறம்.2:16 | உணவு (சோறு) அளித்தல் |
| | புய்த்தெறி கரும்பின் விடுகழை தாமரை <br> - புறம்.28:12 | கரும்பினை அளித்தல் |
| | அமலைக் கொழுஞ்சோறு ஆர்த்த பாணர்க்கு <br> - புறம்.34:14 | உணவு (சோறு) வழங்கல் |
| | கொளக்கொளக் குறைபடாக் கூழுடைவியனகர் <br> - புறம்.70:7 | நிறைந்த சோறு வழங்கல் |
| | வாக்க உக்க தேக்கள் தேறல் <br> - புறம்.115:3 | கள் வழங்கல் |
| | தான்உயிர் செகுத்த . . . . . . . . . <br> ஆன் உருக்கு அன்ன வேரியை நல்கி <br> - புறம்.152:27 | உருக்கப்பட்ட பசுநெய் போன்றிருக்கும் கள் (வேரி) நல்கப்பட்டுள்ளது. |
| | சிறுசோற்றானும் நனிபல கலத்தன் மன்னே! <br> பெருஞ்சோற்றானும் நனிபல கலத்தன் மன்னே! <br> - புறம்.235:4-5 | மிகுதியான அளவிலும் சிறிய அளவிலும் வழங்கப்பட்ட சோறு (நெற்சோறு) |
| | குரல் உணங்கு விதைத்தினை உரல்வாய்பெய்து <br> - புறம்.333:12 | தினைச்சோறு வழங்கப்பட்டது |
| | கலும் நனையால் தண் தேறலர் <br> கனிகுய்யாற் கொழுந்துவையர் <br> - புறம்.360:4-5 | கள்ளும், துவையலும் வழங்கல் |

| பரிசில் வகை | இலக்கியத் தொடர் | பரிசில் பொருண்மைகள் |
|---|---|---|
| பெயர் சுட்டி வரும் உணவு வகை | சோறு கொடுத்து, மிகப் பெரிதும் - புறம்.362:14 | மிகுதியான சோறு |
| | அரவு வெகுண்டன்ன தேறலொடு. . . . . . . - புறம்.376:14 | கள் தருதல் |
| | பாலிற் பெய்தவும், பாகிற் கொண்டவும் - புறம்.381:2 | பால், வெல்லம் கலந்த பலகாரம் |
| | தேட்கடுப்பு அன்ன நாட்படு தேறல் - புறம்.392:16 | கள் வழங்கல் |
| | மணிக்கல னிறைந்த மணநாறு தேறல் - புறம்.397:14 | கள் வழங்கல் |
| | நிழல்காண் டேற னிறைய வாக்கி ............................... ............................... கொக்குகிர் நிமிர லொக்க லார - புறம்.398:22-25 | கல், நெல்லரிசிச் சோறு கொடுத்தல் |
| | நாரரி நறவி னாண்மகிழ் தூங்குந்து - புறம்.400:14 | கள் வழங்கல் |
| | இருங்கிளை ஞெண்டின் சிறுபார்ப்பு அன்ன பசுந்திணை மூரல் பாலொடும் பெறுகுவீர் - பெரும்.167-168 | திணைச்சோறு பால் வழங்கப்பட்டது. |
| | அவரை வான்புழுக்கு அட்டி, பயில்வுற்று, இன்சுவை மூரல் பெறுகுவிர் - பெரும்.195-196 | அவரைப் பருப்பு கலந்த வரகு சோறு அளித்தல் |
| | கரும்பின் தீம்சோறு விரும்பினிர் மிசைமின் - பெரும்.262 | கரும்புச்சாறு, வெல்லம் நல்கல் |
| | வெந்நீர், அரியல் விரல் அலை, நறும்பிழி - பெரும்.281 | கள் நல்கல் |
| | சுடர்க்கடை, பறவைப் பெயர்ப்படு வத்தம், சேதா நறுமோர் வெண்ணெயின் மாதுளத்து உருப்புறு பசுங்காய்ப் போழொடு கறிகலந்து கஞ்சக நறுமுறி அளைஇ, பைந்துணர் நெடுமரக் கொக்கின் நறுவடி விதிர்த்த தகைமாண் காடியின், வகைபடப் பெறுகுவீர் - பெரும்.305-310 | நெற்சோறு, மாதுளங்காய் பொரியல், ஊறுகாயோடு வழங்கப்பட்டது. |
| | போக்குஇல் பொலங்கலம் நிறைய, பல்கால், வாக்குபு தரத்தர, வருத்தம் வீட - பொரு.86-87 | கள் அளித்தல் |

| பரிசில் வகை | இலக்கியத் தொடர் | பரிசில் பொருண்மைகள் |
|---|---|---|
| பெயர் சுட்டி வரும் உணவு வகை | பூக்கமழ் தேறல் வாக்குபு தரத்தர<br>- பொரு.157 | கள் வழங்கல் |
| | தேனினர், கிழங்கினர்.... <br>- மலை.152 | தேன், கிழங்கு வழங்கப்பட்டது. |
| | குறுமகள் ஆக்கிய வால்அவிழ்வல்சி<br>- மலை.183 | சோறு வழங்கல் |
| | பாலும் மிதவையும் பண்ணாது பெறுகுவீர்<br>- மலை.147 | பாலும், பால் கலந்த சோறும் அளித்தல் |
| | ...... கிழங்கும் தண்டினர் தரீஇ<br>- மலை.425 | கிழங்கு வழங்கல் |
| | வேய் கொள் அரிசி, மிதவை சொரிந்த<br>சுவல் விளை நெல்லின், அவரை அம்புளிங்கூழ்<br>- மலை.435-436 | நெல்லரிசிச் சோறு, புளியங்கூழ் அளித்தல் |
| | உண்ணுநர்த் தடுத்தநுண் இடிநுவணை<br>- மலை.445 | வெல்லம் கலந்த தினை மாவு அளித்தல் |
| | துளங்கு தசும்பு வாக்கிய பசும் பொதித்தேறல்<br>இளங்கதிர் ஞாயிற்றுக் களங்கள் தொறும்<br>பெறுகுவீர்<br>- மலை.463-463 | கள் அளித்தல் |

பெயர் சுட்டி வரும் உணவு வகைகளில் உணவின் அடிப்படைப் பொருளின் (மூலப்பொருள்) பெயர்கள் சுட்டப்பட்டுள்ளன. மிகுதியான உணவுகள் ஒன்றோ, இரண்டோ சேர்த்து வழங்கும் முறையில் வழங்குதல் நடைபெற்றிருக்கிறது. தேன், கள் போன்றவை அவற்றின் தன்மையுடன் புனைந்து கூறப்பட்டிருக்கின்றன. குறிப்பாக ‘நனைமுதிர் தேறல்’ எனத்தேனும், ‘அரவு வெகுண்டன்ன தேறல்’ எனக் கள்ளும் கூறப்பட்டுள்ளன. ஒரு பெயர், பல உணவுப் பொருள்களைக் குறிப்பதாகவும் இடம்பெற்றிருக்கிறது. பல உணவுப் பெயர்கள் பண்டைக்காலம் முதல் இன்றளவும் வழக்கத்தில் இருக்கின்றன. இவற்றுள் சில உண்ணும் பொருள்களாகவும் சில அருந்தும் பொருள்களாகவும் இவ்வகையில் இடம்பெற்றுள்ளன. ஓர் உணவுப் பெயர் இரண்டு அடைமொழிகளைக் கொண்டு கூறப்படுகிறது. ‘வழங்குக’, ‘பெறுவீர்’ போன்று முன்னிலை வினைச்சொற்களுடன் இப்பெயர்கள் இடம்பெற்றிருக்கின்றன. முன்னிலை

வினைகள் வியங்கோளில் இருப்பதும் வழங்கலுக்குரிய பண்பை விளக்குவன.[35] உணவின் மூலப்பொருள்கள் விளையும் நிலம் ஆகியன கூறப்பட்டிருக்கின்றன. உணவை ஆக்குவோர் கூறப்படுகின்றனர். சுவைக்கும் பொருள், உண்ணும் பொருள், அருந்தும் பொருள் எனப் பலவகையாய் இவை காணப்படுகின்றன. அனைத்தும் நிலத்தில் விளைந்தவையாகவும் காணப்படுகின்றன.

### 4.4. ஊரும் நாடும்

ஊரும் நாடுகளும் ஒருவர்க்குக் கொடைப்பொருளாக வழங்கியமை தமிழ் வரலாற்றில் குறிப்பிடத்தக்க ஒன்றாகும். இம்முறையை மன்னர்களே பின்பற்றினர் என்று தெளிவாகிறது. இவ்வழக்கம் மிகுதியும் பேரரசர்களால் பின்பற்றப்பட்டு வந்தது. சில குறுநில மன்னர்கள் அனுபவத்திலும் இது இடம்பெற்றது. ஊர் என்பது ஊரின் வருவாயைக் குறிக்கின்றது. நாட்டைப் பரிசாகத் தரும் வழக்கம் ஆட்சியைத் தருதல் எனப் பொருள் கொள்ள இடமுண்டு. ஊர், நாடு தருதல் ஆகியன கொடுப்போர்க்குப் புகழ் தருவதோடு அரசின் வளத்தையும் காட்டுகிறது. 'தள்ளா விளையுளும் தக்க உழவர்களும் இருப்பது நாடு' எனத் திருக்குறள் கூறுகிறது.[36] 'நாடு' என்பது பேரெல்லையாகவும் சிற்றெல்லையாகவும் இருந்திருக்கக் கூடும். ஆய்விற்கு எடுத்துக் கொண்ட சங்க இலக்கியங்களில் இவ்வழங்கல் முறை (ஊர், நாடு) குறைந்த அளவில் காணப்படுவது. இது இக்கொடை வகையின் தனித்தன்மையைக் காட்டும். அட்டவணையில் ஊர், நாடு, மலை போன்றவை வழங்கப்பட்ட விவரங்கள் தரப்பட்டுள்ளன.

| பரிசில் வகை | இலக்கியத் தொடர் | பரிசில் பொருண்மைகள் |
|---|---|---|
| ஊரும் நாடும் | ஓரிக் கொன்று சேரலர்க்கு ஈத்த<br>செவ்வேர்ப் பலவின் பயன்கெழு கொல்லி<br>- அகம்.209 | கொல்லி மலை |
| | ஆடுநடைப் பொலிந்த புகற்சியின் நாடுகோள்<br>அள்ளனைப் பணித்த அதியன் பின்றை<br>- அகம்.325:7-8 | தன் நாட்டை கொடுத்தல் |
| | பொன்மலி பாடலி பெறீஇயர்<br>- குறுந்.75:4 | பாடலி நகரம் அளித்தல் |
| | குறும்பொறை நல்நாடு கோடியர்க்கு ஈந்த<br>- சிறு. 109 | மலைகளுடைய நாடு வழங்கல் |

| பரிசில் வகை | இலக்கியத் தொடர் | பரிசில் பொருண்மைகள் |
|---|---|---|
| ஊரும் நாடும் | கண் அகன் வைப்பின் மண் வகுத்து ஈத்து<br>- பதிற்.3:5 | தன் நாட்டை அளித்தல் |
| | ...... குடநாட்டு ஓர் ஊர் ஈத்து<br>- பதிற்.6:5 | குடநாட்டிலுள்ள ஊர் ஈதல் |
| | நனவில் பாடிய நல் இசைக்<br>கபிலன் பெற்ற ஊரினும் பலவே<br>- பதிற்.9:85 | பல ஊர்களை அளித்தல் |
| | பூவா வஞ்சியும் தருகுவன்; ஒன்றோ ?<br>..................................<br>..................................<br>மாடமதுரையும் தருகுவன் எல்லாம்<br>- புறம்.32:2-5 | கரூர், மதுரை வழங்கல் |
| | ஆடினிர் பாடினிர் செலினே<br>நாடும் குன்றும் ஒருங்கு ஈயும்மே<br>- புறம்.109:17-18 | பறம்பு நாடும், குன்றும் கொடுத்தல். |
| | முந்நூறு ஊர்த்தே தண் பறம்பு நல்நாடு<br>முந்நூறு ஊரும் பரிசிலர் பெற்றனர்<br>- புறம்.110:3-4 | முந்நூறு ஊர்கள் வழங்கல் |
| | அளிதோ தானே பேர் இருங் குன்றே<br>..................................<br>..................................<br>கிணை மகட்கு எளிதால், பாடினள் வரினே<br>- புறம்.111:1-4 | மலையினை வழங்கல் |
| | வாடா யாணர் நாடும் ஊரும்<br>பாடுநர்க்கு அருகா ஆஅய் அண்டிரன்<br>- புறம்.240:2-3 | நாடும் ஊரும் கொடுக்கப்பட்டன |
| | அலமருங் கழனித் தண்ணடை யொழிய<br>இலம்பா டொக்கற் றலைவற்கோர்<br>கரம்பைச் சீறூர் நல்கின னெனவே<br>- புறம்.285:15-17 | மருத நிலத்து ஊர்கள், தரம்பையை உடைய சிறிய ஊர் வழங்கல். |
| | கைவார் நரம்பின் பாணர்க்கு ஒக்கிய<br>நிரம்பா இயல்பின் கரம்பைச் சீறூர்<br>- புறம்.302:6–7 | சிற்றூர்கள் வழங்கல் |

ஊர், நாடு வழங்கலில் குறிப்பிட்ட ஊர்களைச் சுட்டுவது குறைவாக உள்ளது. வழங்கப்பட்ட ஊர்களில் சிறப்பாக உள்ள பொருள்கள் குறிப்பாகத் தாவரங்கள், நீர் நிலைகள், மலை, ஆறு போன்றவை இணைத்துக் கூறப்பட்டுள்ளன. ஊரின் எல்லைகளும் அவை அடங்கியுள்ள நாட்டின்

பெயரும் இணைத்துக் கூறப்பட்டிருக்கின்றன. மன்னர்களின் சிறப்பைக் கூறும் இடங்களில் நாடும் ஊரும் தந்ததாகக் கூறப்பட்டிருக்கிறது. இது தனித்தனியாக வழங்கப்பட்டதைக் குறிக்கும். நாடும் ஊரும் பெறுவோர் கலைஞர்களாகவும், புலவர்களாகவும் இருந்துள்ளனர். ஏனைய பரிசுகள் பெறுதலினும் ஊரைப் பரிசாகப் பெறுதல் உயர்வாகக் கருதப்பட்டிருக்கின்றது. பரிசில் அளித்த ஊர்களின் எண்ணிக்கை இடம் பெற்றுள்ளது. சிற்றூர், பேரூர் என ஊரின் தன்மைகள் கூறப்பட்டுள்ளன. 'யாதும் ஊரே, யாவரும் கேளிர்'[37] என்பதும் கற்றவர்க்கே என்பதை உய்த்துணரலாம். 'கற்றவர்க்கு எல்லாம் அவர் ஊர்' என்கிறது குறள்.[38] நில அளவு, ஊர் நிருவாகம், நாட்டு நிருவாகம் ஆட்சி முறை போன்றவை வளர்ந்த சமூகத்தில் இருந்திருக்க முடியும் எனக் கருத இடனுண்டு. தன்னாட்சி முறையும் அதிலும் உள்ள சில மக்களாட்சிப் பண்புகளும் இதன்வழித் தெரிகின்றன.

## 4.5. போர்ப் பயன்படு பொருள்கள்

போரின்கண் பயன்படும் பொருள்கள் பற்பலவாம். போர், படையால் சிறப்புறும். படை, கருவிகளாலும் போர்ச் செயலாலும் சிறப்படையும். படை கூற்றுக்கும் அஞ்சாதது.[39] குறிப்பாக விலங்குகள், ஊர்திகள், வாள் போன்ற கருவிகள் என இவற்றைக் கூறலாம். இப்பொருள்களுள் மிகுதியாகக் களிறு, குதிரை, தேர் என்பன வழங்கப்படுகின்றன. இவை தனித்தனி வழங்கப்படுதலின் இவ்விடத்தில் குறிப்பிட வேண்டியதாயின. இவை மிகுதியும் போருக்குப் பயன்படுகின்றனவாகத் தெரிகின்றன. தேர் போருக்கும் மன்னர் முதலானோர் ஏறிச் செல்லவும் பயன்பட்டுள்ளன.

| பரிசில் வகை | இலக்கியத் தொடர் | பரிசில் பொருண்மைகள் |
|---|---|---|
| போர்ப் பயன்படு பொருள்கள் | இன்கடுங் கள்ளின் அஃதை களிற்றோடு<br>- அகம்.76:3 | களிறு வழங்கல் |
| | இசைநல் ஈகைக் களிறுவீசு வண்மகிழ்<br>- அகம்.152:11 | களிறுகள் வழங்கப்பட்டது |
| | அண்ணல் யானை ஈயும் வண்மகிழ்<br>- அகம்.208:4 | யானை வழங்கல் |
| | இழை அணி நெடுந்தேர் களிறொடு என்றும்<br>- அகம்.238:12 | தேரினைக் களிற்றுடன் அளித்தல் |

| பரிசில் வகை | இலக்கியத் தொடர் | பரிசில் பொருண்மைகள் |
|---|---|---|
| போர்ப் பயன்படு பொருள்கள் | நெடுந்தேர் களிற்றொடு சுரக்கும் கொடும் பூண் - அகம்.249:8 | நீண்ட தேர் யானையுடன் வழங்கல் |
| | வரைபுரை களிற்றொடு . . . ஈயும் - அகம்.303:9 | மலை போன்ற பல களிறு வழங்கல் |
| | இரும்பிடிப் பரிசிலர் போலக் கடைநின்று - அகம்.311:1 | பெண் யானை பரிசிலாக வழங்கப்பட்டது. |
| | தேர் ஈனும் வண் கையவன் - கலி.42:21 | தேர் அளித்தல் |
| | நீயே, வளியின் இயல் மிகுந்தேரூங்களிறுந் - கலி.50:15 | தேரும், களிறும் வழங்கப்பட்டது |
| | மடப்பிடிப் பரிசில் மான - குறுந்.298:7 | இளம்பிடிகளை நல்கல் |
| | சிறுவீ முல்லைக்குப் பெருந்தேர் நல்கிய - சிறு.89 | பெரிய தேர் அளித்தல் |
| | வால்உளைப் புரவியொடு வையகம் மருள - சிறு.92 | குதிரை வழங்கப்பட்டது |
| | சிறுகண் யானையொடு பெருந்தேர் எய்தி - சிறு.142 | யானை, தேர் வழங்கப்பட்டது |
| | கடுந்தொழில் வினைஞர் கைவினை முற்றி<br>. . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . .<br>ஊர்ந்துபெயர் பெற்ற எழில்நடைப் பாகரொடு<br>மாசெல ஒழிக்கும் மதனுடை நோன்தாள் - சிறு.259-260 | தேர், யானை, குதிரை வழங்கப்பட்டது. |
| | தேர்வண் மலையன் முந்தை, பேர் இசை - நற்.100:9 | தேர் கொடுத்தல் |
| | பண்சுமை நெடுந்தேர்ப் பாணியின் ஒலிக்கும் - நற்.167:4 | ஒலி எழுப்பும் அணிகலன் அணியப்பெற்ற நெடுந்தேர் வழங்கல் |
| | இரவலர் வரூஉம் அளவை அண்டிரன்<br>புரவு எதிர்ந்து தொகுத்த யானை போல - நற்.237:7 | யானைகள் வழங்கல் |
| | தேர்வண் விராஅன் இருப்பை அன்ன, என் - நற்.379:7 | தேர் வழங்கல் |
| | தேர் வீசு இருக்கை போல - நற்.381:9 | தேர் வழங்கல் |

| பரிசில் வகை | இலக்கியத் தொடர் | பரிசில் பொருண்மைகள் |
|---|---|---|
| போர்ப் பயன்படு பொருள்கள் | தொழில்புகல் யானை நல்குவன் பலவே<br>- பதிற்.4:40:31 | போர் புரியும் யானைகள் வழங்கப்பட்டது. |
| | பாடு விறலியர் பல்பிடி பெறுக<br>- பதிற்.5:43:22 | பல பிடிகள் பரிசாக வழங்கப்பட்டது. |
| | கொண்டி மள்ளர் கொல்களிறு பெறுக<br>- பதிற்.5:43:25 | ஆண் யானை பரிசாக வழங்கப்பட்டது. |
| | அட்டானானே குட்டுவ னடுதொறும்<br>பெற்றா னாரே பரிசிலர் களிறே<br>- பதிற்.5:47:1-2 | களிறுகள் பல வழங்கல். |
| | தொன்று திறை தந்த களிற்றொடு. . . .<br>- பதிற்.7:66:7 | களிறு வழங்கல் |
| | ஈதல் தண்டா மாசிறு இருக்கை<br>- பதிற்.8:76:8 | குதிரை வழங்கல் |
| | பூநுதல் யானையொடு புனைதேர் பண்ணவும்<br>- புறம்.12:2 | யானை, தேர் வழங்கல் |
| | தேர்வீசு இருக்கை ஆர நோக்கி<br>- புறம்.69:18 | தேர் அளித்தல் |
| | தேர்வண் பாரி தண்பறம்பு நாடே<br>- புறம்.118:5 | தேர் அளித்தல் |
| | யார்க்கும் எளிதே; தேர் ஈதல்லே;<br>- புறம்.123 | தேர் நல்கல் |
| | களிறு இலவாகிய புல்அரை நெடுவெளில்<br>- புறம்.127:3 | யானை அளித்தல் |
| | இரவலர்க்கு ஈத்த யானையின், கரவு இன்றி<br>- புறம்.129:6 | யானை வழங்கல் |
| | அண்ணல் யானை எண்ணின், கொங்கர்<br>- புறம்.130:5 | தலைமை பொருந்திய யானைகள் அளித்தல் |
| | களிறு மிக உடைய இக்கவின் பெறுகாடை<br>- புறம்.131:4 | களிறு வழங்கல் |
| | மன்று படு பரிசிலர்க் காணின் கன்றொடு<br>கறை அடி யானை இரியல் போக்கும்<br>- புறம்.135:12 | கன்றுடன் யானை வழங்கல் |
| | பெருங்களிறு நல்கியோனே; அன்னது ஓர்<br>தேற்றா ஈகையும் உளதுகொல்<br>- புறம்.140:8 | மலை போன்ற யானை வழங்கப்பட்டது. |

| பரிசில் வகை | இலக்கியத் தொடர் | பரிசில் பொருண்மைகள் |
|---|---|---|
| போர்ப் பயன்படு பொருள்கள் | நாள்தொறும். . . . . களிற்றொடு கொணர்ந்து<br>- புறம்.148:3 | களிறு நல்கல் |
| | இழை அணி யானை இரப்போர்க்கு ஈயும்<br>- புறம்.153:2 | யானைகள் ஈதல் |
| | நெடு நல் யானை எம் பரிசில்<br>- புறம்.162:6 | உயர்ந்த நல்ல இலக்கணமுடைய யானை |
| | . . . . . களிற்றொடு வேண்டினும்<br>- புறம்.171:10 | களிறு கொடுத்தல் |
| | . . . . இரவலர்க்கு அருளித் தேருடன்<br>முல்லைக்கு ஈத்த செல்லா நல்லிசை<br>- புறம்.201:2-3 | தேர் வழங்கல் |
| | நீரின்று பெயரா ஆங்குத் தேரோடு<br>. . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . .<br>களிறு இன்று பெயரல், பரிசிலர் கடும்பே<br>- புறம்.205:12 | தேரும் களிறும் வழங்கல் |
| | பாஅடி யானை பரிசிலர்க்கு அருகா<br>- புறம்.233:2 | யானை நல்கல் |
| | ஆடுநடைப் புரவியும், களிறும், தேரும்<br>- புறம்.240:1 | குதிரை, களிறு, தேர் வழங்கல் |
| | திண்தேர் இரவலர்க்கு, ஈத்த தண்தார்<br>- புறம்.241:1 | தேர் நல்கல் |
| | களிறொடு நெடுந்தேர் வேண்டினும், கடவ:<br>- புறம்.313:4 | களிறு, தேர் வழங்கல் |
| | நிலவுக் கோட்டுப் பல களிற்றொடு<br>- புறம்.359:13 | தந்தங்களையுடைய களிறு வழங்கல் |
| | தெருள் நடை மாகளிற்றொடு தன்<br>அருள் பாடுநர்க்கு நன்கு அருளியும்<br>- புறம்.361:7-8 | குதிரை, களிறு வழங்கல் |
| | துடிஅடிக் குழவிய பிடிஇடைமிடைந்த<br>குவழ முகவை நல்குமதி<br>- புறம்.369:27 | யானை ஈதல் |
| | கொய்யுளைய மாஎன்கோ<br>- புறம்.387:23 | குதிரை வழங்கல் |

| பரிசில் வகை | இலக்கியத் தொடர் | பரிசில் பொருண்மைகள் |
|---|---|---|
| போர்ப் பயன்படு பொருள்கள் | வெஞ்சின வேழம் நல்கினன், அஞ்சி யான்அது பெயர்த்தனென் ஆகத்தான் அது சிறிதென உணர்ந்தமை நாணிப்பிறிதும் ஓர் பெருங்களிறு நல்கி யோனே - புறம்.394:12-15 | வேழம், களிறு நல்கல் |
| | வாள்உளைப் புரவியோடு வயக்களிறு முகந்து கொண்டு - பெரும்.27 | குதிரை, களிறு வழங்கப்பட்டது. |
| | துடிஅடி அன்ன தூங்குநடைக் குழவியொடு பிடிபுணர் வேழம் பெட்டவை கொள்க! என - பொரு.125-126 | கன்றுகளோடு பிடிகளையும், களிற்று யானைகள் வழங்கல் |
| | கோட்டின் செய்த கொடுஞ்சி நெடுந்தேர் - பொரு.163 | தேர் வழங்கல் |
| | வெருவரு செலவின், வெகுளி வேழம் - பொரு.172 | யானைகள் வழங்கல் |
| | இலங்கு மருப்பின் களிறு கொடுத்தும் - மது.102 | களிறு கொடுத்தல் |
| | பாணர் உவப்பக் களிறுபல தரீஇ - மது.219 | பல களிறுகள் தருதல் |
| | தேரோடு மா சிதறி - மது.224 | தேருடன் குதிரைகள் வழங்கல் |
| | கொடுஞ்சி நெடுந்தேர் களிற்றொடும்வீசி - மது.752 | தேர், களிறு வழங்கல் |
| | நீர் இயக்கன்ன நிரை செலல் நெடுந்தேர் வாரிக் கொள்ளா வரை மருள் வேழம் .................................. பொலம்படைப் பொலிந்த கொய்சுவற் புரவி - மலை.571-574 | தேர், யானை, குதிரை வழங்கல் |

போர்ப் பயன்படு பொருள்களில் களிறும் அதனைச் சார்ந்த விலங்குப் பெயர்களும் மிகுதியாக இடம்பெற்றுள்ளன. யானைகளில் சிலவற்றைப் (பிடி) பரிசிலர்கள் விரும்பிச் சென்று பெற்றதாகக் கூறப்பட்டுள்ளது. களிறு, தேருடன் இணைத்தும், குதிரை, களிறு இணைத்தும் கூறப்பட்டுள்ளது. யானை தனித்தும் கூறப்பட்டுள்ளது. யானை, களிறு ஆகியவை சிறப்பு அடைகளுடன் சுட்டப்படுகின்றன. குதிரைகள் மிகுதியும் நடை, ஓட்டம் ஆகியவற்றுடன்

பதொடர்புபடுத்தப்பட்டுள்ளன. ஒரு பொருள் பல சொல்லாய், மா, மான், புரவி போன்ற சொற்களால் குதிரைகள் கூறப்பட்டுள்ளன. மன்னர்களுக்குக் களிறு, யானை ஆகியவை போர்ச் சிறப்புத் தந்தது போலக் குதிரைகளும் கூறப்பட்டுள்ளன. குறிப்பாகக் ‘களிமான் பேகன்’ என்பது பேகன் என்ற மன்னனுக்குச் சிறப்பாய் வந்தது. யானைகள் போலவே குதிரைகளும் அணிகலன் இணைத்துக் கூறப்பட்டுள்ளன. களிறுகளுக்குத் தந்தம் (கோடு) சிறப்பிக்கப்பட்டுள்ளது. யானைக்கு நடை சிறப்பித்துக் கூறப்பட்டுள்ளது. வேழம், களிறு, யானை போன்றவற்றின் பயன்பாட்டில் சிறுசிறு வேறுபாடுகள் இருப்பதாகத் தெரிகிறது.

### 4.6. பரிசில் பொருட்களில் பிற

முன் பகுதிகளில் கூறப்பட்டுள்ள பரிசில் பொருட்கள் பெயரளவிலும் கொடுப்போர், கொள்வோர் அடிப்படையிலும் தனித்துக் காணப்படுகின்றன. இவை குறிப்பிட்ட பெயர்களாய் இருப்பினும் கொடைச் சூழலில் வழங்கப்படாமல் வேறுபல சூழல்களில் சுட்டப்படுகின்றன. இதில் கொடுப்பவரும், கொள்பவரும் காட்டப்பட்டுள்ள சூழல் பரிசில் வழங்குதலைக் காட்டாமல் வேறு சூழலைத் தழுவி நிற்கின்றன. முன்னர் வந்த பொருள்களோ கொடைத்திறனைக் கூறுவதற்கு வந்தவையாகும். இங்குக் குறிப்பிடப்படும் பொருள்கள் கொடுப்போரின் தன்மை, கொள்வோரின் தன்மை ஆகியவற்றைக் குறிப்பாக உணர்த்துகின்றன. இவற்றைப் பின்வருமாறு பகுக்கலாம்.

*4.6.1. அகம் சார்ந்தவை*

*4.6.2. அறிவு சார்ந்தவை*

*4.6.3. உள்ளம் சார்ந்தவை*

*4.6.4. பொருள் சார்ந்தவை*

*4.6.5. விலங்கு சார்ந்தவை*

### 4.6.1. அகம் சார்ந்தவை

அன்பின் காரணமாகவும், நட்பின் அடிப்படையிலும், சான்றாண்மை காரணமாகவும் ஒன்றைப் (ஒரு பொருளை) பிறர்க்கு வழங்குதல் பற்றிய

குறிப்புக்கள் பல்வேறு சூழல்களில் குறிப்பிடப்பட்டுள்ளன. கொடைச்சூழல் குறிப்பாகவே வருகின்றன. 'அகம் சார்ந்தவை' என்பது அகத்துறை சார்ந்து ஒன்றை வழங்குதல் பொருட்டு அமையும் கூற்றாகும். குறிப்பாக மகட்கொடை, கையுறைப் பொருள்களைப் போன்று சிலவற்றை வழங்குதல், தலைவன் தலைவிக்கு வழங்குதல், அகத்துறை சார்ந்தோர் பாராட்டுக்களை வழங்கல் போன்றவை இதில் அடங்கும். சங்க இலக்கியங்களில் தலைவன், தலைவி போன்ற தலைமைப் பாத்திரங்கள் வழியும் இச்செய்திகளை அறியலாம். ஆய்விற்கு எடுத்துக்கொண்ட சங்க இலக்கியப் பாடல்களில் அகத்துறை உறுப்பினர்களிடையே 'வழங்குதல் செயல்' நடைபெறுகிறது. கீழ்வரும் அட்டவணையில் தரப்படும் கொடைச் செய்திகள் மனத்தளவில் அன்பின் காரணமாக நிகழ்ந்தவை.

| பரிசில் வகை | இலக்கியத் தொடர் | பரிசில் பொருண்மைகள் |
|---|---|---|
| அகம் சார்ந்தவை | தண்துறை யூரன் வரைக<br>எந்தையும் கொடுக்க' என வேட்டேமே!<br>- ஐங்.6:5-6 | தலைவியைப் பெறுதல் |
| | வந்தனன்; எதிர்ந்தனர் கொடையே;<br>அந்தீங் கிளவி! பொலிக, நின் சிறப்பே<br>- ஐங்.300:3-4 | தலைவியைக் கொடுத்தல் |
| | மருளி மடநோக்கின் நின் தோழி என்னை<br>அருளீயல் வேண்டுவல், யான்<br>- கலி.61:16-17 | தலைவியைப் பெறுதல் |
| | ஆர்வுற்று, எமர், கொடை நேர்ந்தார் அலர் எடுத்த<br>ஊராரை உச்சி மிதித்து<br>- கலி.104:75-76 | தலைவியைக் கொடுத்தல் |
| | படரும், பனை ஈன்ற மாவும் - சுடர் இழை,<br>நல்கியாள், நல்கியவை<br>- கலி.138:12-13 | பனையால் செய்யப்பட்ட குதிரை |
| | உறீஇயாள் ஈத்த இம்மா<br>எழினுதல் ஈத்த இம்மா<br>நேரிழை ஈத்த இம்மா<br>- கலி.139:19, 25, 31 | பனையால் செய்த குதிரை |
| | என் உள் இடும்பை தணிக்கும் மருந்தாக,<br>நன்னுதல் ஈத்த இம் மா<br>- கலி.140:15-16 | பனையால் செய்த குதிரை |
| | பொருந்தாதார் போர்வல் வழுதிக் கருத்திறை<br>போலக் கொடுத்தார் தமர்<br>- கலி.141:24-25 | மகட்கொடை வழங்கல் |

பெற்றோர் தன் மகளைத் தலைவனுக்கு மணம் முடித்துக் கொடுக்க விரும்புகின்றனர் என்ற தலைவி கூற்று, வழங்குதல் முறையைச் சுட்டுகிறது. கொடுத்தல் என்ற சொல் இப்பொருளில் வழங்குகிறது. (ஐங்.6) அகத்துறையில் மகளை மணம் செய்து கொடுத்தல் "கொடை" என்ற சொல்லால் குறிக்கப்படுகின்றது. அகத்துறையில் தலைவியை 'மகட்கொடையாக வழங்குதல்' அடங்கிய செய்திகளே மிகுந்துள்ளன.

### 4.6.2. அறிவு சார்ந்தவை

அறிவுத்திறன், புலமைத் திறன் அடிப்படையில் மற்றவர்க்கு மதிப்பளித்து அவர்க்கு வேண்டுவனவற்றை வழங்கிய குறிப்புகள் சங்க இலக்கியங்களில் காணப்படுகின்றன. அவை புலவர், மன்னர் போன்றோர்க்கு மட்டுமின்றி வேறுசிலரிடையிலும் நிகழ்ந்தனவாய்க் குறிப்பிடப்பட்டுள்ளன. குறிப்பாக இவ்விடத்து இரவலர் போன்றோர் வெளிப்படையாக வருகின்றனர். கொடுப்போர் பெயரும் வரலாற்று அடிப்படையில் இடம் பெற்றுள்ளது. இறைவனிடமும், அரசனிடமும் பிறவி, செல்வம் போன்றவற்றைக் கேட்கும் மரபு தமிழ் இலக்கியங்களில் பதிவாகியிருக்கிறது.

| பரிசில் வகை | இலக்கியத் தொடர் | பரிசில் பொருண்மைகள் |
|---|---|---|
| அறிவு சார்ந்தவை | ....................... யாஅம் இரப்பவை<br>அருளும் அன்பும் அறனும் மூன்றும்<br>- பரி.5:80 | அன்பு, அருள், அறன் தருதல் |
| | அறம் செய் தீமோ, அரள்வெய் யோய் என<br>- புறம்.145:7 | அருள் வழங்கல் |

மேலே அட்டவணையில் குறித்த இரண்டு எடுத்துக் காட்டுகளும் இறைவனுக்கும் அரசனுக்கும் தனித்தனியே பொருந்துபவை. இறைவனிடம் கேட்கப்பட்ட அருள் இறைவனுக்கும் அரசனுக்கும் வழங்கல் முறையில் ஓர்மை காணப்படுகிறது. இறைவன் வழங்குவதை மன்னனும் வழங்குவதாகக் கொள்ளல் தகும்.

### 4.6.3. உள்ளம் சார்ந்தவை

புலவர்கள், மன்னர்களையும் இறைவனையும் உயர்ந்தோரையும் நோக்கிச் சில வேண்டுகோள்களை முன் வைக்கின்றனர். உள்ளம் 'சார்ந்த கொடை' என்பது கொடை வழங்கவோ, கொடை பெறவோ தம் உள்ளம் விரும்புவதாகக் கூறும் நிலையாகும். எனில், கொடை நிகழ்ச்சிகள் நடைபெறாவிடினும் "கொடை" நல்க விரும்பும் மன்னர்களின் உள்ளமும், விரும்பியதை வழங்கும் கேட்கும் புலவரின் உள்ளமும் வெளிப்படுவதைக் காணமுடிகிறது. நக்கீரர் வீடுபேறு வழங்கக்கேட்டல், மன்னன் ஒருவன் தன்னையே வழங்க விரும்புதல், புலவரும், தம்மை அர்ப்பணிக்க விரும்புதல், மன்னனும் அரசியும் ஒன்றாக வாழ்தலைத் தனக்குப் பரிசாக வழங்க வேண்டின், உயிரையே வழங்கும் பண்புடையவன் என மன்னன் பண்பைக் கொடையுடன் சார்த்திக் கூறல் ஆகியவை கொடை உள்ளத்தைக் காட்டும் செய்திகளாக அறியப்படுகின்றன. இவை சார்ந்த தொடர்கள் பின்வரும் அட்டவணையில் தரப்பட்டுள்ளன.

| பரிசில் வகை | இலக்கியத் தொடர் | பரிசில் பொருண்மைகள் |
|---|---|---|
| உள்ளம் சார்ந்தவை | ஒருநீ ஆகித் தோன்ற, விழுமிய<br>பெறல் அரும் பரிசில் நல்குமதி<br>- திரு.295 | வீடு பேறு பெறுதல் |
| | பாரியும் பரிசிலர் இரப்பின்<br>வாரேன் என்னான் அவர்வரை யன்னே<br>- புறம்.108:5-6 | பாரி தன்னையே தருதல் |
| | யாமும் பாரியும் உளமே<br>- புறம்.110-5 | கபிலரும், பாரியும் பரிசாதல் |
| | நெய்யொடு துறந்த மையிருங் கூந்தல்<br>மண்ணுறு மணியின் மாசுஅற மண்ணிப்<br>புதுமலர் கஞல, இன்று பெயரின்<br>அதுமன், எம்பரிசில் ஆவியர் கோவே!<br>- புறம்.147:6-9 | பேகன் தன் மனைவியுடன் இணைவதையே பரிசாகப் பெறுதல் |
| | நாடு இழந் தனினும் நனிஇன்னாது' என<br>வாள்தந் தனனே, தலை எனக்கு ஈயத்<br>தன்னிற் சிறந்தது பிறிது ஒன்று இன்மையின்<br>- புறம்.165:11-13 | குமணன் தன் தலையைக் கொடுத்தல் |
| | பாடுநர் போலக் கைத்தொழுது ஏத்தி,<br>இரந்தன்றாகல் வேண்டும் - பொலந்தார்<br>- புறம்.226:3-4 | |

பொருள் வழங்குவோரின் செயல் தன்மையை உணர்த்தாது, உள்ளத்தின் தன்மையை மிக உயர்வாகக் கூறும் போக்கினைக் கொடை வழங்கல் முறையில் காணலாம். வீடு பேற்றினை வேண்டினும் இறைவன் தருவான் எனக் கூறுவது சமய அடிப்படையிலானது. தன்னையே இரந்து ஒருவர் கேட்பினும் கொடுக்கக் கூடியவன் என்று பாரியைக் குறிப்பிடுவது அவனுடைய உள்ளத்தின் விரிவைக் காட்டுகிறது. தன்னை வழங்குவதற்குப் பாரி மட்டுமன்றிப் பாரியுடன் தானும் உள்ளோம் எனக் குறிப்பது நட்புள்ளத்தைக் காட்டுகிறது. இம்முறையில் சொல்லப்படும் பேகன் இல்லறம் குறித்த செய்தியும் பிறவும் வழங்குவோரின் உள்ளப் பெருமையைக் காட்டுவதாக அமைந்திருக்கின்றன.

### 4.6.4. பொருள் சார்ந்தவை

பொருள் என்னும் சொல் உணவு, உடை முதலான பொருள்களையும், செலவு செய்யும் செல்வம் முதலானப் பொருட்களையும் குறிக்கும். “பொருளில்லார்க்கு இவ்வுலகம் இல்லை”[40] என்பதில் பொருள் என்பது செல்வத்தைக் குறிக்கும். “பொருளல்லவரைப் பொருளாகச் செய்யும்”[41] என்பதில் பொருள் என்பது மதிப்பையும், புகழையும் குறிக்கிறது. கொடை வழங்குவதில், பொருள் என்பது செல்வத்தைக் குறிக்கிறது. இப்பொருளில் இதனைப் பயன்படுத்திப் பொருள் என்ற சொல் சில இடங்களில் வந்துள்ளது. பொருள் எனக் குறிக்காமல் ஒன்று என்ற எண்ணுப்பெயராலும் வழங்கப்படும் பொருள்கள் சுட்டப்படுகின்றன. இவ்வாறு வரும் தொடர்கள் அட்டவணையில் தரப்படுகின்றன. தெய்வங்களுக்கு வழங்கப்பெறும் சிறப்புப்பொருள்களும் இவ்வகையில் அடங்குகின்றன.

| பரிசில் வகை | இலக்கியத் தொடர் | பரிசில் பொருண்மைகள் |
|---|---|---|
| பொருள் சார்ந்தவை | நல்இசை தரூஉம் இரவலர்க்கு உள்ளிய<br>- அகம்.162:17 | விரும்பிய பொருளைத் தருதல் |
| | நசைதர வந்தோர் இரந்தவை<br>இசைபடப் பெய்தல் ஆற்று வோரே!<br>- அகம்.377:14-15 | வேண்டிய செல்வம் கொடுத்தல் |
| | புதுவன ஈகை வளம் பாடி, காலின்<br>- கலி.95:9 | புதிய பொருள்கள் கொடுத்தல் |

| பரிசில் வகை | இலக்கியத் தொடர் | பரிசில் பொருண்மைகள் |
|---|---|---|
| பொருள் சார்ந்தவை | நீரொடு சொரிந்த மிச்சில், யாவர்க்கும்<br>வரைகோள் அறியாச் சொன்றி<br>- குறுந்.233:5-6 | ஈட்டிய பொருள்கள் வழங்குல் |
| | நட்டோர் உவப்ப, நடைப்பரி காரம்<br>முட்டாது கொடுத்த, முனைவிளங்கு தடக்கை,<br>துளிமழை பொழியும் வளிதுஞ்சு நெடுங்கோட்டு<br>- சிறு.104-106 | இயன்ற பொருட்கள் அளித்தல் |
| | வரிசை அறிதலும், வரையாது கொடுத்தலும்,<br>பரிசில் வாழ்க்கைப் பரிசிலர் ஏத்த;<br>- சிறு.217–219 | மிகுதியான செல்வம் வழங்கல் |
| | ஆர் வளம் பழுனிய ஐயம் தீர் சிறப்பின்<br>- பதிற்.3:21:16 | குறையாத செல்வம் வழங்கல் |
| | பெரிய ஆயினும் அமர் கடந்து பெற்ற<br>அரிய என்னாது ஓம்பாது வீசி<br>- பதிற்.5:44:3-4 | பேரில் வென்ற பொருள் வழங்கல் |
| | இரப்போர்க்கு கவிதல் அல்லதை, இரைஇய<br>மலர்பு அறியா எனக் கேட்டிடும்; இனியே<br>- பதிற்.6:52:11-12 | வேண்டிய பொருள் அளித்தல் |
| | இல்லோர் புன்கண் தீர நல்கும்<br>- பதிற்.9.86:6 | துன்பம் நீங்க பொருள் அளித்தல் |
| | வைத்த வஞ்சினம் வாய்ப்ப வென்று,<br>வஞ்சி மூதூர்த் தந்து பிறர்க்கு உதவி<br>- பதிற்.9:8-9 | போரில் வென்ற பொருள் வழங்கல் |
| | பொறி வரிச்சாபமும், மானும், வாளும்,<br>செறி இலை ஈட்டியும், குடாரியும், கணிச்சியும்<br>செறு கதிர்க் கனலியும், மாலையும் மணியும்<br>வேறு வேறு உருவின் இவ்ஆறு<br>இருகைக்கொண்டு<br>- பரி.5:65–68 | வில், மரம், வாள், ஈட்டி, கோடாரி, மழு, மாலை, மணி ஆகியன வழங்கல் |
| | அகலாச் செல்வம் முழுவதும் செய்தோன்<br>- புறம்.34:15 | பெருஞ்செல்வம் வழங்கல் |
| | செல்வை ஆயின், செல்வை ஆகுவை<br>- புறம்.70:16 | செல்வம் வழங்கப்பட்டது |

| பரிசில் வகை | இலக்கியத் தொடர் | பரிசில் பொருண்மைகள் |
|---|---|---|
| பொருள் சார்ந்தவை | நின்னை வருதல் அறிதனர் யாரோ ? - புறம்.138:11 | பல பரிசு அளித்தல் |
| | புரவுக்கடன் பூண்ட வண்மை யானே - புறம்.149:5 | கொடையாகச் செல்வம் பல கொடுத்தல் |
| | என் அளந்து அறிந்தனை நோக்காது, சிறந்த நின் அளந்து அறிமதி, பெரும என்றும் - புறம்.161:24-25 | மிகுதியான செல்வம் பெறுதல் |
| | வல்லாங்கு வாழ்தும் என்னாது, நீயும் எல்லோர்க்கும் கொடுமதி - மனைகிழவோயே - புறம்.163:6-7 | பரிசாகப் பெற்ற பொருள் வழங்கல் |
| | யார்க்கும் ஈய்ந்து, துயில் ஏற்பினனே - புறம்.317:7 | போரில் வென்ற பொருட்கள் |
| | அருகாது ஈயும் வண்மை உரைசால் நெடுந்தகை ஓம்பும் ஊரே புறம்.320:17-18 | சிறந்த பொருட்களை அளித்தல் |
| | உள்ளியது சுரக்கும் ஓம்பா ஈகை - புறம்.323:4 | விரும்பும் பொருள் ஈதல் |
| | பாடிச் சென்றோர்க்கு அன்றியும், வாரிப் புரவிற்கு ஆற்றாச் சீறூர்த் தொன்மை சுட்டிய வண்மையோனே - புறம்.330:5-7 | எல்லோர்க்கும் பரிசு வழங்கல் |
| | பரிசில் பரிசிலர்க்கு ஈய, உரவுவேல் காளையும் கைதூவானே - புறம்.334:10-11 | வேந்தரிடம் பெற்ற பொருள்களை வழங்கல் |
| | மலைத் தாரமும், கடல் தாரமும் தலைப் பெய்து, வருநர்க்கு ஈயும் புறம்.343:7-8 | மலையில், கடலில் கிடைத்தப் பொருள் வழங்கல் |
| | பகைவர் புகழ்ந்த ஆண்மை, நகைவர்க்குத் தாஇன்று உதவும் பண்பின் - புறம்.373:35 | பகை மன்னனிடத்து வென்ற பொருள் தருதல் |
| | பிறர், பாடுபுகழ் பாடிப்படர்பு அறியேனே; - புறம்.383:17 | குறைவில்லாச் செல்வம் பெறுதல் |
| | இடுக்கண் இரியல் போக, உடைய கொடுத்தோன் எந்தை, கொடைமேந் தோன்றல் - புறம்.388:6-7 | தன்பால் உள்ளவற்றைக் கொடுத்தல் |

| பரிசில் வகை | இலக்கியத் தொடர் | பரிசில் பொருண்மைகள் |
|---|---|---|
| பொருள் சார்ந்தவை | உள்ளி வருநர் கொள்கலம் நிறைப்போய்<br>தள்ளா நிலையை ஆகியர் எமக்கு - என<br>- புறம்.398:14-15 | அரிய பொருள் வழங்கப்பட்டது. |
| | வழங்கத் தவாஅப் பெருவளன் எய்தி<br>- பெரும்.26 | குறையாத செல்வம் வழங்கல் |
| | புலவோர்க்குச் சுரக்கும் அவன் ஈகை மாரியும்<br>- மலை.72 | பெருஞ்செல்வம் ஈதல் |
| | நிலம் தினக் கிடந்த நிதியமொடு, அனைத்த<br>- மலை.575 | பழைய பொருள் கொடுத்தல் |

பொருள் நல்கல் மிகுதியும் அரசர்க்குரியதாகக் காணப்படுகிறது. அது புகழ் கருதி வழங்கப்பட்டதாகவும் தெரிகிறது. பொதுவாகப் பொருள்களும் நிலவகையில் இடமும் கொடைப் பொருள்களாகத் தரப்பட்டிருக்கின்றன. வறியோர்க்கு வழங்கியது, புலவர்க்கு வழங்கியது, புகழுக்கு வழங்கியது, புகழ்ந்தோர்க்கு வழங்கியது, நட்புக்கு வழங்கியது, செல்வ வளத்தின் பொருட்டு வழங்கியது, இடுக்கண் வருங்கால் வழங்கியது எனப் பலவகைப்பட்ட பொருள்கள் வழங்கப்பட்டமை பொருள் வழங்கலில் அறிய முடிகிறது.

### 4.6.5. விலங்கு சார்ந்தவை

விலங்குகளைப் பயன்படுத்தும் சமூகமாகச் சங்க காலச் சமூகம் இருந்தது. போர், உழவு, பிற பயன்பாடுகள் ஆகியவற்றிற்கு விலங்குகள் பயன்பட்டன. இவற்றுள் பல வீட்டு விலங்குகளாகவும், அரண்மனையில் பாதுகாக்கப்படும் விலங்குகளாகவும் காணப்படுகின்றன. அறிவுத் திறத்திற்கும், புலமைக்கும் பரிசுப் பொருள்களாக விலங்குகள் பயன்பட்டிருப்பதைக் காணமுடிகிறது. இதுபோல் பறவைகளும் பயன்பட்டமையால் அவற்றையும் வழங்கும் மரபு காணப்படுகிறது. விலங்குகள், பறவைகள் ஆகியவற்றுள் சிலவற்றைப் பயன்படுத்தியுள்ளனர். இவ்விவரங்களைக் கீழே தரப்படும் அட்டவணை தெரிவிக்கின்றது.

| பரிசில் வகை | இலக்கியத் தொடர் | பரிசில் பொருண்மைகள் |
|---|---|---|
| விலங்கு சார்ந்தவை | ஏறுமுந் துறுத்து, சால்பதம் குவைஇ<br>- அகம்.249:7 | காளை கொடுத்தல் |
| | மாசெலவு ஒழிக்கும் மதனுடைய நோன்தாள்<br>- சிறு.259 | வெள்ளை எருது வழங்கல் |
| | கபிலையொடு குடநாட்டு ஓர்... ஈத்து<br>- பதிற்.பதி.6 | பசுக்களை வழங்கல் |
| | மறியும், மஞ்ஞையும், வாரணச் சேவலும்<br>- பரி.5:64 | வெள்ளாட்டுக் குட்டி, மயில், சேவல் அளித்தல் |
| | இனமலி கதச் சேக் களனொடு வேண்டினும்<br>- புறம்.171:8 | காளைகளைத் தொழுவத்தோடு வழங்கல் |
| | மன்னு நிறையும் நிரை என்கோ<br>- புறம்.387:24 | பசுக் கூட்டங்கள் வழங்கல் |
| | மீன்பூத்து அன்ன உருவப் பல் நிரை<br>ஊர்தியொடு நல்கி யோனே<br>- புறம்.399:31-32 | பல ஆநிரை வழங்கல் |
| | கறங்கு மணி துவைக்கும் ஏறுடைப்பெருநிரை<br>- மலை.573 | ஏறும், பசுக் கூட்டங்களும் வழங்கல் |

*விலங்குகளுள் பயன்பாட்டு விலங்குகளாக உள்ளவை தரப்பட்டுள்ளன. பசுக்களை வழங்குதல் மிகுதியாகயுள்ளன. மயில், சேவல் போன்றவை தெய்வத்திற்குத் தேவர்கள் வழங்கியுள்ளனர். எருதுகளைத் தனித்தும் பணியாளருடன் சேர்த்தும் தந்துள்ளனர். பசுக்களின் பயன்பாடு பால் தருதல் எனத் தெரிகிறது. பசுக்களையும், எருதுகளையும் வழங்குதல் ‘‘பாதீடு’’ என்னும் துறையாக வழங்கப்படுகிறது.[42] கவர்ந்து வந்த ஆநிரைகள் சிறப்புக்கருதி வீரர்களுக்கும் மற்றவர்களுக்கும் வழங்கப்பட்டன. எருதுகளை அவை இருக்கும் இடத்தோடு வழங்கியதாகக் கூறப்படுவது எண்ணத்தக்கது.*

## தொகுப்புரை

*பரிசில்களாக வழங்கபட்ட பொருள்களை இவ்வியல் ஐந்து வகையாகப் பிரித்துக் கூறுகிறது. அணிகலன்கள் பொன் அணிகலன், வைர அணிகலன், பொன் பூக்கள், மணிகள், மாலைகள் போன்றவை பரிசுப்*

பொருளாக வழங்கப்பட்டமை எடுத்துக் கூறப்பட்டுள்ளன. ஆடை வகைகள், அவற்றைப் பரிசிலாகக் கொடுத்த முறை விளக்கப்படுகின்றன. உணவு வகைகள், உணவின் தன்மைகள் ஆகியன கூறப்பட்டுள்ளன. ஊர்கள், நாடுகள் போன்றவை பரிசில்களாகத் தரப்பட்டுள்ள செய்திகள் இடம்பெற்றுள்ளன. போரில் பயன்படும் வாள், தேர் போன்றவையும் சில விலங்குகளும் பரிசில்களாகத் தரப்பட்டுள்ள முறையும், வேறு சில பரிசில் பொருள்களாகத் தரப்பட்டுள்ளமையும் எடுத்துக் கூறப்பட்டுள்ளன.

## சான்றெண் குறிப்புகள்

1. பரிமேலழகர் உரை, **குறள்**.231.
2. கணேசையர் (ப.ஆ.), **தொல்., சொல்., சேனா. (உரை)**, நூ.46.
3. **குறள்**.575.
4. மேலது.,
5. மேலது.,
6. அ.பாலையன், புலியூர்க்கேசிகன் (உ.ஆர்.), **சங்க இலக்கியம் - அகநானூறு - புறநானூறு மூலமும் உரையும், புறம்.**, பா.11.
7. பொ.வே.சோமசுந்தரனார் (உ.ஆ.), **பத்துப்பாட்டு, பகுதி 2**, பட்.24.
8. **குறள்**.115.
9. மேலது.,
10. பொ.வே.சோமசுந்தரனார் (உ.ஆ.), **பத்துப்பாட்டு, பகுதி 1**, பொரு.127.
11. **தமிழ் லெக்சிகன்**, தொ.3, ப.1418.
12. உ.வே.சாமிநாதையர் (உ.ஆ.), **சிலம்பு.**, காதை.4:50.
13. அ.சங்கரவள்ளிநாயகம், **நாட்டுப்புறத்தமிழ்**, ப.30.
14. புலியூர்க்கேசிகன் (உ.ஆ.), **மணிமேகலை**, காதை 7:56.
15. ஔவை சு.துரைசாமிப்பிள்ளை (உ.ஆ.), **புறநானூறு**, பா.38.
16. ஏ.திருநாவுக்கரசு (ப.ஆ.), **பாரதியார் பாடல்கள், குயில்பாட்டு**, 28.
17. பவானந்தம் பிள்ளை, **பவானந்தர் தமிழ்ச்சொல்லகராதி**, ப.375.
18. **தமிழ் லெக்சிகன்**, தொ.2, ப.846.
19. மேலது., தொ.1, ப.242.
20. ஏ.திருநாவுக்கரசு (ப.ஆ.), **பாரதியார் பாடல்கள், தமிழ்நாடு**, அடி.1:7.
21. நச்சினார்க்கினியர் (உரை), **கலித்தொகை**, பா.125.
22. நா.பாலுசாமி, **வாழ்வியல் களஞ்சியம்**, தொ.2, ப.354.
23. **திருக்குறள்**, அதிகாரம் 9.
24. ராஜ்கௌதமன், **பாட்டும் தொகையும் தொல்காப்பியமும் தமிழ்ச் சமூக உருவாக்கமும்**, ப.211.
25. **குறள்**.83.
26. மேலது.,

27. புலியூர்க்கேசிகன் (ப.ஆ.), **நன்னூல், காண்டிகையுரை, சொல்.**, நூ.418.

28. மேலது., நூ.269.

29. மீனாட்சிசுந்தரம் பிள்ளை, **சேக்கிழார் பிள்ளைத்தமிழ்,** பா.25.

30. **அபிதான சிந்தாமணி,** ப.87.

31. **தஞ்சைவாணன் கோவை,** செய்யுள் 320.

32. புலியூர்க்கேசிகன், **மணிமேகலை,** காதை 28:220-225.

33. **குறள்**.104.

34. **தமிழ் லெக்சிகன்,** தொ.5, ப.2812.

35. தமிழண்ணல் (உ.ஆ.), **நன்னூல், சொல்.,** நூ.338.

36. **குறள்**.731.

37. ஔவை சு.துரைசாமிப்பிள்ளை (உ.ஆ.), மு.கு.நூ., பா.192.

38. **குறள்**.397.

39. மேலது., குறள்.765.

40. மேலது., குறள்.247.

41. மேலது., குறள்.751.

42. **புறப்பொருள் வெண்பாமாலை**, வெட்சிப்படலம், கொளு.13.

## இயல் 5

# பரிசு வழங்கும் சூழல்கள்

'கொடைப்பண்பு' தமிழ்ச் சமூகத்தில் தொன்மையானதென்பதையும் அது பண்பாட்டின் கூறாக அமைந்திருந்ததென்பதையும் வெளிப்படுத்தும் பிரதிகளாக-மூலங்களாகச் சங்க இலக்கியங்கள் காணப்படுகின்றன. கொடைப் பண்பைத் தொட்டுச் செல்லாத அகப்புற இலக்கியங்கள் இல்லையென்றே கூறலாம். 'பரிசு' கொடை உள்ளத்தோடு தொடர்புடையது. அகமாந்தராயினும் புறமாந்தராயினும் திணைவழித் தொடர்பான செயற்பாடுகளில் வண்மைப்பண்பு (வழங்கும் பண்பு) உடையவர்களாகக் காணப்படுகின்றனர். சமூக உறவுகளிலும் தந்தை தாய்க்கும், தாய் மகனுக்கும், மக்கள் பெற்றோர்க்கும் பலவற்றை வழங்கும் பண்புள்ளவர்களாகப் புனையப்பட்டுள்ளனர். "தந்தை மகற்காற்றும் நன்றி"[1] என்றவிடத்து 'கு' வழங்கல் பொருளில் வந்த வேற்றுமை.[2] இது கொடைப் பொருளில் வருவதை உறுதிசெய்யும். சேனாவரையர், "பிற பொருளும் உளவாயினும் கோடற்பொருள் சிறந்தமையின் எப்பொருளாயினும் கொள்ளும் என்றார்"[3] எனக் கூறுகின்றார்.

இவ்வாறு அமையும் வழங்கல் பண்பு குறிப்பிட்ட ஏதுப் பொருள் குறித்து நிகழ்கிறது. அடிப்படைக் காரணம் இன்றிக் கொடை வழங்குதலில் மன்னர்கள் ஈடுபட்டமை அரிதாம். நேரம் நோக்கித் தருதலும், கொடை பெறும் மனிதரின் வரிசை அறிந்து தருதலும், வழங்குதற்குச் சமூகம் பின்பற்றும் முறையறிந்து தருதலும் பரிசு வழங்குதலில் இணைந்து வருவன. பரிசு வழங்கப்படும் காரணங்களைத் தொகுத்துக் கூறல் 'சூழல்' எனக் கொள்ளப்படும். பரிசினை வழங்குவோர் கருணை, அன்பு, பெருமிதம், கடமை போன்ற உணர்வுகளுடன் இருப்பர். இவையும் சூழல் எனக் கொள்ளலாம். எந்தச் சூழலில் (occasion) எம்முறையில் பரிசுகள் வழங்கப்பட்டுள்ளன என்பதை ஆராய்வதே இவ்வியலின் அடிப்படை ஆகும். இவ்வியல்,

1. பரிசு வழங்கல் - பெறல் ஏதுக்கள்

2. இடம்

3. பொழுது

4. கொடுப்போர் கொள்வோர் உறவு

எனப் பகுக்கப்படுகிறது. இவை பரிசு வழங்கற்குரிய தனித்தனி அடிப்படைகளாக அமைகின்றன.

## 5.1. பரிசு வழங்கல், பெறல் - ஏதுக்கள்

ஏதுக்கள் - காரணங்கள் (Causes) 'நோக்கம்' எனவும் இதனைக் கூறலாம். இவற்றைத் தாண்டி, மன்னர் பரிசு வழங்குவது அவர்தம் "கடமை" எனக் கூறப்படுகிறது. "முறைசெய்து காப்பாற்றும் மன்னவன்"[4] என்பதும், "நன்னடை நல்கல் வேந்தர்க்குக் கடனே" (புறம்.312) என்பதும் மன்னர்களின் கடமைகளாகத் தனியாட்சிக் காலத்தில் குறிக்கப்பட்டன. இவை தற்காலத்திற்கும் பொருந்துவது எண்ணத்தக்கது. தாயும் தான் பெற்ற குழந்தையைச் சமூகத்திற்கு வழங்குகிறாள் என்று சொல்லப்படுகிறது. "ஈன்று புறந்தருதல் எந்தலைக் கடனே" (புறம்.312) என்று புறநானூறு கூறுகிறது.

சமுதாயத்தில் பரிசு வழங்குதல் மிகுதியும் மன்னர்களின் தகுதிகளில் ஒன்றாகக் கருதப்பட்டது. தம் பொருளையும் பிற தேயத்திலிருந்து கொண்டு வந்த பொருளையும் தந்ததுடன் அவரவர்க்குத் தேவையான பொருள்களும் வழங்கப்பட்டிருக்கின்றன. பசித்து வந்தோர்க்கு உணவை வழங்கி உடை, அணிகலன் போன்றவற்றைத் தந்து அனுப்பியமையும் காணமுடிகிறது. ஒருவருடைய திறன், நட்பு, வெற்றிச் செயல்கள் போன்றவற்றிற்காகவும் பரிசுகள் வழங்கப்பட்டிருக்கின்றன. பகை மன்னர்கள் பணிந்து கேட்டால் தம் நாட்டுக் குன்றுகளையே வழங்கிவிடும் இயல்பு ஆகியவை இதில் அடங்குவன. அரசர்களின் கொடைத்தன்மை அவர்களுக்கு இயல்பாகவே அமைந்தது என்பதை விளக்கும் க.கைலாசபதி,

> புலவர்களையும் பாணர்களையும் ஆதரிப்பது அரசர்களின் மற்றும் பெருஞ்செல்வர்களின் புனிதமான கடமையாகக் கருதப்பட்டது . . . . ஈகை அல்லது வள்ளன்மைப் பண்பு, வீரநிலைக் காலத்தில் போற்றப்பட்ட

பண்பாக இருந்தது . . . . வீர வாழ்க்கையில் பொருளைச் சேர்ப்பது எவ்வளவு முக்கியமோ, அவ்வளவு முக்கியம் அப்பொருளைப் புழக்கத்திற் செலுத்துவது என்று கருதப்பட்டது[5]

எனக் கூறுகிறார். இது கொடை வழங்குவதற்கான சில அடிப்படைகளை விளக்குகிறது. மேற்குறிக்கப்பட்ட ஏதுக்களைப் பின்வருமாறு வரிசைப்படுத்தி விளக்கலாம்.

### 5.1.1. திறன்

திறன் என்பது ஒருவருடைய அறிவு சார்ந்த நுட்பத்தையும் கலைச் சிறப்பையும் குறிப்பதாகும். இது மிகுதியும் கல்வியில் சிறந்தோரிடம் காணப்படுகிறது. பண்டைப் போர்க்காலச் சமூகத்தில் இத்தகைய திறன்கள் மிகவும் எடுத்துரைக்கப்பட்டன. வீரர்களும் கலை வல்லுநர்களும் இவ்வகையில் அடங்குகின்றனர். பண்டைய காலத்தில் வழங்கிய இம்முறையைப் "புலமை மரபுகள்"[6] எனக் கைலாசபதி குறிப்பிடுகிறார்.

ஒரு நாட்டின் வரலாற்றில் பாட்டுக்கலை வளர்ச்சிக்கு மிக வாய்ப்பான காலம் வீரநிலை காலமாக இருக்கலாம். அக்காலம் கூட ஒரு நிலை உறுதியற்ற காலமாகும். . . 'எனினும் அந்தச் சிறிய கால எல்லைக்குள் புலவர்களுக்கு மிகவும் உகந்த சூழல்கள் வழக்கமாக உள்ளன' . . . . அரசர்களும் குறுநில மன்னரும் தங்களுடைய புகழே பாடப்படவும் நிலையாகப் போற்றப்படவும் வேண்டும் என்ற எண்ணத்திற்காகவும் புலவர்களுக்கும் பாணர்களுக்கும் கொடை நேர்வதில் ஒருவருக்கொருவர் போட்டியிட்டனர். இதனால் அரசு ஆதரவு கலைக்கு உகந்ததாக இருந்தது[7]

என்ற கைலாசபதியின் கூற்றுக் கலைத்திறனையும், புலமைத் திறனையும் போற்றிய வீரநிலைக் காலத்தை விளக்குகிறது. இச்சூழலைப் பாரி வள்ளலின் வாழ்க்கையிலிருந்து அறிந்து கொள்ளலாம்.

அவன் தன்னை எதிர்த்து வந்தோர்க்கு அஞ்சாத நிலையில் அவர்களுக்குப் பொருள் தர மறுத்தவன். விறலியர் ஆடிவரும் கலைநிறை ஆட்டத்தைக் கண்டு நாட்டையும் குன்றையும் தருவான்[8]

என்று பாடல்களில் கூறப்பட்ட செய்தியை ந.சஞ்சீவி குறிப்பிடுகின்றார்.

*இவ்வாறு கூறுவது கலைத்திறன்களுக்கு அக்கால மன்னர்கள் கொடுத்த மதிப்பைக் காட்டுகிறது. குறிப்பாக விறலியர் கலைத்திறன் இங்கு உணர்த்தப்படுகிறது.*

*கபிலர் மலையமான் திருமுடிக்காரியிடம் சென்று அவனுடைய சிறப்புக்களைப் புகழ்ந்து பாடினார். அதுகண்ட மன்னன் தன்னைப் பாடும் புலவரின் பாடல் திறனறிந்து பொன்னும், மணியும் வழங்கினான் என்பதைச் சங்க இலக்கியங்களில் காண்கிறோம். மலையமான் திருமுடிக்காரியைக் கபிலர் பாடியதையும், அவருக்குப் பொருள் வழங்கியதையும்,*

ஒருதிசை ஒருவனை உள்ளி நாற்றிசைப்
பலரும் வருவர் பரிசின் மாக்கள்;
வரிசை அறிதலோ அரிதே; பெரிதும்
ஈதல் எளிதே மாவண் தோன்றல்!
அதுநற் கறிந்தனை யாயிற்
பொதுநோக்கு ஒழிமதி புலவர் மாட்டே (புறம்.121)

*என்ற புறநானூற்றுப் பாடல் வழி அறியலாம்.*

*'பாதீடு' என்னும் புறப்பொருள் வெட்சித்திணையில் கூறப்படுவது. இதனைத் தொல்காப்பியம் "தந்துநிறை"[9] என்றும், புறப்பொருள் வெண்பாமாலை "பாதீடு"[10] என்றும் குறிப்பிடுகின்றன. இத்துறையை விளக்கும் நச்சினார்க்கினியர்,*

தந்து நிரை - நிரைகொண்டோர் தாங்கொண்ட
நிரையைத் தம்மூர்ப்புறத்துத் தந்து நிறுத்தலும்,
நிரைமீட்டோர் தாம் மீட்ட நிரையினைத் தந்து
நிறுத்தலும்[11]

*என்று கூறுகிறார். பாதீடு நிகழ்ந்த அடிப்படையைக் கூறும் புறப்பொருள் வெண்பாமாலை ஆநிரைகள் பகுத்து வழங்கப்பட்டோரைக் குறிப்பிடுகின்றது.*

ஒள்வாள் மலைந்தார்க்கு மொற்றாய்ந் துரைத்தார்க்கும்
புள்வாய்ப்பச் சொன்ன புலவர்க்கும் - விள்வாரை
மாறட்ட வென்றி மறவர்தஞ் சீறூரிற்
கூறிட்டார் கொண்ட நிரை[12]

*என்ற எடுத்துக்காட்டுப் பாடலில் வீரர் (ஒள்வாள் மலைந்தோர்), ஒற்றர், சகுனம் பார்த்துக் கூறுவோர் (புள்வாய்ப்பச் சொன்ன புலவர்) போன்றோர்க்கு ஆநிரைகள் வழங்கப்பட்டதாகக் கூறப்படுகிறது. மேற்சொன்ன "பெறுவோர்" அவரவர்க்குரிய திறனின் அடிப்படையில் ஆநிரைகளைப் பெற்றுள்ளனர்.*

*போர்க்களத்தில் வீரர்கள் நிகழ்த்திய வெற்றிச் செயல்களைக் கண்டுணர்ந்து மன்னன் அதற்கெனவே வழங்கிய பரிசில்கள் பெறுவோரின் திறன் சார்ந்தவை ஆகும். உரையாசிரியர் பொ.வே.சோமசுந்தரனார் குறுந்தொகைப் பாடல் உரையில்,*

> எவ்வி என்பான் வேளாளர் வகுப்பினனும் மிழலைக் கூற்றத்துத் தலைவனுமாவான். இவன் யாழ்ப்பாணர்கட்குப் பெரிதும் பரிசில் வழங்கிப் போற்றியவன். இவன் இறந்த பின்னர் வழங்குவோரின்மையின் யாழ்ப்பாணர் தலை பொற்பூச் சூடாத வறுந்தலை ஆயின என்றபடி பாணர்க்குப் பொற்பூ வழங்குதல் பண்டைக்கால வழக்கம் (குறுந்.19)

*என்று உரையாசிரியர் கூறுகிறார். பாணர் என்போர் இசைப்பாடல் வல்லுநர். கருவிகளைக் கொண்டு இசை எழுப்பி வாயால் பாடும் திறனுடையோர்[13] இவர். இவர்க்குப் பொற்பூ வழங்கப்பட்டதாகக் கூறப்படுவது இவர்தம் இசைத்திறன் அறிந்து வழங்கப்பட்டதாம்.*

*முடத்தாமக்கண்ணியார் நல்லியக்கோடனின் பண்புகளைக் கூறுமிடத்து "வரிசையறிதல்" என்னும் பண்பினையும் குறிப்பிடுகின்றார் (சிறு.207-220). "வரிசை" தகுதி என்னும் பொருளது. "வெகுமானம்" என இதற்குப் பொருள் கூறப்படுகிறது.[14] தகுதி, திறன், வெகுமானம் என்பவை ஒரு பொருளைக் குறிப்பன. எனவே புலவர்களின் தகுதி, பரிசு வழங்குவதற்குரிய ஏதுக்களில் ஒன்றாக அமைகிறது என்பது கருத்தாம். சங்க இலக்கியங்களில் பாணன், பாடினி என்போர் கலை வல்லுநராய் வருவர். அவர்கள் பண்ணிசைத்தலைத் தம் தொழிலாகக் கொண்டனர். இவர்தம் திறத்தைக் கண்ட மன்னர் பரிசு வழங்கிப் போற்றி மகிழ்வித்தனர். இமயவரம்பன் நெடுஞ்சேரலாதனைக் குமட்டூர் கண்ணனார் "படையேருழவ பாடினி வேந்தே" (பதிற்.2:14:17) எனப் பாடுகிறார். இதற்கு உரையெழுதிய உரையாசிரியர், "பாடினி பாடும்*

*பாட்டுக்கு மகிழ்ந்து அவட்கு இலை முதலாயின வழங்கி அவளுடைய இசைப் புலமையைச் சிறப்பித்து ஆதரித்தலின் 'பாடினி வேந்தே' என்றார்'' (பதிற்.2:14:17) எனக் குறிப்பிடுகின்றார். விறலியர் பாடல் திறம் இங்குப் போற்றப்பட்டது. பாண்மக்களை (பாணன், பாடினி) நோக்கிப் ''பெற்றது உதவுமின்'' (பதிற்.2:18:7) எனப் புலவர் கூறினமையால் பாணர் பாடினர் என்பதும் பொருள் பெற்றனர் என்பதும் உணர்த்தப்பட்டன (பதிற்.2:18:7).*

*பல்யானைச் செல்கெழு குட்டுவன் என்பானைப் பாலைக் கௌதமனார் 3 ஆம் பத்தின் பதிகத்தில் 'அறிவிற்சிறந்த பெரியார்க்கு நாட்டைப் பகிர்ந்தளித்தனை' (பதிற்.பதி.3) எனப் பாடுகிறார். ஈண்டு, சான்றோர் சிலரின் அறிவுத்திறன் போற்றப்பட்டிருக்கிறது. யாழ் வாசித்தலில் கைவந்த பாணனுக்கு, வெண்போழ்க்கண்ணி என்னும் சேரன் முத்துக்களையும் பிற அணிகலன்களையும் அளிக்கும் இயல்புடையவன் என்பதை,*

கடனறி மரபிற் கைவல் பாண
தென்கடல் முத்தமொடு நன்கலன் பெறுகுவை (பதிற்.7:67:3-4)

*எனக் கபிலர் ஆற்றுப்படுத்தல் முறையில் குறிப்பிட்டுள்ளார். ''ஆற்றுப்படுத்தல்'' ஓர் இலக்கிய உத்தியாகத் தொல்காப்பியத்திலும் கூறப்பட்டுள்ளது.*[15]

*பெருஞ்சித்திரனார் தமக்குப் பரிசளித்த அதியமான் நெடுமான் அஞ்சி தம் திறனறிந்து பரிசு வழங்காமையை ''யானோர் வணிகப் பரிசிலன் அல்லேன்'' (புறம்.208) என மறுப்பதன் வழித் தெரியப்படுத்துகிறார்.*

**நட்பினரும் பணிந்து வேண்டினோரும்**

*பொருள் வழங்குதலில் புலவர்களுக்கும் மன்னர்களுக்கும் நட்புறவு இருந்ததைப் பழந்தமிழ்ப் பாடல்கள் குறிப்பிடுகின்றன. அவர்கள் ஒருவருக்கொருவர் தனிப்பட்ட இன்ப துன்பங்களில் பங்கெடுத்துக் கொள்ளும் உணர்வுடையவராய் இருந்தனர். மன்னர்கள் புலவர்களிடம் கொண்டிருந்த நட்புக் குறிப்பிடத்தகுந்தது. 'நட்பு' சமூக உறவில் தனித்தன்மை வாய்ந்தது. சமதகுதியுடையோரிடம் காணப்படுவதாகத் தெரிகிறது. குற்றங்கண்டவழித்*

தடுப்பது. ‘‘அகம் நக நட்பதே நட்பு’’[16] என்பது குறள். அறிவு, அனுபவம், வயது போன்ற காரணிகளில் ஓரளவு ஒத்த நிலையிலுள்ளவர்கள் நண்பர்கள் ஆகின்றனர்.

கோப்பெருஞ்சோழன் வடக்கிருந்ததும், பிசிராந்தையார் தாமும் சென்று வடக்கிருந்ததும் நட்பின் அடையாளங்களாகும் (புறம்.218). இதுபோல அதியமான், ஔவையார்; குமணன், பெருஞ்சித்திரனார் ஆகியோரின் நட்பும் அதனடிப்படையில் எழுந்த கொடை உறவும் எண்ணத்தக்கன. புலவர்களிடம் நட்புப் பாராட்டிய மன்னர்கள் அவர்களைக் கண்டு வரவேற்றுப் பொருள் வழங்கிச் சிறப்பித்தமை மரபு வயப்பட்டது. இவ்வாறு வருமிடங்கள் கொடை வழங்கலில் சிறப்பிடம் பெறுகின்றன. ஔவைக்கு அதியமான் கொடுத்த நெல்லிக்கனி வரலாறு, சங்க இலக்கியங்களிலும் நீதி நூல்களிலும் இடம்பெறுகிறது.[17] இவ்வுறவு மிகுதியும் நட்பு எனவே கூறப்படுகின்றது.

இதுபோலவே மன்னர் சிலர் தம்மைப் பணிந்த பகை மன்னர்க்கும் நாடு முதலானவற்றை வழங்கியுள்ளனர். வள்ளல்கள் எழுவருள் அதியமான் ஔவையிடம் காட்டிய அன்பால் உயர்வு பெறுகிறான். ஔவையாரைப் போற்றிப் பலவற்றைத் தந்திருப்பினும் அவன் அவர்க்கு ஈந்த நெல்லிக்கனி நிகழ்வே அவனது நட்பின் பெருமையை எடுத்துக்காட்ட வல்லது.

கமழ்பூஞ் சாரற் கவினிய நெல்லி
அமிழ்துவிளை தீங்கனி ஔவைக் கீந்த
உரவுச்சினங் கனலும் ஒளிதிகழ் நெடுவேல்
அரவக்கடல் தானை அதிகனும் . . . (சிறு.100-103)

என்ற சிறுபாணாற்றுப்படைச் செய்யுள் இதனை விளக்கும். பரிசுப் பொருள் பொன் போன்றவை இல்லை என்பதும் நெடிதுநாள் வாழ்வளிக்கும் எளிய கனி என்பதும் இவர்தம் நட்பை வெளிப்படுத்துவனவாகும். ‘சாதலை நீக்கி வாழ்நாள் நல்கும் நெல்லிக்கனியைத் தந்தான்’ (புறம்.91) எனவும் அதியமான் கூறப்படுகிறான். இதுவும் நட்பின்பாற்பட்டதேயாம். இலக்கிய வரலாற்றில் இந்நிகழ்வு பலராலும் போற்றி எழுதப்பட்டிருக்கிறது.

பெருஞ்சோற்றுதியன் சேரலாதன் என்ற பெயர் அவன் பெருஞ்சோறு வழங்கியதைக் குறிப்பிடுகின்றது. பாண்டவர்களுக்கும் கௌரவர்களுக்கும் போர் நடந்த காலை போரில் புண்பட்டார்க்கு இரங்கிப் பெருஞ்சோறு வழங்கியதைச் சங்க இலக்கியம் சுட்டுகிறது. இவ்வரலாற்றுச் செய்தியை முரஞ்சியூர் முடிநாகராயர்,

அலங்குளைப் புரவி ஐவரொடு சினைஇ
நிலந்தலைக் கொண்ட பொலம் பூந்தும்பை
ஈரைம் பதின்மரும் பொருதுகளத்து ஒழியப்
பெருஞ்சோற்று மிகுபதம் வரையாது கொடுத்தோய் (புறம்.2)

எனக் கூறுவது பெருஞ்சோற்றுதியன் சேரலாதன், போரிட்ட இருசாரார் மீதும் இவன் கொண்டுள்ள நட்பு அவர்களுக்கு உணவு வழங்கச் செய்தது என்பதை உணர்த்தும்.

பிசிராந்தையார்க்கும் கோப்பெருஞ்சோழனுக்கும் நட்பிருந்தது. பிசிராந்தையார் தனக்கும் கோப்பெருஞ்சோழனுக்கும் உள்ள உறவை அன்னப்பறவை வழித் தெரிவிக்கிறார். கோப்பெருஞ்சோழனிடம் தன் பெயரைத் தெரிவித்தாலே பறவைக்குப் பரிசு கிடைக்கும் என அவர் கூறுவதன் மூலம் இதனை அறியலாம்.

பெருங்கோக் கிள்ளி கேட்க இரும்பிசிர்
ஆந்தை அடியுறை எனினே மாண்ட நின்
இன்புறு பேடை அணியத் தன்
நன்புறு நன்கலம் நல்குவன் நினக்கே (புறம்.67)

என்ற பாடல் பிசிராந்தையார் பாடியது. இதில் கோப்பெருஞ்சோழன் அணிகலன்கள் வழங்குவான் எனக் கூறியிருப்பது அவனது கொடைத்திறன். தான் நேரில் செல்லாது பறவை ஒன்றை அனுப்பியதுமே அவன் பொருள் தருவான் எனக் கூறப்பட்டது, அவர்களுக்கிடையே நிலவிய நட்பைக் காட்டுவது.

கபிலர் பாரியைப் புகழ்ந்து பாடிய பாடல்கள் மிகுதியும் புறநானூற்றில் இடம்பெற்றுள்ளன. இவர் பாரியிடம் பரிசு பெற்றதாக யாண்டும் குறிப்பிடப்படவில்லை. ஆயினும் அவனது கொடைத்திறனைப் புகழ்ந்து மற்றவர்களிடம் கூறியுள்ளமை, அவருடைய ஆழ்ந்த நட்பைக்

*காட்டுகிறது. பாடல்களில் கபிலர் அவனது சிறப்பைத் தனித்துக் கூறுகிறார். "கடவன் பாரி கை வண்மையே" (புறம்.106) என்பது போன்ற தொடர்களால் பாரியை இப்புலவர் புகழ்ந்து கூறியுள்ளமையே நட்பிற்குச் சான்றாம்.*

*பாரியைப் பாடும் கபிலர் வாக்கிலிருந்து பாரியின் சிறப்புக் குணமொன்று அறியலாகிறது. அது தம்மைப் பணிந்த பகைவர்க்குத் தாம் வென்ற நிலவரையை ஈந்தான் எனச் சுட்டப்பட்டுள்ளது (புறம்.109). அதுபோல விறலியர்க்கும் அவர்தம் பாடலைக் கேட்டுக் குன்றுகளை வழங்குவான் (புறம்.111) என்றும், எத்துணை எளியோராயினும் இழிந்தோராயினும் பாரியைப் புகழ்வராயின் அதனாலும் அவர்கள் பொருள் பெறுவர் எனவும் இவ்வகைச் செய்திகள் (பணிதல்) சுட்டுகின்றன.*

### 5.1.3. வெற்றிச் செயல்கள் (போர் குறித்தவை)

*வெற்றிச் செயல்களில் ஈடுபடுவோர், வீரர்கள், இவற்றைப் பாடும் புலவர்கள், பாணர்கள் ஆகியோர் எனக் குறிக்கப்படுகின்றனர். வீரர்களின் போர்த்திறனைப் பாராட்டி மன்னர்கள் பரிசு வழங்கியதைச் சங்க இலக்கியங்கள் வழி அறியமுடிகிறது. மன்னர்களின் வீரச்செயல்கள் போன்றவற்றைப் பாடியுள்ள புலவர்களும் பாணர் முதலாயினாரும் இதற்கெனப் பரிசில் பெற்றுள்ளனர். இத்தகவல்கள் (தரவுகள்) யாவும் இப்பகுதியில் அடங்குவன. இவர்களும் பரிசில் பெறுவோராய்க் கருதப்படுகின்றனர்.*

*போரில் வெற்றி பெற்று வந்த வீரர்களைப் பாராட்டிப் பரிசு வழங்கியமையை அகநானூறு குறிப்பிடுகின்றது. வீரர்களுடன் இணைந்து மன்னன் வெற்றியைக் கொண்டாடினான். இது எவ்வி என்ற மன்னனின் நிலையைக் குறிப்பிடுகிறது. அரிமணவாயிலில் (போர் நிகழும் இடம்) இம்மன்னனின் வெற்றியால் ஆரவாரம் எழுந்ததும் அவன் வீரர்க்குச் சோறளித்து மகிழ்ந்ததும்,*

அரிமண வாயில் உறத்தூர் ஆங்கண்
கவ்வை ஆகின்றால் பெரிதே . . . (அகம்.266)

*என்னும் தொடர்களால் அறியப்பெறும்.*

*அதியமான், படைத்தலைவன் சிறப்பாகப் போர் செய்ததைப் பாராட்டித் தன் நாட்டையே வழங்கிய செய்தி,*

. . . . . . . . . . . . . . நாடுகோள்

அள்ளனைப் பணித்த அதியன் . . . (அகம்.325)

*என்பதால் அறியமுடிகிறது. இதில் தான் கொடுத்த நிலத்தைப் பெறும்படி அள்ளன் எனும் படைத்தலைவனை அதியமான் பணியச் செய்தது கூறப்பட்டுள்ளது.*

*கடல்பிறக்கோட்டிய செங்குட்டுவன் வெற்றிவாகை சூடி வந்த தம் வீரர்கட்குப் பாராட்டிப் பரிசு வழங்கியதையும், இவ்வெற்றியைப் பாடிய பாணர்க்கும் பொருநர்க்கும் குதிரை முதலானவற்றை வழங்கியதையும் பதிற்றுப்பத்தில் காணமுடிகிறது (பதிற்.2:42:9-15).*

*மன்னர்களின் போர்த்திறனை வெளிப்படையாகவும் சுருக்கமாகவும் பழந்தமிழ் இலக்கியங்களில் காணமுடிகிறது. மன்னர்களின் தனித்த சிறப்புக்களையும் கொடைத்திறனையும் பாடி வந்த "பரிசிலர்" சில இடங்களில் அவர்களின் போர்த்திறனை மட்டும் பாடியுள்ளனர். பரிசிலர் - இரவலரென்றும் கூறப்படுவர்.*

நாடுகண் அகற்றிய உதியஞ் சேரற்

பாடிச் சென்ற பரிசிலர் . . . (அகம்.65)

*என்று அகநானூறு உதியஞ்சேரலாதனைப் பாடுகின்றது (புலவர் மாமூலனார்). "நாடுகண்ணகற்றல்" என்பது மன்னனின் போர்ச் செயல் வெற்றியைப் பாடிச் செல்லல் - புகழ்ந்துரைத்தல் என்பதாம். உரையாசிரியர் புலியூர்க்கேசிகன் "தன்னாட்டினைத் தன் வெற்றியினால் விரிவாக்கியவன் உதியஞ்சேரலாதன். அவனைப் பாடிச் செல்லும் பரிசிலர் எதிர்பார்த்ததற்கு மேலாகப் பரிசில் பெற்றனர்" (புறம்.65) எனக் குறிக்கப்படுகிறது.*

*நன்னன் என்னும் மன்னன் "பிண்டன்" போன்ற மன்னர் பலரை வென்றவன். அதன்பொருட்டுத் தம்மைப் பாடிய புலவர்களுக்குக் களிறுகளைப் பரிசாக வழங்கினான் (அகம்.152). பரிசிலரும் அவருடைய*

சுற்றத்தாரும் மன்னர்களின் வீரத்தைப் பாடிப் பொருள் பெற்றுச் சென்றனர். பகைப்புலத்து வென்ற செல்வம் இரவலர்க்குப் பரிசாக வழங்கப்பட்டது. இமயவரம்பன் நெடுஞ்சேரலாதனின் வெற்றியைக் கூறும் பாடலில் இச்செய்திகள் பதிவாகியுள்ளன (பதிற்.2:12:7-10).

புலவர்கள் மன்னரின் வெற்றி முதலானவற்றைப் புகழும் முறை குறித்து மகிழ்ந்த மன்னர்கள் புலவர்களைப் பாராட்டும் முறைகளும் அவர்க்குப் பரிசளித்தலும் “செயல்களைப் போற்றிப் பரிசளிக்கும் முறை” ஆகும். சேரன் செங்குட்டுவன் எப்போதும் வெற்றியே பெற்றானென்றும் வெற்றி பெறுந்தோறும் புலவர் பாடினர் என்றும், பாடுந்தோறும் புலவர்கள் பரிசில் பெற்றனர் என்றும் பரணர் பாடுகின்றார் (பதிற்.5:47:1-2) மன்னர்களின் வெற்றியைப் பாடுவோருள் புலவர், பாணர், பாடினி, கூத்தர், விறலியர், பொருநர், அந்தணர், இரவலர், ஊர்மக்கள் போன்றோரும் அடங்குவர். இவர்கள் ஒவ்வொருவரும் தனித்தனியாக மன்னர் சிறப்பைப் பாடியுள்ளனர். அதனால் அவர்களும் பரிசுகளைப் பெற்றுள்ளனர். பாடல் பலவற்றில் இம்முறை பின்பற்றப்பட்டுள்ளது.

அந்தணர் அவர் செய்யும் தொழில் சிறப்புக் காரணமாகப் பரிசளிக்கப்பட்டுள்ளது (பொருளுதவி). கடவுளுக்குத் தேவதானம் கொடுக்கப்பட்டதும் பரிசளித்ததாகக் குறிக்கப்பட்டுள்ளது. அந்தணர் பரிசு பெற்றமை (பதிற்.பதி.6), இரவலர் பரிசு பெற்றமை (பதிற்.5:44, 7:66; புறம்.371), கடவுளுக்குப் பரிசளித்தமை (பதி.7), கூத்தர் பரிசு பெற்றமை (பதிற்.3:21), பாடினி, பாணர் பரிசு பெற்றமை (அகம்.349; பதிற்.பதி.2, 3:21, 4:40; புறம்.12, 302), புலவர் பரிசு பெற்றமை (பதிற்.பதி.2, 7, புறம்.12, 22, 370, 372), பொருநர் பரிசு பெற்றமை (பதிற்.பதி.2), வஞ்சி மாநகரில் உள்ளோர் பரிசு பெற்றமை (பதிற்.பதி.9), விறலியர் பரிசு பெற்றமை (பதிற்.3:21, 4:40) ஆகியவை வெற்றிச் செயல்களைப் பாடியமையைக் குறிப்பன.

### 5.1.4. பசித்து வந்தோர்

*பசியின் பொருட்டுப் பொருள்பெற வந்தோர் (உணவு) பலர். இவர்தம் செயல்கள் பற்றிய குறிப்புக்கள் பரவலாகக் காணப்படுகின்றன. மன்னர்கள் தங்கும் இடத்தில் உணவளித்தல் பெருங்கடமையாக எண்ணப்பட்டது. உணவளித்தல் உயிர்காப்பது எனக் கருதப்பட்டது. பசித்தோர்க்கு உண்டி முதலானவற்றை ஈந்தோர் சொர்க்கம் புகுவர் எனக் கூறப்பட்டது. உணவு அளித்தோர் பிறர் உயிரையே காத்தோர் எனப்பட்டனர் (புறம்.18). இம்முறையில் உணவும் பரிசில் பொருள்போலப் புகழுடையதாயிற்று. பசித்து வருவோர் இரவலராதலின் அவர்க்கு உணவும் பிற பயன்படு பொருள்களையும் வழங்கியமையும் காணமுடிகிறது. முசுண்டை என்ற குறுநில மன்னன் இரவலர்க்கு நிறைந்த உணவளித்ததை "சால்பதம் குவைஇ . . ." (அகம்.249) என நக்கீரனார் பாடியுள்ளார். சால்பதம்-சால் என்பது மிகுதி[18] என்றும், பதம் என்பது உணவு எனவும் பொருள்பெறும். சால், சால என்பன உரிச்சொல் பண்புடையனவாக அறியமுடிகிறது.*

*"செவிஅடை தீரத் தேக்கிலைப் பகுக்கும்" (அகம்.311) என்பது பாலை நிலத்தில் உள்ள மக்கள் அவ்வழி வரும் பசியால் துன்புற்றோர்க்கு உணவு கொடுத்ததைக் குறிப்பிடுகிறது. 'செவி அடை தீர' (காதடைப்பு) என்பது கடும்பசியை உணர்த்துகிறது. இதுபோல வழிச் செல்வோர்க்கும் பசுப்பால் கொடுத்துப் பசி போக்கியதையும் அறியமுடிகிறது. "நல் ஆன் பாலொடு பகுக்கும்" (அகம்.393). பசுப்பாலைக் காய்ச்சி உணவாகத் தந்தது இது.*

எயிற்றியர் அட்ட இன்புளி வெஞ்சோறு
தேமா மேனிச் சில்வளை ஆயமொடு
ஆமான் சூட்டின் அமைவரப் பெறுகுவீர் (சிறு.175-177)

*என்பது நல்லூர்நத்தத்தனார் பாடியது. இது பாணர்களை எயினர் குல மகளிர்க்கு ஆற்றுப்படுத்தியது. எயினர் குல மகளிர் இரவலர்க்கு உணவு வழங்கிய மரபு கூறப்பட்டுள்ளது. மேலும் வெண்சோறு சமைத்து இவர்களுக்கு வழங்கப்பட்டதையும் புலவர் குறித்துள்ளார் (சிறு.194-195). பாணர்க்குப் பல்வேறு வகையான உணவு கொடுத்ததையும் இந்நூல் விவரிக்கிறது (சிறு.241).*

பல்யானைச் செல்கெழுகுட்டுவன், தம் இல்லத்திற்குப் பசித்து வந்த இரவலர்களுக்கு உணவைப் பகுத்தளித்துத் தானும் உண்பதைக் கடமையாகக் கொண்டிருந்தான் *(பதிற்.3:22:9)*. பதிற்றுப்பத்தில், ''பெருஞ்சோறுகுத்தற் கெறியும்'' என்ற தொடரில் பல்யானை செல்கெழு குட்டுவனின் உணவளிக்கும் பண்பு கூறப்பட்டுள்ளது *(3:30:40)*. கடல்பிறக்கோட்டிய செங்குட்டுவன் ஆட்சியில் விறலியர் உணவு பெற்றுள்ளனர் *(பதிற்.5:49:3)*. ஆடுகோட்பாட்டுச் சேரலாதன் இரவலர்க்கு உணவு வழங்கியதை,

வாரா ராயினு மிரவலர் வேண்டித்
தேரிற் றந்தவர்க் கார்பத னல்கும் (பதிற்.6:55:10-11)

என்ற தொடர்கள் காட்டுகின்றன. ''ஆர்பதம் நல்கும் என்ப'' *(பதிற்.7:66:9)* எனச் செல்வக்கடுங்கோ வாழியாதன் ஓரிடத்தில் விளிக்கப்படுகிறான். இதுவும் அவனது உணவளித்தல் செயலைக் குறிக்கிறது. ''வருந்தி வந்தோர் மருங்க நோக்கி'' *(புறம்.27)* என்பதில் மருங்க நோக்கி என்பது சோழன் நலங்கிள்ளி வருந்தி வந்தோரின் வயிற்றுப்பசியை உணர்ந்து வழங்கியுள்ளான் என்று பொருள்படுவதாகக் குறிப்பிடப்பட்டுள்ளது *(புறம்.27)*. சோழன் நலங்கிள்ளி வறுமையில் வாடும் பாணர்க்கும் அவன் சுற்றத்தார்க்கும், ''ஊன் சோற்று அமலை'' *(புறம்.33)* கொடுத்தான் எனக் கூறப்பட்டுள்ளது.

குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவன் பாணர்க்கு அளித்த உணவை, ''அமலைக் கொழுஞ்சோறு'' *(புறம்.34)* என ஆலந்தூர் கிழார் குறிப்பிடுகிறார். கிள்ளிவளவன் அரண்மனையைக் ''கொளக்கொளக் குறைபடாக் கூழுடை வியனகர்'' *(புறம்.70)* எனக் கூறப்பட்டிருப்பதும் இவ்வகையைச் சாரும். விறலியர்க்கு உணவு தந்து கனிவிக்கும் வழக்கமுடையவன் அதியமான் *(புறம்.103)*. ஆய் அண்டிரனை, விறலியர் கீரையுடன் சேர்த்துச் சமைக்கத் துவரை, அரிசியை வேண்டினர். அதனை அவன் தந்தான். விறலியர் ''அரிசி வேண்டினெம்'' *(புறம்.140)* என்பது அது. இவ்விடத்து அரிசி என்பது துவரை அரிசி என்கிறார் உரையாசிரியர்.

இழுதின் அன்ன வால்நினக் கொழுங்குறை
. . . . . . . . . . . . . . . . . . . . . .
. . . . . . . . . . . . . . . . . . . . . .
இரும்பேர் ஒக்கலொடு தின்ம் எனத் தருதலின் (புறம்.150)

என்று தன்னைக் கண்டீரக் கோப்பெருநள்ளி அழைத்து உணவளித்ததை வன்பரணர் குறிப்பிட்டுள்ளார். ஓரி என்ற மன்னனைக் கண்டு ஆடல் பாடல்களை நிகழ்த்திய இரவலர்கள் பசியாறிச் சென்றதைப் பரணர் குறித்துள்ளார் (புறம்.153).

குமணனைச் சிறப்பித்துப் பாடும் பெருஞ்சித்திரனார் வருவோர்க்குப் பொருட்கள் பலவற்றையும் நெய் கலந்த உணவையும், கொடுத்து மகிழும் பண்புடையவன் எனப் பாடுகின்றார் (புறம்.160). இங்குக் குமணனின் பரிசுப் பொருள்களுடன் உணவையும் இணைத்துப் பார்க்க வேண்டியுள்ளது. பிட்டங்கொற்றன் என்னும் மன்னன் 'வறுங்கலம் நிறைப்போன்' என வாழ்த்தப் பெறுகிறான் (புறம்.171). 'ஏற்றுக உலையே ஆக்குக சோறே' எனப் பிட்டங்கொற்றனைப் பாடும் புலவர் கூறுவது அவன் உணவு வழங்குதலைச் சுட்டுகிறது (புறம்.172).

சிறுகுடிகிழான் இல்லத்தில் ஊண் உண்பார் ஆரவாரம் கேட்கிறது. சோறுண்ட கையுடன் செல்லும் குழந்தைகளையும், சிறார்களையும் காணமுடிகிறது என்று கூறப்படுவதாலும் அவனுடைய இல்லம் 'பசிப்பிணி மருத்துவன்' இல்லம் எனச் சுட்டப்படுவதாலும் அவன் இல்லத்தில் உணவு வழங்கியமை முக்கியச் செயலாகக் கூறப்பட்டுள்ளது (புறம்.173). தம் இல்லம் நோக்கி வருவோர்க்கு "பனைவோலை குடையும் தசையும் சோறும் வைத்துக் கொடுப்பவன்" எனவும் கூறப்பட்டுள்ளது (புறம்.177).

"பாண் பசிப் பகைஞன்" (புறம்.180) என ஒரு மன்னன் பசிக்குப் பகையாக விளங்கியது குறிக்கப்படுகிறது. பசியால் வாடுவோரைக் கண்டு மனமிரங்கிய புலவர் ஒருவர் அவர்களின் பசிதீர வல்லார் கிழான் பண்ணனைச் சென்று காணுமாறு கூறுகிறார் (புறம்.181). இம்மன்னன் பசிதீர உணவளிப்பான் என்பது கருத்து. கோப்பெருஞ்சோழன் தம் வீரர்க்கு மதுவையும், ஆமையிறைச்சியையும் வேண்டுமளவு கொடுப்பான் என்றும், இவன் பாணரின் பசிக்குப் பகைவன் (புறம்.212) என்றும் கூறப்பட்டிருப்பது மேற்சுட்டிய கருத்தைச் சாரும்.

சிறுசோற் றானு நனிபல கலத்தன் மன்னே
பெருஞ்சோற் றானு நனிபல கலத்தன் மன்னே
என்பொடு தடிபடு வழியெல்லா மெமக்கீயு மன்னே (புறம்.235)

*என்று அதியமான் நெடுமானஞ்சியை ஔவையார் பாடுகிறார். உணவு முதலானவற்றைத் தந்து மகிழ்வித்ததை இப்பகுதி குறிப்பிடுகிறது. இம்மன்னனை "உடையன் ஆயின் உண்ணவும் வல்லன்" (புறம்.315) என்றும் பாடியுள்ளார். மிகுதியான உணவு இருக்கும் போது பரிசிலர்க்கு ஈந்து எஞ்சியதை உண்பவன் என்பது இதன் பொருள். இதேபோல் ஆடல் பாடலில் சிறந்து விளங்கிய பொருநனுக்குப் பசியாற உணவு வழங்கியமையும் காணமுடிகிறது (புறம்.390).*

*பாணன் ஒருவனைத் தம் இல்லத்திற்கு அழைத்துத் தம்மிடம் உள்ள ஊன் உணவினைத் தர விரும்பும் குறுநில மன்னன் ஒருவனின் இல்லக் கிழத்தியின் கூற்று,*

புறவு மிதலு மறவு முண்கெனப்
பெய்தற் கெல்லின்று பொழுதே யதனால்
முயல்சுட்ட வாயினுந் தருகுவேம் புகுதந் (புறம்.319)

*என்று அமைந்துள்ளது. இதனாலும் நாட்டையாளுவோர் இரவலர்க்கு (பாணன்) உணவு தந்து மகிழ்ந்தது அறியப்படுகிறது. மறக்குடித் தலைவன் ஒருவன் மனைக்குச் சென்ற தங்கால் பொற்கொல்லனார் என்ற புலவர் அவ்வீரனின் மனைவியின் பல்வேறு பண்புகளைச் சிறப்பித்து "வருவிருந்து அயரும் விருப்பினள் . . ." (புறம்.326) எனப் பாராட்டுகிறார். "விருந்தயர்தல்" உணவு வழங்கியதை வெளிப்படுத்துகிறது. மேலும் புறப்பாடலில் பாணர், வீரன் ஒருவரிடம் வரகினை உணவாகப் பெற்று மகிழ்ந்தனர் என்னும் கருத்து, "பசித்த பாணர் உண்டு, கடைதப்பலின்" (புறம்.327) என்பதன்வழி அறியப்படுகிறது.*

*இது வீரன் இல்லத்தில் நிகழ்ந்திருப்பதால் வரகு உணவை உண்டு மகிழ்ந்ததையும் குறிப்பிடுகிறது எனலாம். சீறூர் மன்னன் ஒருவன் தம்மை நாடி வந்தோர்க்கு இறைச்சியுடன் கலந்த வெண்சோற்றினை நெய்பெய்து மகிழ்ச்சியுடன் தருவான் எனப் புலவர் ஒருவர் பாணர்க்கு ஆற்றுப்படுத்துகிறார்*

*(புறம்.328). பிறிதொரு தலைவன் ஒருவன் வந்த விருந்தினரைப் பந்தலில் அமர்த்தித் தகுதியறிந்து உணவு வழங்கினான் எனச் சிறப்பிக்கப் பெறுகிறான் (புறம்.331).*

*இல்லறப் பெண்கள் விருந்து உபசரித்தலைத் தலையாய கடமையாகக் கொண்டனர். விதைக்கு வைத்திருந்த தினையையும் உணவாக்கி விருந்தயரும் பண்புடையவள் எனக் கூறப்படுவது இது (புறம்.333). இல்லறப் பெண் ஒருத்தி பாணர்களையும், பரிசிலரையும் வரவேற்று அவர்களுக்கு உணவளித்து மகிழ்ந்த செய்தியையும் புறநானூறு குறிப்பிடுகின்றது. விருந்தினர்கள் உணவு உண்ணுங்கால் எழுந்த ஒலியையும் தம் பணியை நிறுத்தாது உணவளித்த தலைவியின் பாங்கையும் "ஊனொலி அரவமொடு கைதூ வாளே" (புறம்.334) எனப் புறநானூறு கூறுகிறது.*

*சிறுவெண்டேரையார் பாடல் ஒன்றில் தலைவன் ஒருவன் இரவலர்க்கு "அடைநல்கிச் சோறு கொடுத்து . . ." (புறம்.362) எனக் குறிப்பிடப்பட்டுள்ளது. இவனைக் கூகைக்கோழியார் இரப்போர்க்கு இறைச்சியையும் கள்ளையும் கொடுத்தான் எனப் பாடுகிறார் (புறம்.364). நன்னாகனார் (புறத்திணை நன்னாகனார்) தாம் பசியுற்று இரவில் ஒரு வள்ளலின் இல்லம் சென்ற போது, அவ்வள்ளல் அவரை வரவேற்றுக் கள்ளையும், இறைச்சியையும் பசிக்குக் கொடுத்ததாகப் பாடியுள்ளார் (புறம்.376). கிணைப்பொருநன் ஒருவனுக்கு இறைச்சியும், சோறும் வில்லியாதன் உணவாகத் தந்துள்ளான் (புறம்.379).*

*சோழன் நலங்கிள்ளி பொருநர்க்கு நெய் கலந்த ஊன் சோற்றையும் பிற பொருள்களையும் பசித்தோர்க்கு வழங்கும் இயல்புடையவன் என்று கோவூர்கிழார் பாடல் வழி அறியலாம் (புறம்.382). இதுபோல் பிறர் பசி போக்கிய செயலை,*

தன்பகை கடித லன்றியுஞ் சேர்ந்தோர்
பசிப்பகை கடிதலும் வல்லன் மாதே (புறம்.400)

*எனப் பாடுகிறார் கோவூர்கிழார்.*

கல்லாடனார் அம்பர்கிழான் அருவந்தையை 'என் பசி களைந்தோனே' (புறம்.385) எனத் தன் பசி போக்கியமையைப் பாடுகிறார். கிள்ளிவளவன் பொருநர், கூத்தர், இரவலர், பரிசிலர் ஆகியோர்க்கு நெய்யால் வறுக்கப்பட்ட வறையல் (வறையல்-வறுக்கப்பட்ட உணவு) (புறம்.386), இறைச்சி (புறம்.386, 393, 397), ஆவினது பால் (புறம்.386), கள் (புறம்.397) போன்ற உணவினை வழங்கியுள்ளான். கந்தலாடை உடுத்தி வந்த பொருநனுக்குப் பொகுட்டெழினி ஆடையும், உணவும் தந்து மகிழ்வித்தான் எனக் கூறப்பட்டிருப்பது பொருநனின் பசித்துயரைக் காட்டுவதாகும் (புறம்.392). பொருநன் ஒருவன் வறுமையில் வாடும் தம் சுற்றத்தாருடன் செல்ல அவர்களின் நிலையறிந்த வஞ்சன் என்பான் புத்தாடை தந்து அவர்களை அமர்த்திப் பசியாற உணவிட்டு மகிழ்வித்திருக்கிறான் (புறம்.398).

பெரும்பாணாற்றுப்படையில் பாணர்க்கு உணவு வழங்கியது பல இடங்களில் கூறப்பட்டுள்ளது. அது தொகுத்துத் தரப்பட்டுள்ளது. நெற்சோறு, விலங்கின் இறைச்சி போன்றவை உணவாகத் தரப்பட்டுள்ளன. சோறு (100, 131), தினைச்சோறு (168), வரகுசோறு (175), நெற்சோறு (255, 305), கருவாடு (100), உடும்பின் வறையல் (133), கோழி இறைச்சி (256), பச்சை மீன், சுட்ட கறி (282), பால் (168), அவரை விதைப்பருப்பு (196), கரும்புச்சாறு (262), கள் (281), மாதுளைப் பொரியல் (306, 307), மாவடு ஊறுகாய் (310) என்பன பசிக்குத் தரப்பட்ட உணவுகள் என அறியமுடிகிறது.

கரிகாலன் தன்னைக் காண வந்த பொருநர்க்கு அரிசிச்சோறு, இறைச்சி, தின்னும் பொருள்கள் ஆகியவற்றை உணவாக வழங்கினான் (பொருந.103-108), நன்னனைக் காணச் செல்லும் மக்களுக்கு வழியில் (465) கண்டோர் தம்மிடம் உள்ள உணவினைக் கொடுத்து வழியனுப்புவதாக மலைபடுகடாம் கூறுகிறது. தேன் (152), கிழங்கு வகைகள் (152, 425), இறைச்சி (152, 168, 175, 425, 458, 564), தினையரிசிச் சோறு (169), சோறு (183, 465, 565), இனிய பழங்கள் (282), பால், பால்சோறு (417), தினை மாவு (445), புளியங்கூழ் சோறு (435), கறித்துண்டுகள் கலந்த சோறு (441), சோற்றுத்திரள் (441), நெய் விழுது (442), வெல்லம் (444),

வெண்ணெல் அரிசி *(465, 565)* என்பன பசிக்குத் தரப்படும் உணவுகளாகப் புனையப்பட்டுள்ளன.

## 5.2. இடம்

பரிசுகள் வழங்கப்படும் இடம் பெரும்பாலும் பழங்காலத்தில் வரையறுக்கப்பட்டிருந்தது. முதல், கரு, உரி என்ற மூன்றனுள் முதற்பொருள் என்பது நிலத்தையும், காலத்தையும் குறித்தது. நிலம் கதை நிகழ் இடத்தையும் வாழிடத்தையும் குறிப்பதாகும். அறிவியல் உலகில் இடத்தை "வெளி" (space) எனக் குறித்தனர். 'வெளி' என்ற ஒன்று இல்லாமல் நிகழ்வுகளைச் சுட்டிக்காட்ட இயலாது. நிலம் முதல் ஆகாயம் வரையிலான பரந்த பிரபஞ்சத்தை வெளி என அழைத்தனர். இந்த வெளியில்தான் எல்லா நிகழ்வுகளும் மாற்றங்களும் நடக்கின்றன. இவை காலத்தோடு தொடர்புடையன. காலம், வெளி ஆகியவை (time and space) முதற்பொருள், கருப்பொருள் ஆகியவற்றைத் தன்னுள்ளே அடக்கியுள்ளன.

உலக வாழ்வில் மக்கள் வாழிடம் சமூக மதிப்புடையதாகவும் (social value) கருதப்படுகிறது. நாடு, நகரம், ஊர், சேரி போன்றவை வர்க்கச் சாயல் உடையனவாகவும் காணப்படுகின்றன. இவ்வாறான வேறுபட்ட இடங்களில் பரிசு கொடுப்பவரும், பெறுபவரும் அவற்றுக்குத் தக்கவாறு அமைகின்றனர். அடிப்படையில் அரசவை, போர்க்களம் போன்ற இடங்களில் வழங்கும் பரிசுகள் தனிச்சிறப்புடையனவாகக் காணப்பட்டன. இவ்விடத்தில் பரிசு வழங்கும் பொருள்கள் அனைத்து மன்னரின் நேரடித் தொடர்புடையன. மற்ற இடங்கள் யாவும் சமூகத்தின் அடுத்தடுத்த நிலையில் இருந்தவர்களால் வழங்கப்பட்டன. காலப்போக்கில் பரிசு வழங்குதல் என்பது தமிழரின் பண்பாட்டு அடையாளமாக மாறிவரும் காலத்தில் பரிசுகள் எல்லா மக்களாலும், எல்லா இடங்களிலும் வழங்கப்பட்டன.

பின்வருவன பரிசுகள் வழங்கப்பட்ட இடங்களாகப் பதிவாகியுள்ளன.

### 5.2.1. அரசவை

அரசவை என்பது அரண்மனையில் உள்ளதோர் பகுதி. அரசன் தலைமையில் அமைச்சர் முதலாயினாரும் பிற அலுவலரும் கூடி அரசியல் செயற்பாடுகளை ஆராய்ந்து முடிவெடுக்கும் இடம் ஆகும். அரசின் சுற்றத்தாரும் இங்குக் கூடியிருப்பர். இது நாண் மகிழ் இருக்கை (நாள் மகிழ் இருக்கை) (அகம்.76), பெருநாள் இருக்கை (அகம்.227), நாளோலக்கம் (அகம்.76) என்றும் பிற்காலத்தில் கூறினர். பழங்காலத்தில் “அவை” என்று சொல்லப்பட்டது. பிற்காலத்தில் “சபை” எனத் திரிந்தது. எனவே அரசின் அங்கமாகக் கருதப்படுவோர் கூடிக் கொள்கைகளை ஆராயும் இடம் அரசவை எனப்பட்டது. சிறந்த புலவர்களுக்கும் கலைஞர்களுக்கும் அரசவையில் வழங்கப்பட்ட பரிசுகள் பலவாம். நாளவை, நாளோலக்கம், நாளிருக்கை போன்றவை வருமிடங்களுடன் விளக்கியுரைக்கப்பட்டுள்ளன.

அகநானூறு, கலித்தொகை, நற்றிணை, பதிற்றுப்பத்து, புறநானூறு போன்ற பழந்தமிழ் இலக்கியங்களில் அரசர்களின் நாளவை (அரசவை) குறிப்பிடப்பட்டுள்ளது. இவற்றுள் சில பரிசில் வழங்கிய நிகழ்வுகளுடன் இணைத்துக் கூறப்பட்டுள்ளன. “நன்கலன் ஈயும் நாள்மகிழ் இருக்கை” (அகம்.76) என்ற தொடர் மன்னனின் அரசவையே நன்கலன்களை வழங்கிற்று என வினைமுதலின் செயல் இடத்தின்மேல் ஏற்றிக் கூறப்பட்டுள்ளது. “யாம இரவின் நெடுங்கடை நின்று” (அகம்.208) என்பதில் கடைக்கண் நின்று பரிசு பெற்றமை உணர்த்தப்பட்டுள்ளது. “வருநர் வரையா பெருநாள் இருக்கை” (அகம்.227) என்பதில் ‘இருக்கை’ பரிசு வழங்கிய இடத்தைக் குறித்ததாம்.

அவ்வைக்கு நெல்லிக்கனி ஈந்த வரலாறு இடம் முதலானவற்றுடன் இலக்கிய வரலாற்றில் கூறப்படுகிறது. பழந்தமிழ் இலக்கிய ஆய்வுகளிலும் அதிகமான் தம் அவையில் வைத்துப் புகழ்ந்து நெல்லிக்கனியை ஈந்தான் என்ற செய்தி கூறப்பட்டுள்ளது வெளிப்படை. புறநானூறு (91), சிறுபாணாற்றுப்படை (101) ஆகிய இலக்கியங்களில் இதனைக் காணமுடிகிறது. பரிசில் பெற்றுத் திரும்பும் பாணன் ஒருவன் எதிர்வரும்

பாணரிடம் "யாம் அவண் நின்றும் வருதும்" (சிறு.140-143) எனக் கூறுவதில் "அவண்" (அவ்விடம்) என்பது மன்னனின் அரண்மனையைக் குறித்தது.

நல்லியக்கோடன் அரசவையில் அமர்ந்து பரிசில் வழங்கியதைச் சிறுபாணாற்றுப்படை கூறுகிறது (220), நற்றிணை, மன்னன் பரிசு வழங்கிய இடத்தை "நாளவை" எனக் கூறுகிறது (167). "தேர்வீசு இருக்கை" (நற்.381) என்பதும் அது. இதுபோல "நாளவை" என்று பல இலக்கியங்களில் பரிசில் வழங்கப்பட்ட இடம் (அரண்மனை) குறிக்கப்பட்டுள்ளது (புறம்.54). அரசவை 'நாள் மகிழ்' (புறம்.123) என்றே குறிக்கப்படுகிறது. நாள்மகிழ் என்பது அரசவையைக் குறிக்கிறது (நாளோலக்கம்) (புறம்.123). இவ்வாறு பரிசில் வழங்கப்பட்ட இடங்கள் பதிவாகியிருக்கின்றன. இவை வெளிப்படையாகக் குறிப்பிடப்பட்டவை.

### 5.2.2. இல்லம்

குறுநில மன்னர்கள், இனக்குழுத் தலைவர்கள், பாணர் போன்ற இசைக்கலைஞர்கள், புலவர்கள், பொதுமக்கள் என வருவோர் பலரும் தாம் பெற்றதையோ அல்லது தம்மிடம் இருப்பதையோ பிறர்க்கு வழங்கியுள்ளனர். இச்செயலைப் 'பரிசில் வழங்கல்' முறையில் அடக்கப்பட்டிருக்கிறது. இவர்கள் தம் இல்லின்கண் இருந்து பொருள் வழங்கியுள்ளனர். பெரும்பகுதி 'இல்லம்' குறிப்பாகவே கூறப்பட்டிருக்கிறது. அரிதாக, சில இடங்களில் 'இல்லம்' எனவும் கூறப்பட்டிருக்கிறது. பழந்தமிழ் இலக்கியங்களில் இல்லம் பரவலாகக் கூறப்பட்டிருக்கிறது. 'இல்லம்' என்பது தமிழ் மரபில் மக்கள் வாழும் இடத்தைக் குறிக்கிறது. திருக்குறள் போன்ற நீதி இலக்கியங்கள் இல்லத்தை மனையறத்துடன் இணைத்துக் கூறுகின்றன. மனைவியை "இல்லாள்" என அது குறிக்கிறது.[19] இல்லம், வீடு, மனை என்பன ஒரு பொருள் குறித்தவை. "பெருஞ்சோற்று இல்லம்" (அகம்.275) என அகநானூறு ஒரு வளமனையைக் குறிக்கிறது.

சிறுகுடிகிழான் பண்ணன் தம் இல்லத்திலிருந்து பரிசு வழங்கியதைக் குறிப்பிடும் புலவர் அவன் இருந்த இடத்தைப் "பசிப்பிணி மருத்துவன் இல்லம்" (புறம்.173) என்கிறார். "பசிப்பிணி மருத்துவன்" கொடுப்போர் பகுதியில் முன்னரும் சுட்டப்பட்டது. இல்லின்கண் இருந்து பொருள் வழங்கப்பட்டதை அகநானூறு (335, 377, 389, 393); ஐங்குறுநூறு (2, 300); கலித்தொகை (2, 42, 50, 61, 104, 139, 141); குறுந்தொகை (75, 233); நற்றிணை (136); பரிபாடல் (20); பதிற்றுப்பத்து (2:18, 3:30); புறநானூறு (180, 181, 319, 326, 328, 331, 333, 334, 385); பெரும்பாணாற்றுப்படை (95-105, 147-168, 275-282, 29-310); மலைபடுகடாம் (158-169, 434-448) போன்ற இலக்கியங்களில் பரிசு வழங்கும் இடங்களாக இல்லங்களே குறிப்பிடப்பட்டுள்ளன.

### 5.2.3. ஊர், நகர், நாடு

இத்தலைப்பில் அமைக்கப்பட்ட இம்மூன்று இடங்கள் அகரவரிசையில் அமைந்தவை. இப்பகுதியில் இட அளவு கருதி நாடு, நகரம், ஊர் என விளக்கப்படுகின்றன.

'நாடு' என்னும் பகுதியில் பல கூற்றங்கள் உள்ளன. கூற்றத்தில் (கூற்றம்) பல ஊர்கள் இணைக்கப்பட்டிருக்கும். நாடும் கூற்றமும் அவற்றின் வருவாயுடன் அளிக்கப்பட்டிருப்பது முன்பகுதியில் (இயல்பு) கூறப்பட்டது. இங்கு இவை 'இடம்' என்ற அளவில் சுட்டப்படுகின்றன. இது போலவே வழங்கும் இடமாகக் 'குன்று' பயன்படுத்தப்பட்டுள்ளது. 'நகர்' என்ற இடப்பகுதியும் பயன்பட்டுள்ளது.

தமிழில் ஊர் என்னும் சொல் மிகப் பழமையானது. சங்க இலக்கியங்களில் இச்சொல் மிகுதியும் பயின்று வந்துள்ளது. சிற்றூர், பேரூர் என்னும் சொற்பதிவுகளும் காணப்படுகின்றன. புலவர் சிலரின் பெயர்களும் ஊருடன் இணைத்துக் கூறப்பட்டுள்ளன. குறுநில மன்னர்கள் சிற்றூர்களிலேயே வாழ்ந்துள்ளனர். பொருள் வழங்குவோரின் ஊர்களைக் கூறி அவ்விடத்தில் பரிசு வழங்கல் நடந்ததாகப் பழம் பாடல்களில் காணமுடிகிறது. ஊர்களும் அரண்மனை போல் சிறப்பித்துக் கூறப்படுகின்றன.

முன்பகுதியில் பொருள் கொடுப்போர், கொள்வோர், பொருள் போன்றவை கூறப்பட்டுள்ளவற்றிற்கு ஏற்றாற்போல் ஊர்ப்பெயர்கள் சுட்டப்பட்டுள்ளன. இங்கு இடம் என்ற அளவில் ஊர்கள் தொகுக்கப்பட்டுள்ளன. அவை ஊர் என்ற பொதுப் பெயராலும் குடந்தை போன்ற சிறப்புப் பெயராலும் குறிப்பிடப்பட்டுள்ளன. ஊர் எனும் சொல் வெளிப்படையாகவும் குறிப்பாகவும் சுட்டப்படுகிறது.

பறம்பு மலை சார்ந்த பகுதி பாரியாண்ட 'பறம்பு நாடு' எனப்பட்டது (புறம்.108). "தண் பறம்பு நன்னாடு" (புறம்.110) என்ற தொடரும் இதை உணர்த்தும். இங்கு வீற்றிருந்த பாரி பரிசிலர்க்குப் பொருளும் பொன்னும் வழங்கியதையும் அவன் பெருமைகளையும் கபிலர் பாடியுள்ளார். குறிப்பிட்ட எந்த இடத்தையும் குறியாது அவன் நாட்டிற்குச் சென்றால் பொருள் வழங்குவான் என்று கூறப்பட்டுள்ளது (புறம்.108). இதுபோலவே பழந்தமிழ் இலக்கியங்களில்"நகர்" என்ற சொற்பதிவும் காணப்படுகிறது.

செருச்செய் முன்பிற் குரிசில் முன்னிய
பரிசில் மறப்ப நீடலும் உரியிர்
அனைய தன்றவன் மலைமிசை நாடே (மலை.186-188)

என்பது மலைநாட்டு மக்கள் பரிசிலரை நோக்கிக் கூறியதாகும். இங்குச் சுட்டப்பெறும் "மலைநாடு" வழங்கும் (உணவு) இடமாகக் குறிக்கப்படுகிறது.

செல்வக்கடுங்கோ வாழியாதனின் நேரிமலையைப் பாடினால் அவன் முத்தும், நன்கலன்களும் தருவான் எனக் கூறப்பட்டுள்ளது. "தென்கடல் முத்தமொடு நன்கலம் பெறுகுவை . . . நேரிப் பொருநன் செல்வக் கோமான் பாடினை செலினே" (பதிற்.7:67:4-23) என்பது அது. இங்கு நேரிமலைக்குரியவன் பொருள் தருவன் எனக் குறிப்பதால் அம்மலை சார்ந்த பகுதி பொருள்தரும் இடமாயிற்று.

நகர்ப் பகுதிகளிலும் பரிசுகள் வழங்கப்பட்டுள்ளமை (பதிற்.2, 9, 10, புறம்.148) பல இடங்களில் இடம்பெற்றுள்ளது. கூற்றம் என்பது நாட்டின் ஒரு பகுதியைக் குறிப்பது. ஒரு கூற்றத்தில் பல ஊர்கள் அடங்கியுள்ளன. தமிழக

வரலாற்றில் நாட்டு எல்லைகளை அமைக்கும் பொழுது நாடு, கூற்றம் என்பன பயன்படுத்தப்பட்டுள்ளன.[20] மிழலைக் கூற்றத்திலுள்ள குறுநில மன்னன் எவ்வி பரிசு வழங்கினான் என வருதலின் மிழலைக்கூற்றம் பரிசு வழங்கும் இடமாக உள்ளது (புறம்.24).

பொருள் வழங்கல் ஊரின்கண் நடந்தமையைப் பழந்தமிழ் இலக்கியங்கள் கூறுகின்றன. குறிப்பாக, ஐங்குறுநூறு (55), குறுந்தொகை (233), சிறுபாணாற்றுப்படை (153, 173, 188), நற்றிணை (379), புறநானூறு (328, 330), பெரும்பாணாற்றுப்படை (28, 254), மலைபடுகடாம் (156) ஆகிய நூல்களில் ஊரின்கண் நிகழ்ந்த பொருள் வழங்கல்கள் குறிப்பிடப்பட்டுள்ளன. இவற்றில் ‘ஊர்’ வெளிப்படையாகச் சிலவற்றில் இடம்பெறுகின்றன. சில ஊரினைக் குறிப்பால் உணர்த்துவன. “அதலைக் குன்றம்” (குறுந்.59) என்பது பரிசுப்பொருள் வழங்கிய இடமாக அறியப்பெறுகிறது. குன்றம் (மலை) ஈண்டு இடப்பொருள்.

### 5.2.4. போர்க்களம்

போர்க்களம் போர் நிகழும் இடம். தமிழ்ப் புறத்திணை மரபில் இருநாட்டுப் படைகளும் சண்டையிட்டுக் கொள்ளும் இடம். இங்குப் புலவர், வீரர் போன்றோர்க்கு மன்னர்கள் பரிசு தந்ததாகக் கூறப்படுகிறது. அகநானூறு (209, 266, 329, 349); பதிற்றுப்பத்து (5:42, 5:47, 7:66); புறநானூறு (33, 211, 285, 302, 326, 368, 370, 371, 372) ஆகிய இலக்கியங்களில் போர்க்களத்திலுள்ளாரைப் பாராட்டி வழங்கிய பரிசுகள் பதிவாகியுள்ளன.

### 5.2.5. பாசறை

பாசறை என்பது போர்க்களத்தில் மன்னன் முதலியோர் தங்கும் இடமாகும். போர்க் காலத்தில் மன்னன் தங்குவதற்கென்றே அமைக்கப்பட்டுள்ளதோர் இடம். இலக்கியங்களில் பாட்டுடைத் தலைவனாக வரும் தலைவர்கள் பாசறையில் தங்கியிருப்பதாகக் கூறப்படுகிறது. இது “பாசறைப் புலம்பல்”[21] என்னும் துறையாக அக இலக்கியங்களில் சுட்டப்படுகின்றது. பாசறையைச் சுற்றி யானை வீரர்களும், குதிரை வீரர்களும்

மன்னனுக்குக் காவல் புரிந்து வருவர். மிகுதியும் மன்னன் இரவு நேரத்தில் பாசறையில் தங்குவதாக மரபு உள்ளது.[22] இவ்வாறு தங்கியிருக்கும் மன்னர்கள் தம்மைக் காண வருவோர்க்கு அவ்விடத்தே பரிசுப் பொருள்களை வழங்கினர். பாசறையை "மாசிதறிருக்கை"[23] எனக் கூறும் வழக்கம் உள்ளது. இது மா + சிதறு + இருக்கை எனப்பிரியும். மா - விலங்கு. பதிற்றுப்பத்து (8:76:8), புறநானூறு (22) ஆகிய இரு இலக்கியங்களிலும் பாசறையின்கண் வழங்கல் நிகழ்ந்துள்ளமை சுட்டப்படுகின்றது.

### 5.2.6. கடற்கரை

கடற்கரையில் கடற்பொருள்களைத் தேடி எடுப்போரும், மீன் பிடிப்போரும் ஆகிய பொதுமக்கள் எப்போதும் கூடியிருப்பர். அவர்கள் மகிழ்ச்சிக்காகவும், வேறு சில காரணங்களுக்காகவும் தமக்குக் கிடைத்தவற்றைப் பிறர்க்கு வழங்கியதாக இலக்கியப் பதிவுகள் காணப்படுகின்றன. அகநானூற்றில்(30, 280) இச்செய்தி இடம்பெற்றுள்ளது. புராணக் கதையைக் கூறும் இடத்தும் தொடர்புடைய கடற்செய்திகள் பொருள் வழங்கலைச் சுட்டுகின்றன. பாற்கடலில் கடைந்த அமுதத்தைத் திருமால் தேவர்களுக்கு அளித்த புராணச் செய்தி (myth) பரிபாடலில்(3:31-47) கூறப்பட்டுள்ளது.

கரும்பாலை (பெரும்.261-262), கழனி (புறம்.28, மலை.278-291, 465-470), காடு (சிறு.85, புறம்.150, 152), மலைபடுகடாம் (404-420) ஆகிய இடங்களிலும் பொருள் வழங்கல் நடந்திருப்பதை இலக்கியங்கள் கூறுகின்றன.

## 5.3. பொழுது

குறிப்பிட்டதொரு பொழுதில் பொருள் வழங்கும் சூழலில் அடங்குகிறது. பொருள் பெறுவோர் ஆகிய பாணர் முதலானோர் அரசர்களையும் அவர்க்கு நிகரானோரையும் கண்டு பாடும் நேரத்தில் தாமதியாது பரிசு மற்றும் பொருள்கள் வழங்கப்பட்டிருக்கின்றன. பரிசிலர் செல்லும் நேரம் மன்னர்க்கு ஓய்வு நேரம் ஆயினும் உறங்குதல் நேரமாயினும் பரிசிலர் வருகையறிந்த அவர்கள் பொழுது குறித்து எண்ணாமல் விரைந்து

வந்து பொருள் வழங்கி மகிழ்ந்தனர். இதனால் பொழுதும் ஒரு சூழல் கருவியாயிற்று.

பொதுவாகப் பகற்பொழுதில் மன்னரைக் காண்டலும் பொருள் பெறுதலும் அரச மரபு. எக்காலத்திலும் பொருள் வழங்குதல் என்பது மக்களுக்கு முதன்மை தரும் சிந்தனை எனக் கருதலாம். இந்த நிலையில் வைகறை, இரவு போன்ற காலங்களில் பரிசு வழங்குதல் குறிப்பிடத்தக்கதாயிற்று. இங்குப் பொழுதுகளின் வரிசையில் பாடல்கள் விளக்கப்பட்டுள்ளன.

சோழிய ஏனாதி திருக்குட்டுவனை விடியற்காலையில் காணச் சென்ற கோணாட்டு எறிச்சிலூர் மாடலன் மதுரைக் குமரனார் அம்மன்னனின் தந்தையைப் பற்றிப் புகழ்ந்து பாடினார். அதிகாலைப் பொழுது என்பதையும் எண்ணாமல் மகிழ்வோடு அம்மன்னன் வந்து அவர்க்குப் பரிசுகளை வழங்கினான் (புறம்.394). இதனால் இங்குப் பொழுது குறிப்பிடப்பட வேண்டியதாயிற்று.

கிள்ளிவளவன் பாசறையில் தங்கியிருந்த போது பொருநன் ஒருவன் துயிலெடை நிலை பாடி அவனை எழுப்புகிறான். 'துயிலெடை நிலை' என்பது துயிலில் இருக்கும் ஒருவரை அதிகாலையில் எழுப்புவது.[24] இதனைப் பள்ளியெழுச்சி என்றும் கூறுவர். காலையில் எழுந்த மன்னன் பரிசளிக்கிறான் (புறம்.397). இங்கும் அதிகாலைப் பொழுதில் மன்னன் பரிசளித்தது குறிப்பிடத்தக்கது. சேரமான் வஞ்சன் அரண்மனையில் இருந்த போது விடியற்காலைப் பொழுதில் பொருநன் பாட மன்னன் பரிசளித்தது புறநானூற்றில் காணமுடிகிறது (398).

பகலில் பரிசு வழங்கல் மரபாயினும் இரவிலும் வழங்கியதை "இரவினானே யீத்தோ னெந்தை" என்ற தொடர் குறிக்கின்றது. இது நல்லியக்கோடன் பரிசளித்த பொழுதைக் குறிக்கின்றது. வேட்டையாடுவதைக் கடமையாகக் கொண்ட தலைவன் (கோடைப் பொருநன் பண்ணி) தன்

முதன்மையான தொழிலை அடுத்துச் செய்த செயல் பரிசு வழங்கல். எனவே எந்நேரத்திலும் பரிசு வழங்கினான் என்பது கருத்து. காலை, மாலை, இரவு என்றில்லாமல் எப்பொழுதும் (என்றும்) பொருள் வழங்கினர் சோழர் என அகநானூறு கூறுகிறது (அகம்.213).

### 5.4. கொடுப்போர் கொள்வோர்உ றவு

கொடுத்தல் பெறுதல் ஆகிய நிகழ்வுகளுக்கிடையில் உள்ள உறவு இச்செயல்களுக்கு அடிப்படையாய் அமைந்துள்ளது. இச்செயல்கள் மிகுதியும் அரசு சார்ந்து இருப்பதால் மன்னர், புலவர் முதலானோர் ஒவ்வொரு வகையில் தொடர்புடையவர்கள் ஆகின்றனர். இதனை உறவு (relationship/ attachment) என்ற பொதுச் சொல்லால் குறிக்கலாம். எனினும் இந்த உறவு,

5.4.1. அரசியல் தொடர்பு

5.4.2. அறிவாற்றல்

5.4.3. பெருமை வெளிப்படுத்துதல்

5.4.4. இலக்கிய மரபு

5.4.5. ஆன்மீகம்

என்ற முறையில் வெளிப்பட்டிருக்கின்றது. மக்களின் உயிரையும் உடமைகளையும் காத்தல் மன்னரின் கடமை. ஆதலால் கடமைகளை நிறைவேற்ற நாட்டிலுள்ளோரிடம் பலவகையில் மன்னன் தொடர்பு கொள்ள வேண்டியதாயிற்று. இந்த அடிப்படையில் மன்னர்க்கும் மற்றவர்க்கும் தொடர்பு உண்டாகிறது.[25]

### 5.4.1. அரசியல் தொடர்பு : மன்னர்க்கு அளித்தல்

அரசர் - வீரர், கலைஞர், பொது மக்கள் ஆகியோர்க்கிடையே நிலவிய உறவு அரசியல் சார்ந்தது ஆகும். இவர்களுக்கு இடையில் பொருள் வழங்குதல், பெறுதல் நிகழ்வுகள் நடந்துள்ளன. திருமுடிக்காரி என்ற மன்னன் போரின்கண் தான் வென்ற பொருளைச் சேரர்களுக்கு வழங்கியது, அரசியல் உறவு காரணமாக அமைந்தது (அகம்.209). ஓர் அரசு தமக்குரிய எல்லாம் வழங்கும் என்பது உடமைச் சமூகப் பொதுமக்களின் எண்ணம். மன்னவனே மக்களைக் காப்பாற்றுவான் என்பது அக்கால அரசியல். இதனால்,

முறைசெய்து காப்பாற்றும் மன்னவன் மக்கட்கு
இறையென்று வைக்கப்படும்[26]

என்றும் கூறப்பட்டது. போரில் புண்பட்ட வீரர்களுக்கு அளித்த உணவு, பண்பு கருதிப் பெருஞ்சோறு எனப்பட்டது. பெருஞ்சோற்றுதியஞ் சேரலாதன் சோறு வழங்கியமை அரசியல் செயல்பாடாகக் கருதமுடியும் (புறம்.2).

பணிந்த பகைமன்னருக்குப் பொருள் வழங்குவதும் அரசியல் புகழுக்கே எனலாம் (புறம்.109). நாலைகிழவன் நாகன் உதவிகேட்ட அயல்தேயத்து மன்னர்களுக்குப் படை வழங்கியதும் அரசியல் உத்தியாகும் (புறம்.179). அரசன் போர்க்காலத்தில் எண்ணிப் பார்க்க வேண்டிய வினை வலி, தன் வலி, மாற்றான் வலி, துணைவலி என்ற நான்கனுள்[27] இது துணைவலி தேடும் அரசியல் ஆகும்.

### 5.4.1.2. வீரனுக்குக் கொடுத்தல்

வீரர்களைப் பாதுகாத்தல், பாராட்டுதல் போன்றவை மன்னர்க்குரிய கடமையின்பாற்பட்ட அரசியல். பழந்தமிழ் இலக்கியங்கள் “நன்னடை நல்கல் வேந்தற்குக் கடனே” (புறம்.312) என்று குறிப்பிடும். எவ்வி என்பான் தம் போர் வீரர்களுக்குக் கள்ளும், சோறும் கொடுத்த செயலும் அரசியல் புகழுக்காகச் செய்யப்பட்டது (அகம்.268). அதியமான் போரில் வெற்றி பெற்று வரும் படைத்தலைவனுக்கு நாடு வழங்கியதும் இவ்வகையைச் சாரும் (அகம்.325). மன்னன் ஒருவன் மறக்குடித் தலைவனுக்கு யானையின் முகபடாத்தைப் பரிசாகத் தந்துள்ளான் (புறம்.326).

### 5.4.1.3. கலைஞர்களுக்குக் கொடுத்தல்

நிலவுடைமை சமூகத்தில் கலைஞர்கள் பல பெயர்களில் இடம்பெற்றுள்ளனர். அடிப்படையில் இவர்கள் உபரித் தொழிலாளர்கள். (Surplus Workers) இவர்களுடைய உழைப்பு முக்கிய உழைப்பிற்கு உதவியாக இருந்தது. இவர்களை உபரி உற்பத்தி சக்திகள் என வழங்குவர். மக்களுக்கு மனமகிழ்ச்சிக்காகத் தேவைப்படும் கலைகளையும், உற்பத்தித் தொழிலுக்குத் தேவைப்படும்ஆடல் பாடல்களையும் நிகழ்த்தியவர்கள். இவர்கள் சங்க

காலத்தில் கூத்தர், பாடினி, பாடுநர், பாணன், விறலியர் எனப்பட்டனர். ஆற்றுப்படுத்துதலிலும் மன்னர்தம் கொடைத் திறனை இவர்கள் தெரிவிப்பர்.[28] இவர்கள் நிகழ்த்திய கலைகள் அரசரோடு, தொடர்புடையனவாக இருந்ததால் கலைகள் யாவும் அக்கால அரசியலை வளர்ப்பதற்குப் பயன்பட்டன.

அரசியலை வளர்ப்பதால் அரசர்களாலும் இவை போற்றப்பட்டன. கூத்தர்கள் ஆடி மகிழ்ந்த சேரிக்கு அரசனே வந்துள்ளான் (அகம்.76). இவர்க்கு அருங்கலம் நல்கியதாகப் பதிற்றுப்பத்துக் கூறுகிறது (பதிற்.பதி.2, 3:21, 3:23). இவையனைத்திலும் மன்னர்கள் கூத்தர்கட்குப் பரிசுகள் தந்தமையை உரையாசிரியர் குறிப்பிடுகின்றார் (பதிற்.பதி.2). "ஆடுநர்" என்பது கூத்தரைக் குறிப்பது. ஆடுநர்க்குப் பரிசளித்தல் நிகழ்வது மன்னனுக்குப் பெருமை (புறம்.222). மலைபடுகடாம், நன்னன் கூத்தர்க்கு வழங்கியதைக் குறிப்பிடுகிறது. இவை மன்னர்க்குரிய அரசியல் செயற்பாடுகள்.

'பாடினி' இவர் பெண்பாலர். பாணன் துணைவி என்பது வரலாறு, மிகுதியும் இவர் இணைந்தே பேசப்படுகின்றனர். பாடினியும் அரசனிடம் பொருள் பெறலாம். இஃதும் அரசியல்பாற்பட்டது. இது மன்னனைப் பாடிப்பெற்றது. அரசனுடைய வீரத்தைப் பாடினி பாடுகிறாள் (புறம்.11). அக்கால மரபில் இரப்போர் என்னும் பெயர் தம்முள் பாடினியை அடக்குகின்றனர் (புறம்.364). இவர்கள் மன்னனைப் பாடிப்பொருள் இரந்து பெற்றுள்ளனர். இது தவிரப் பாடுநர் (புறம்.135, 221, 240, 361) பாடிவரும் பரிசிலர் (அகம்.65; புறம்.14, 160) என்ற தொடர்களில் குறிக்கப்பெறுகின்றனர். இவர்களும் அரசர்களிடம் பரிசில் பெற்றுள்ளனர். இதுவும் அரசியல் சார்புடையதாகவே உள்ளது.

பாணர்களுக்குப் பரிசு வழங்கியதும் அரசியல் சார்புடையதாகக் கொள்வது தகும். பாணர்கள் அரசனின் வீரம், கொடைச்சிறப்புப் போன்ற கருத்துக்களைப் பதிவு செய்வதால் இவை அரசியல் தன்மைகளேயாகும். பாணர்கள் மிகுதியும் குறுநில மன்னர்களையும், மன்னர் சிலரையும்

பாடியுள்ளனர். இவர்களுடைய கொடைத்திறன், மனிதநேயம், செயலாற்றல், வீரம், போர்த்திறன் போன்றவை புகழ்ந்து சொல்லப்பட்டிருப்பதால் இப்புகழ்ச்சியுரை அரசனது அரசியல் புகழை நிலை நிறுத்தச்செய்தன. இவ்வாறு அரசியல் நோக்கம் கொண்டு பாடிய பாணர்களின் பாடல்கள் சங்க இலக்கியங்களில் பரவலாகக் காணப்படுகின்றன.

| இலக்கியம் | பாடல் எண் / அடி எண் |
|---|---|
| அகநானூறு | 208, 249, 331, 349 |
| குறுந்தொகை | 19, 59 |
| சிறுபாணாற்றுப்படை | 129-143, 143-163, 235-245, 246-261 |
| பதிற்றுப்பத்து | பதி.2, 2:18, 3:21, 3:23, 4:37, 4:38, 4:40, 5:43, 5:48, 7:67, 9:86 |
| புறநானூறு | 11, 12, 33, 34, 68, 69, 70, 115, 127, 135, 138, 139, 141, 149, 172, 173, 181, 212, 235, 302, 361, 364. |
| பெரும்பாணாற்றுப்படை | 23-28 |
| மதுரைக்காஞ்சி | 210-237, 751 |
| மலைபடுகடாம் | 67-94 |

பொருநர் வேடமிட்டு ஆடுபவர். அவர்களும் தலைமைக்குத் (அரசுக்கு) தொடர்பான கலைநிகழ்ச்சிகளை நிகழ்த்துவர். அரசன் அவர்களை நேரில் காண்பது குறிப்பிடத்தக்கது. பொருநர்கள் பொருள் பெற்றுச் செல்லும் இடம் சிலவாகக் காணப்படுகிறது. கீழேயுள்ள அட்டவணையில் பொருநர்கள் இடம்பெறும் பாடல்கள் கூறப்பட்டுள்ளன.

| இலக்கியம் | பாடல் எண் / அடி எண் |
|---|---|
| பதிற்றுப்பத்து | பதிகம்.2 |
| புறநானூறு | 138, 376, 379, 381, 382, 384, 386, 388, 390, 392 |
| பொருநராற்றுப்படை | 74-89, 103-119, 120-127, 151-177 |
| மதுரைக்காஞ்சி | 98-105 |

*விறலியர் என்னும் பெண்கள் பாணர் பிரிவைச் சார்ந்தவர்கள். விறலி என்போர் விறல்பட ஆடுபவர். இவரைப்பாண் சாதியினர் என்று தமிழ் லெக்சிகன் கூறுகிறது.[29] நச்சினார்க்கினியர் விறலியைக் கூத்தர் பிரிவில் அடக்குவர். 'கூத்தராயினார் எண்வகைச் சுவையும் மனத்தின்கண்பட்ட குறிப்புகளும் புறத்துப் போந்து புலப்பட ஆடுவர். அது விறலாகலின் அவ்விறல்பட ஆடுவாளை விறலி என்றார் என்ப. இவர்களுக்குச் சாதி வரையறை இல்லை' என்பதும் இவர் கருத்து.[30] விறல் என்பது வீரம் போன்ற பல கருத்துக்களை உடையதாதலின் அரசனின் வெற்றித் தொடர்பான நிகழ்வுகளைக் காட்டி ஆடுவார் எனவும் கூறலாம். பொதுவாகக் கூத்தருடைய பெண்பால் விறலியர் எனப்பட்டனர். இவர்கள் இவ்வகையில் அரசுக்குத் தொடர்புடையவர் ஆயினர். விறலியர் இடம்பெறும் பாடல்கள் கீழேயுள்ள அட்டவணையில் கொடுக்கப்பட்டுள்ளன.*

| **இலக்கியம்** | **பாடல் எண் / அடி எண்** |
|---|---|
| சிறுபாணாற்றுப்படை | 143-163 |
| பதிற்றுப்பத்து | 3:21, 4:40, 5:43, 5:48, 5:49, 6:54 |
| புறநானூறு | 32, 103, 105, 111, 133, 135, 138, 139 |
| மதுரைக்காஞ்சி | 210-237 |

*அகவன் மகளிர் குறி சொல்லுவோர் ஆவர். அவர்களையும் கலைஞர்கள் வரிசையில் சேர்க்கலாம். இவர்கள் யானைகளைப் பரிசு பெற்ற குறிப்புத் தமிழ் இலக்கியத்தில் உண்டு (குறுந்.298).*

### 5.4.1.4. இரவலருக்குக் கொடுத்தல்

*இரவலர் பொருள் பெறுவதற்குப் பலரிடத்தும் சென்று வரும் பண்பினர். இவர்கள் குழுவாகவும், தனியாகவும் சென்றுள்ளனர். இவர்கள் பரிசு பெறும் செயற்பதிவுகள் சங்க இலக்கியத்தில் மிகுதியான இடங்களில் வருகின்றன. இவர்களுக்குப் பரிசு வழங்கிய செயல்கள் புலவர்களால் பாடப்பட்டுள்ளன.*

இப்பாடல்களில் மன்னர்களின் கொடைச் சிறப்பு, முன்னோர் சிறப்பு, ஆட்சிச்சிறப்பு போன்றவை எடுத்துக்கூறப்பட்டுள்ளன. இரவலர்க்குப் பொருள் வழங்குதல் சமூக மரபாகவும் இருந்து வந்துள்ளது. குறிப்பாக இரவலர்களைப் போற்றும் செயல்கள் அரசின் ஓர் அங்கம் எனலாம். அந்த அளவிற்கு மன்னர்கள் இதில் கவனம் செலுத்தியுள்ளனர். இவ்வகையில் அரசின்மீது இரவலர்க்குப் பற்றும், மதிப்பும் இருந்து வந்துள்ளன. இவை கீழேயுள்ள அட்டவணையில் கொடுக்கப்பட்டுள்ளன.

**இரவலர்**

| கொடுப்போர் | கொடுத்தல் நிலை | உறவு |
|---|---|---|
| அதிகன் | விரும்பிய பொருள் | அரசியல் - மன்னன் புகழ்பாடல் (அகம்.162) |
| சோழர் | பேரணிகலன்கள் | அரசியல் - மன்னன் வெற்றி (அகம்.213) |
| தழும்பன் | - | அரசியல் - மன்னன் புகழ்பாடுதல் (அகம்.227) |
| நள்ளி | தேரும், களிறும் | அரசியல் - மன்னன் புகழ்பாடுதல் (அகம்.238) |
| பாரி | களிறு, அணிகலன்கள் | மாண்பு - இரவலர் திறம் போற்றுதல் (அகம்.303) |
| பாண்டியன் | தேர் | அரசியல் - மன்னன் புகழ்பாடுதல் (ஐங்.55) |
| அதியமான் | - | இயல்பு - சமமாகப் பாவித்து இரங்குதல் (குறுந்.91) |
| மலையமான் திருமுடிக்காரி | - | அரசியல் - மன்னன் புகழ்பாடுதல் (சிறு.92-93) |
| மலையமான் திருமுடிக்காரி | தேர் | அரசியல் - புகழ்பாடுதல் (நற்.100) |
| ஆய்அண்டிரன் | நெடியத்தேர் | இயல்பு - மன்னன் கடமை (நற்.167) |
| பொறையன் | - | இயல்பு - மன்னன் அறம் (நற்.185) |

| கொடுப்போர் | கொடுத்தல் நிலை | உறவு |
|---|---|---|
| ஆய்அண்டிரன் | யானை | இயல்பு - மன்னன் அறம் (இரவலர்க்கு காத்திருத்தல்) (நற்.237) |
| சோழ மன்னன் | தேர் | அரசியல் - மன்னன் புகழ்பாடுதல் (நற்.379) |
| அஞ்சி | தேர்கள் | இயல்பு - மன்னன் இரங்குதல் (நற்.381) |
| சேரன் செங்குட்டுவன் | போரில் வென்ற பொருட்கள், தான் அணிந்திருந்த ஆபரணங்கள் | இயல்பு - மன்னன் அறம் (பதிற்.5:44) |
| ஆடுகோட்பாட்டுச் சேரலாதன் | விரும்பிய பொருள் | இயல்பு - மன்னன் கடமை (பதிற்.6:52) |
| செங்குட்டுவன் | ஆபரணங்கள் | இயல்பு - மன்னன் கடமை (பதிற்.6:54) |
| ஆடுகோட்பாட்டுச் சேரலாதன் | உணவு | இயல்பு - மன்னன் அறச்செயல் (பதிற்.6:55) |
| செல்வக்கடுங்கோவாழியாதன் | - | இயல்பு - இரவலர்க்கு இரங்குதல் (பதிற்.7:61) |
| செல்வக்கடுங்கோவாழியாதன் | ஆண் யானை, நெல் | இயல்பு - மன்னனது பெருமை (பதிற்.7:66) |
| தகடூர் எறிந்த பெருஞ்சேரல் இரும்பொறை | குதிரை | இயல்பு - மன்னன் பொதுப்பண்பு (பதிற்.8:76) |
| ” | - | இயல்பு - இரவலர்க்கு இரங்குதல் (பதிற்.பதி.9) |
| கருங்கையொள்வாள் பெரும்பெயர்வழுதி | - | இயல்பு - குறிப்பு அறிந்து கொடுத்தல் (புறம்.3) |
| எவ்வி | - | மாண்பு - இரவலர் போற்றுதல் (புறம்.24) |
| தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்சொழியன் | - | மாண்பு - இரவலர்க்கு இரங்குதல் (புறம்.24) |
| சோழன் நலங்கிள்ளி | உணவு | இயல்பு - இரவர் வருத்தம் அறிந்து தருதல் (புறம்.27) |

| கொடுப்போர் | கொடுத்தல் நிலை | உறவு |
|---|---|---|
| சேரன்குட்டுவன்கோதை | - | அரசியல் - புகழ்பாடல் (புறம்.54) |
| இலவந்திகைப் பள்ளித்துஞ்சிய நன்மாறன் | அணிகலன்கள் | அரசியல் - மன்னன் அருங்கலம் நல்குதல் (புறம்.56) |
| பாரிவேள் | - | இயல்பு - யாவர்க்கும் தருதல் (புறம்.106) |
| பாரிவேள் | தேர் | இயல்பு யாவர்க்கும் தருதல் (புறம்.114) |
| பாரிவேள் | - | இயல்பு - இரவலர்க்கு தரும்பண்பு (புறம்.119) |
| மலையமான் திருமுடிக்காரி | - | அரசியல் - மன்னன் புகழ்பாடுதல் (புறம்.122) |
| மலையமான் திருமுடிக்காரி | பொன் அணிகலன் அணிந்த நெடுந்தேர் | அரசியல் - இரவலர் போற்றுதல் (புறம்.123) |
| மலையமான் திருமுடிக்காரி | - | இயல்பு - இரவலர்க்கு இரங்கல் (புறம்.124) |
| ஆய்அண்டிரன் | யானை | அரசியல் - மன்னன் புகழ்பாடுதல் (புறம்.129) |
| வையாவிக் கோப்பெரும்பேகன் | - | இயல்பு -யாவர்க்கும் தருதல் (புறம்.142) |
| வல்வில்ஓரி | யானை, மணிமிடைந்த குவளைப்பூ, பொன்னரி மாலை, அணிகலன் | அரசியல் - மன்னன் புகழ்பாடல் (புறம்.153) |
| குமணன் | - | அரசியல் - புகழ்பாடுதல் (புறம்.153) |
| மல்லிகிழான் காரியாதி | இறைச்சி, சோறு | இயல்பு - எல்லோருக்கும் தருதல் (புறம்.177) |
| இளஞ்சேட்சென்னி | - | இயல்பு - இரவலரை காப்பவன் (புறம்.203) |
| வல்வில்ஓரி | - | இயல்பு - இரவலர்க்கு இரங்குதல் (புறம்.209) |
| யானைக்கட் சேய்மாந்தரஞ்சேரல் இரும்பொறை | - | இயல்பு - கொடைத்திறன் (புறம்.229) |

| கொடுப்போர் | கொடுத்தல் நிலை | உறவு |
|---|---|---|
| ஆய்அண்டிரன் | தேர் | அரசியல் - புகழ்பாடல் (புறம்.241) |
| அதியமான் நெடுமான் அஞ்சி | உணவு | இயல்பு - இரந்தோர்க்குக் கொடுத்தல் (புறம்.315) |
| குட்டுவன் | மலையில் கிடைக்கும் பொருட்கள், கடலின் கிடைக்கும் பொருட்கள் | அரசியல் - புகழ்ந்து கூறல் (புறம்.343) |
| அந்துவன் கீரன் | களிறு, பொற்கலன் அணிந்த குதிரை | அரசியல் - புகழ்பாடுதல் (புறம்.359) |
| அரசன் (பெருந்தகை) | அணிகலன், குதிரை, களிறு பொன்னரி மாலை, பொற்றாமரைப் பூ | அரசியல் - புகழ்பாடுதல் (புறம்.361) |
| அரசன் | மருதநிலத்து ஊர்கள், சோறு, அணிகலன் | இயல்பு - இரங்குதல் (புறம்.362) |
| மூவேந்தர் | பொற்பூ, பொற்காசு, இரவலர்க்கு வேண்டியதைக் கொடுத்தல் | இயல்பு - வேண்டியோர்க்கு கொடுத்தல் (புறம்.367) |
| நலங்கிள்ளி | ஆடை, கள், உணவு | இயல்பு - இரங்குதல் (புறம்.400) |

### 5.4.1.5. பரிசிலர்க்குக் கொடுத்தல்

*பரிசிலர்கள் சற்றொப்பப் புலவர்களுக்கு நிகரானவர்கள். இவர்கள் அரசனிடத்து அரசியல் பற்றிப் பேசுவதற்கு வாய்ப்புடையவர்கள், பரிசிலருக்குப் பொருள் வழங்குவதால் மன்னனுக்குப் புகழ் உண்டாவதாகக் கருதப்படுகிறது. இவர்கள் சிறப்புக்கூறு உள்ளவர்களாகவும் இருந்துள்ளனர். இந்த உறவுகளை வெளிப்படுத்தும் வண்ணம் அட்டவணை வகைப்படுத்தப்பட்டு உள்ளது.*

| கொடுப்போர் | கொடுத்தல் நிலை | உறவு |
|---|---|---|
| உதியன்சேரலாதன் | - | அரசியல் - வெற்றியைப்பாடுதல் (அகம்.65) |
| ஆய்அண்டிரன் | உணவு | இயல்பு - மன்னன் அறம் (தீர்த்தல்) (அகம்.152) |

| கொடுப்போர் | கொடுத்தல் நிலை | உறவு |
|---|---|---|
| நல்லியக்கோடன் | - | அரசியல் - பரிசிலர் புலமை அறிதல் (சிறு.216-218) |
| கிள்ளிவளவன் | பொன் | அரசியல் - இவன் நாடு போற்றல் (புறம்.38) |
| பாரிவேள் | தன்னையே கொடுப்பவன் | இயல்பு - கொடுத்தல் பண்பு (புறம்.108) |
| பாரிவேள் | முந்நூறு ஊர் | மாண்பு - கொடை உள்ளம் (புறம்.110) |
| ஆய்அண்டிரன் | - | அரசியல் - வீரம் பேசுதல் (புறம்.128) |
| ஆய்அண்டிரன் | யானைகள் | அரசியல் - மன்னன் புகழ்பாடுதல் (புறம்.130) |
| ஆய்அண்டிரன் | களிறு, உணவு, அணிகலன் | அரசியல் - மன்னன் புகழ்பாடுதல் (புறம்.131) |
| ஆய்அண்டிரன் | உணவு | இயல்பு - பரிசில் வழங்கல் (புறம்.136) |
| கண்டீரக்கோப்பெருநள்ளி | அணிகலன், களிறு | அரசியல் - மன்னன் புகழ்பாடுதல் (புறம்.148) |
| குமணன் | வாள் கொடுத்தல் | அரசியல் - உயர்பண்பு (பாடிவரும் பரிசிலன்) (புறம்.165) |
| பிட்டங்கொற்றன் | - | இயல்பு - பரிசிலருக்குத் தினந்தோறும் அளித்தல் (புறம்.168) |
| கடியநெடுவேட்டுவன் | தேர், கோடு உயர்ந்த தலைமைமிக்க யானை | அரசியல் - புகழ்பாடுதல் (புறம்.205) |
| அஃகுதை | யானை | அரசியல் - புகழ்பாடுதல் (புறம்.233) |
| முசுண்டை | வென்று தரப்பட்டப் பொருட்கள் | இயல்பு - எந்நாளும் தருபவன் (புறம்.320) |
| செல்வக்கடுங்கோ வாழியாதன் | களிறு, குதிரை, பசுக்கூட்டங்கள், பணிபுரியும் களமர், நெற்போர் களமர் | அரசியல் - மன்னன் புகழ்பாடுதல் (புறம்.387) |

| கொடுப்போர் | கொடுத்தல் நிலை | உறவு |
|---|---|---|
| கிள்ளிவளவன் | இறைச்சி, கள், ஆடை பெறற்கரிய கலன்கள் | இயல்பு - பெருமை (புறம்.397) |
| சேரமான்வஞ்சன் | அரிய பொருள்கள், ஆடை, கள், இறைச்சி சோறு, மார்பில் அணிந்த மாலை | இயல்பு - முறையறிந்து வழங்குதல் (புறம்.398) |

### 5.4.2. அறிவாற்றல்

புலவர்கள் அறிவாற்றல் உடையவர்களாக வாழ்ந்தனர். “புலமை” என்பது புலன்கள் வழித்தோன்றும் சிறப்புக் குணமாகும். புலவர்கள் யாப்பறிவும் சமூகம் மற்றும் வரலாற்றறிவும் உடையவர்கள். அவர்கள் நுணுக்கமான ஆலோசனைகள் கூறுவதும் அறிவுரை பகர்வதும், நீதி மற்றும் ஒழுக்கங்களை எடுத்துரைப்பதுமான பணிகளைச் செய்தனர். இச்செயல்கள் யாவும் அறிவுடன் உறவுடையவாய்த் தோன்றுவன. உலகப் பொதுமைப் பண்புகளைக் கூறுதல் ஆகியவையும் இதில் அடங்கும்.

பாரியைப் புகழும் கபிலர் பாரியைப் பழிப்பது போலப் புகழ்கிறார். அஃது அவருடைய அறிவு நுட்பத்தைக் காட்டுகிறது.

பாரி பாரி என்றுபல ஏத்தி
ஒருவற் புகழ்வர் செந்நாப் புலவர்
பாரி ஒருவனும் அல்லன்
மாரியும் உண்டு ஈண்டு உலகுபுரப் பதுவே (புறம்.107)

என்ற பாடல் இதனை உணர்த்தும். இவ்வாறு குறிப்பிடத்தக்க நுட்பங்களையும் அறிவுத் திறன்களையும் கண்ட மன்னர்கள் புலவர்க்குப் பரிசுகளை வழங்கியுள்ளனர்.

பல்யானைச் செல்கெழு குட்டுவன் அறிவுடைய சான்றோர்க்குப் பரிசுகளை வழங்கினான் என்று பதிற்றுப்பத்தில் ஒரு குறிப்பு வருகிறது.

மதியுறழ் மரபின் முதியரைத் தழீஇக்
கண்ணகன் வைப்பின் மண்வகுத் தீத்துக் (பதிற்.பதி.3:4-5)

என்ற தொடர்வழி இதனை அறியலாம். இந்நூலில் மேலும் செல்வகடுங்கோ வாழியாதனைப் பற்றிய இத்தகைய பண்பு நிலை குறிக்கப்படுகிறது. அவன்

நூறாயிரம் பொன், நாடு, நெல் விளையும் ஊர் ஆகியவற்றைக் கொடுத்தான் என்பது வரலாறு (பதிற்.பதி.7).

நூறாயிரம் பொன்னும், நாடும் ஊரும் கொடுத்திருப்பது அப்புலவனின் திறத்திற்குத் தரப்பட்ட பரிசு எனலாம்.

நனவிற் பாடிய நல்லிசைக்
கபிலன் பெற்ற வூரினும் பலவே (பதிற்.9:85)

எனக் கபிலர் இப்பாடலில் புகழப்பட்டுள்ளார். இதனால் புகழும், பெருமையும் உடையவர் என்பது தெரிகிறது. இத்தகைய புகழுடையவர் ஆதலின் இவருக்கு ஊர்கள் பல வழங்கப்பட்டிருக்கின்றன.

கோவூர்கிழாரின் செயல் திறம் ஒன்று அவருடைய திறமையால் ஒற்றன் எனக் கருதப்பட்ட புலவரை உண்மையைக் கூறிக் காப்பாற்றி விடுகிறார். கோவூர்கிழார் மன்னனிடம் கூறிய அறிவுரை இவரது அறிவாற்றலைக் காட்டுகிறது. (புறம்.47). அறிவு சார்ந்த இச்செயலால் கோவூர்கிழார்க்குப் பரிசு கிடைத்துள்ளது. கபிலர் தம் பாடலில் ஒன்றில் புலவர்க்குரிய தகுதியறிந்து பரிசில் கொடுக்கும்படி கூறியுள்ளார் (புறம்.121).

மாறோகத்து நப்பசலையார் மலையமான் திருமுடிக்காரியைச் சந்தித்துப் பாடுகிறார். கபிலர் போன்ற அறிவிற்சிறந்த புலவர்களும் தம்மைப் போன்ற எளிய புலவர்களும் அவனைப் பாடிச் செல்வதாகக் குறிப்பிடுகிறார். இந்தக் கூற்றுப் பரிசு பெறுகின்ற புலவர்களின் தகுதியும் திறமையும் அறிந்து பரிசு தருகிறவன் இம்மன்னன் என்பதை உணர்த்துகிறது (புறம்.126).

ஆய்அண்டிரன் ஒளவையாருக்கு யானையைப் பரிசளித்துள்ளான் (புறம்.140). ஒளவையார் போன்ற புலமையாற்றல் மிகுந்தோர்க்குக் கொடுக்கப்படும் பரிசில் அவருடைய சான்றாண்மைக்காகக் கொடுக்கப்பட்டது எனக் கருதலாம்.

புலவர்களிடம் சால்பும், சான்றாண்மையும் இருந்ததைப் பரணரின் வாழ்க்கை நிகழ்ச்சி ஒன்று காட்டுகிறது. நெடுநாட்கள் பிரிந்திருந்திருந்த

*பேகனையும் அவன் மனைவியையும் இணைத்து வைத்த நிகழ்ச்சி இதற்குச் சான்று (புறம்.145 - 147).*

### 5.4.3. பெருமை வெளிப்படுத்துதல்

*நிலவுடைமைச் சமூகத்தில் (சங்க காலம்) வீரர் என்போர் தகுதிப்பாடு உடையவராய்க் கருதப்பட்டனர். போர்த்தொழில் புரிவது ஒவ்வொரு வீரர்க்கும் சிறப்பும், பெருமையும் உடையதாகக் கருதப்பட்டது. மன்னர்க்கு மிக இன்றியமையாததாக உள்ள 'படை வலிமை' வீரர்களால் ஏற்படுவதாகும். திருக்குறள் இதனைப் "படைச்செருக்கு"[31] எனக்கூறுகிறது. இவ்வதிகாரம் முழுவதும் படையின் வலிமையே சொல்லப்படுகிறது. "படையது மறமிகுதி"[32] என்று பரிமேலழகர் குறிப்பிடுகிறார். வீரர்களுக்குச் "சான்றோர்"[33] போன்ற பல பெயர்கள் பழங்காலத்தில் இருந்தன. தமக்கிருக்கும் படைச்செருக்காலும், தன்மதிப்பாலும், சமூகத்தில் தம்மை நிலைநிறுத்திக் கொள்ளும் உடைமைச் சமூகப் பண்பிற்கு இவர்களும் உரியவர்களாகக் காணப்பட்டனர்.*

*அந்த வகையில் மன்னர்களைப் போலவே இவர்கள் தகுதிப்பாடு உடையோர்க்கும் பிறர்க்கும் பலவற்றை வழங்கியதாகப் பாடல்கள் கூறுகின்றன. ஆய்விற்குரிய சங்க நூல்களில் இவர்கள் கொடை குறித்த செய்திகள் இங்கு விவரிக்கப்படுகின்றன.*

*வீரர்கள் கொடையளிக்கும் பண்பில் தனிச் சிறப்புடையவர்களாக இருந்தனர். தங்கள் பெருமையும், கொடைப்பண்பும், இரக்க உணர்வும், வெற்றிக் களிப்பும் தோன்றுமாறு இவர்களது "கொடையளி" நிகழ்ந்துள்ளது. பின்வரும் அட்டவணை வீரர்களின் கொடைத் தொழிலில் காணப்பெறும் பண்புக்கூறுகள் (அடிப்படைகள்) வெளிப்படுத்தப்பட்டுள்ளன.*

| கொடுப்போர் | கொள்வோர் | கொடுத்தல்நிலை | உறவு |
|---|---|---|---|
| பண்ணி | இரவலர் | வாரி வழங்கல் | இரக்க உணர்வு (அகம்.13) |
| பிட்டன் | இரவலர் | அணிகலன் | பொருள் வளம் (அகம்.143) |

| கொடுப்போர் | கொள்வோர் | கொடுத்தல்நிலை | உறவு |
|---|---|---|---|
| படைவீரர் | வறுமை உடையோர் | - | இரக்க உணர்வு (புறம்.29) |
| நாலைகிழவன் நாகன் | வடநெடுந்தத்தனார் | உணவு, படை ஆலோசனை | அரசர்க்கு நிகரான பண்பு (புறம்.179) |
| ஈந்தூர்கிழான் தோயன்மாறன் | இரவலர் | - | இரக்க உணர்வு (புறம்.182) |
| படைவீரன் | பரிசிலர் | வேண்டியதைக் கொடுத்தல் | பொருள் வளம் (புறம்.323) |
| படைவீரன் | பரிசிலர் | யானை முகத்தில் அணியும் பொன்னால் செய்யப்பட்ட பட்டங்கள் | பொருள் வளம் (புறம்.326) |
| படைவீரன் | பரிசிலர் | யானை முகத்தில் அணியும் பொற்பட்டங்கள் | பொருள் வளம் (புறம்.334) |

### 5.4.4. இலக்கிய மரபு

*சமுதாயத்தில் காணப்படும் சில பழக்கவழக்கங்கள் இலக்கியங்களில் ஏற்றிச் சொல்லப்படுகின்றன. இவற்றைக் கூறுமிடத்துச் சில கலைச்சொற்கள் பயன்படுத்தப்படுகின்றன. குறிப்பாக மகடூஉ முன்னிலை,[34] மகட்கொடை,[35] மடலேறல்[36] போன்றவற்றைக் கூறலாம். இவற்றுள் இறுதி இரண்டும் சங்க இலக்கியங்களில் இடம்பெற்றுள்ளன.*

*மகட்கொடை ஐங்குறுநூறு, கலித்தொகை ஆகிய இரண்டிலும் தந்தை தன்மகளைத் திருமணம் செய்து கொடுத்த நிகழ்ச்சிகள் கூறப்பட்டுள்ளன (ஐங்.6, 300; கலி.61, 104, 141). இச்செய்திகளை முறையே, "தண்துறை யூரன் வரைக, எந்தையும் கொடுக்க என வேட்டமே" (ஐங்.6), "எதிர்ந்தனர் கொடையே" (ஐங்.300), "ஆர்வுற்று, எமர், கொடை நேர்ந்தார்" (கலி.104), "கொடுத்தார் எமர்" (கலி.141) என்ற தொடர்களால் 'மகட்கொடை' செய்தியை அறியலாம்.*

*வழங்குதல் என்ற சொல் பொருளுக்கு மட்டுமன்றிக் கருணை, அன்பு, நோய் போன்றவற்றையும் வழங்கும் போதும் பயன்பட்டுள்ளது.குறிப்பாக மடலேறுதல் என்பது மடன்மா என்ற கருவியுடன் (பனையால் ஆன குதிரை)*

*தொடர்புடையது. தலைவன் தலைமகளை வேண்டி மடன்மா ஊர்ந்து செல்வது வழக்கம்.*[37] *இது தலைவனுடைய செயல். இதனைத் தலைவியே வழங்குவதாகக் கொடைப் பொருளில் கூறப்பட்டுள்ளது. "படரும், பனை ஈன்ற மாவும் - சுடர் இழை, நல்கியாள், நல்கியவை" (கலி.138:12,13), "உறீஇயாள் ஈத்த இம்மா..." (கலி.139:19), "எழினுதல் ஈத்த இம்மா ..." (கலி.139:25), "நேரிழை ஈத்த இம்மா" (கலி.139:31), "நன்னுதல் ஈத்த இம்மா" (கலி.140:16) என்னும் தொடர்களும் இப்பொருளில் அமைந்தவை.*

### 5.4.5. ஆன்மிகம்

*புராணக் கதைகளில் தெய்வங்கள் கொடை வழங்குவதாகக் கூறப்படும் செய்திகளும், மக்கள் தெய்வங்களை நோக்கி வேண்டுதல் செய்து தமக்குக் கருணை வழங்கும்படி கூறலும், அரசன் இறைவனுக்கு நன்றி செலுத்தும் முறையில் கோயிலுக்குத் 'தேவதானம்' வழங்குதலும் ஆகிய செயல்கள் ஆன்மிகக் கொடைகள் எனக்கூறத் தக்கன.*

*புராணங்களில் வரும் கொடைநிகழ்ச்சிகள் சமுதாயத்தில் எடுத்துக்காட்டுகளாக முன்வைக்கப்படுகின்றன. குறிப்பாக மகாபாரதம், இராமாயணம், காப்பியங்கள் ஆகியவற்றில் வரும் செய்திகள் இவ்வகையைச் சார்ந்திருக்கின்றன. கொடை வழங்குதலில் சிறந்தவனாகக் கர்ணன் கருதப்படுகிறான். சிவன் போன்ற தெய்வங்கள் மக்களுக்கு அருள் வழங்கியதாக எடுத்துக்கூறப்படுகின்றன.*

*பழந்தமிழ் இலக்கியங்களில் புராணச் செய்திகளை உள்ளடக்கிக் கொடைப் பண்பை விளக்கும் கருத்துக்கள் சில பதிவாகியிருக்கின்றன. பரிபாடலில் திருமால் தேவர்களுக்கு அமிழ்தம் வழங்கியிருப்பதாகக் கூறுகிறது.*

நகை அச்சாக நல் அமிர்து கலந்த
நடுவுநிலை திறம்பிய நயம் இல் ஒருகை
இரு கை மாஅல் (பரி.3:31-47)

*என்ற தொடர்களால் இக்கதை நிகழ்வை அறியமுடிகிறது.*

மைந்நெறி வான்கொடை யான் - உயர்

மானமும் வீரமும் மதியுமு ளோன்[38]

*என்று பாரதியார் கர்ணனைப் பாடியிருப்பதும் இங்கு நோக்கத்தக்கது.*

*முருகனை வணங்கிய தேவர்களும் முருகனுடைய பன்னிரு கைகளுக்கும் வழங்கிய செய்தியும் காணப்படுகிறது. இதனை,*

அல்லல் இல் அனலன் தன் மெய்யின் பிரித்து,
செல்வ வாரணம் கொடுத்தோன்; வானத்து
வளங்கெழு செல்வன்தன் மெய்யின் பிரித்துத்
திகழ்பொறிப் பீலி யணிமயில் கொடுத்தோன்;
திருந்துகோல் ஞமன்தன் மெய்யின் பிரிவித்து
இருங்கண் வெள்யாட்டு எழில்மறி கொடுத்தோன்;
ஆ அங்கு, அவரும் பிறரும் அமர்ந்துபடை அளித்த
மறியும் மஞ்ஞையும் வாரணச் சேவலும்
பொறிவரிச் சாபமும் மானும் வாளும்
செறியிலை ஈட்டியும் குடாரியும் கணிச்சியும்
தெறுகதிர்க் கனலியும் மாலையும் மணியும்
. . . . . . . . . . . . . . . . . . . . . . இகந்தோய் (பரி.5:55-68)

*என்ற பரிபாடல் தொடர்களால் அறியலாம்.*

*தெய்வத்தை வணங்குதலும், ஒரு குறிப்பிட்ட பயன்பாடு கருதித் தெய்வத்திடம் வேண்டிக் கொள்ளுதலும், தமிழில் காணப்படும் மரபாகும். பழந்தமிழ் இலக்கியத்திலும் தெய்வம் தமக்கொன்று வழங்க வேண்டும் என்ற வேண்டுதல்கள் குறிப்பிடப்பட்டுள்ளன. இவ்வகை சார்ந்த பாடற்பொருண்மை, வழங்குதல் பொருளில் அமைந்தவை. மிகச் சில இடங்களில் இத்தகைய குறிப்புகள் காணப்படுகின்றன.*

*நக்கீரர், முருகனிடத்து வீடுபேறு வழங்கும்படி கேட்கிறார். முருகன் மனிதர்களுக்கு வீடுபேற்றைக் கொடையாக வழங்குகிறான் என்பது கருத்து (திரு.295). இது போலவே கடுவன் இளவெயினாரும் முருகனிடம் அருள் வேண்டும் பாடல் காணப்படுகிறது (பரி.5:79-81).*

ஆய்அண்டிரன் நீலமணி, கலிங்கம் (நாகத்திடம் பெற்றது) போன்றவற்றை இறைவனுக்கு வழங்கியதாக ஒரு செய்யுளில் கூறப்பட்டுள்ளது (சிறு.95). செல்வக்கடுங்கோவாழியாதன் கோயிலுக்கு நிலம் வழங்கியது பதிற்றுப்பத்துப் பாடலில் இடம் பெற்றுள்ளது (பதிற். பதி.7).

## தொகுப்புரை

பரிசு வழங்குற்குரிய காரணங்கள் அனைத்தும் தொகுத்துக் கூறப்பட்டுள்ளன. திறன், நட்பு, வெற்றிச் செயல், பணிந்து கேட்டல், பசி ஆகிய காரணங்கள் கூறப்பட்டுள்ளன. பரிசில் நிகழும் இடங்களில் அரசவை, இல்லம், ஊர், நகர், நாடு, போர்க்களம், பாசறை, கடற்கரை ஆகியவற்றில் பரிசு வழங்கிய சூழல்கள் சுட்டப்பட்டுள்ளன. பரிசில் நிகழ்ந்த பொழுதுகளில் பகல், இரவு, மாலை பொழுது, விடியற்காலை ஆகியன குறிப்பிடப்பட்டுள்ளன. கொடுப்போர் கொள்வோர் உறவுகளில் அரசியல் தொடர்பு, அறிவாற்றல் குறித்து ஏற்பட்ட உறவு, ஒருவரின் பெருமையை வெளிப்படுத்துதல், மரபாகப் பரிசு வழங்குதல், ஆன்மிக உறவுகள் ஆகியவை விளக்கப்பட்டுள்ளன.

## சான்றெண் குறிப்புகள்

1. **குறள்**.67.
2. தி.வே.கோபாலையர், ந.அரணமுறுவல் (ப.ஆர்.), **தொல்., சொல்., சேனா.(உரை.),** நூ.78.
3. மேலது., நூ.76.
4. **குறள்**.388.
5. க.கைலாசபதி, **வீரயுக கவிதைகள்** (மொ.பெ.), ப.303.
6. மேலது., ப.136.
7. மேலது.,
8. சு.சண்முகசுந்தரம் (தொ.ஆ.), **சங்க இலக்கிய ஆய்வுகளும் அட்டவணைகளும்**, ந.சஞ்சீவி, ப.12.
9. கணேசையர் (ப.ஆ.), **தொல்., பொருள்., நச்சர் (உரை).,** நூ.58.
10. **புறப்பொருள் வெண்பாமாலை**, நூ.1.
11. கணேசையர் (ப.ஆ.), மு.கு.நூ., நூ.58.
12. **புறப்பொருள் வெண்பாமாலை**, பா.1, கொளு 13, எ.கா. பாடல்.
13. **தமிழ் லெக்சிகன்**, தொ.5, ப.2599.
14. பவானந்தம்பிள்ளை, **பவானந்தர் தமிழ்ச் சொல்லகராதி**, ப.410.
15. கணேசையர் (ப.ஆ.), **தொல். சொல். நச்சர். (உரை.),** நூ.88.
16. **குறள்**.786.
17. மேலது., 100.
18. பவானந்தம்பிள்ளை, மு.கு.நூ., ப.199.
19. குறள்.52.
20. கே.ஏ.நீலகண்ட சாஸ்திரி, **சோழர்கள் (மொ.பெ.), புத்தகம் 2**, ப.630.
21. ச.திருஞானசம்பந்தம் (உ.ஆ.), **அகப்பொருள் விளக்கம்**, நூ.243.
22. மறைமலை அடிகள் உரை, **முல்லைப்பாட்டு**, பா.80.
23. **தமிழ் லெக்சிகன்**, தொ.5, ப.3147.
24. மேலது., தொ.4, ப.1975.
25. அ.தட்சிணாமூர்த்தி, **சங்க இலக்கியம் உணர்த்தும் மனித உறவுகள்**, ப.207.
26. **குறள்**. 388.

27. **குறள்**.471.
28. கணேசையர் (ப.ஆ.), **தொல்., பொருள்., நச்சர் (உரை).**, நூ.91.
29. **தமிழ் லெக்சிகன்,** தொ.6, ப.3733.
30. கணேசையர் (ப.ஆ.), மு.கு.நூ., நூ.91.
31. **திருக்குறள்,** அதிகாரம் 78.
32. மேலது.,
33. அ.தட்சிணாமூர்த்தி, மு.கு.நூ., ப.246.
34. **தமிழ் லெக்சிகன்,** தொ.5, ப.2977.
35. மேலது.,
36. தி.வே.கோபாலையர், **தமிழ் இலக்கணப் பேரகராதி**, **பொருள்., அகம்.,** ப.131.
37. மேலது., ப.131.
38. ஏ.திருநாவுக்கரசு (ப.ஆ.), "துரியோதனன் சபை", **பாரதியார் பாடல்கள், பாஞ்சாலி சபதம்**, பா.4.

## முடிவுரை

சங்க இலக்கியங்களிலிருந்து கிடைத்த தரவுகளை இணைத்து ஆராய்ந்ததன் அடிப்படையில் தெரிவு செய்யப்பெற்ற முடிபுகள் இப்பகுதியில் வரிசைப்படுத்தப்படுகின்றன.

முதற்கண் கருதுகோளின் மெய்மைத் தன்மை எடுத்துக் கொள்ளப்பெற்றுள்ளது. முன்னுரையில் கூறப்பட்ட கருதுகோள் பெரிதும் பொருந்துவதாக உள்ளது. அதாவது பரிசு/கொடை போன்ற பண்பாட்டுக் கூறுகள் பண்டைத் தமிழகத்தில் மக்களிடையே காணப்பட்ட பொதுப்பண்பாக இருந்துள்ளது. கொடைப்பண்பு எல்லோராலும் விரும்பப்பட்டது. அரசர் போன்றோர் மட்டுமின்றிப் பொதுமக்களும் ‘கொடை’ வழங்குவதை அறமாகக் கருதிச் செய்து வந்துள்ளனர்.

பரிசில் (கொடை) உருவாக்கத்திலிருந்து தொடர்ந்து வழிவழியாகப் பின்பற்றப்பட்டதாகத் தெரிகிறது. அதன் பின்னர் உடைமையாளர்கள் இதனைத் தொடர்ந்துள்ளனர். பிற்காலத்தில் இஃது ஓர் அறநெறியாக மாறிவிட்டது.

பெரும் புலவர்கள் மிகுதியும் பரிசில் பெற்றுள்ளனர். பொருள் தேவையுடையோர் மிகுதியும் கொடை பெற்றுள்ளனர். பரிசில், கொடை என்னும் சொற்கள் சங்ககாலப் புலவர்களுக்கு முன்னரே சமூகத்தில் வழங்கி வந்த சொற்களாகும். இச்சொற்கள் இலக்கண இலக்கிய வழக்குச் சொற்களாகிவிட்டன.

பரிசில், கொடை என்னும் பொருளில் வேறு பல சொற்கள் அரசியல், சமூகப்பொருளாதார மாற்றங்களினால் உருவாகி இருக்கின்றன. நீதி இலக்கியங்கள் குறிப்பிடும் அறங்களுள் இவை ஈகை என்னும் பொருளில் வலியுறுத்தப்பட்டன.

சங்க இலக்கியங்களில் 'பரிசில்', 'ஈகை' என்னும் சொற்கள் மிகுதியாக உள்ளன. இவற்றுள்ளும் புறநானூற்றில் பெருமளவு காணப்படுகின்றன. 'கொடை' குறைவாகப் பதிவாகியுள்ளது. இப்பொருளில் வரும் 'அருளுதல்' இறை வழியில் சார்த்திக் கூறப்படுகின்றது.

மன்னர்கள் பெரும்பகுதியினராய் இருப்பதால் அவர்களை எண்ணிக்கையில் ஒன்றாக்கி, அவர்களின் பெயர்களை அகரவரிசைப்படுத்தி இங்குத் தரப்பட்டுள்ளது. சேர, சோழ, பாண்டியர் என்ற மூவேந்தர்களுள் சேர மன்னர்கள் மிகுதியாகப் பரிசளித்துள்ளனர்.

பதிற்றுப்பத்தில் காணப்படும் சேரர்கள் அனைவருமே வீரம், புகழ் போன்றவற்றிற்குப் பரிசளித்தவராய்க் காணப்படுகின்றனர். வரலாற்றில் சோழர் மற்றும் பாண்டிய அரசர்கள் செல்வாக்குடையவர்களாகக் காணப்படுகின்றனர். பரிசில் வழங்கிய அனைவரும் போர் வெற்றியைப் பாடியமைக்காகப் பரிசு வழங்கியுள்ளனர்.

தொன்மையான பாண்டிய அரசர்கள் தொடங்கிச் சேர, சோழ, அரசர்கள் மரபிலும் கலைகளைப் போற்றிப் பரிசு தருதல் நடைபெற்றுள்ளது. ஆய்விற்கு எடுத்துக் கொண்ட கொடுப்போர் பட்டியலில் (மன்னர் முதலானோர்) கலைஞர்களுக்குப் பொருள் தந்தோர் எண்ணிக்கை முப்பத்தொன்று.

கலைஞர்களுக்குப் பரிசளித்தவர்களுள் சேரர்களும், சோழர்களும் சற்றொப்ப, சம அளவில் காணப்படுகின்றனர். பாண்டியர்கள் குறைந்த எண்ணிக்கையில் உள்ளனர். மன்னரல்லாத வீரர், புலவர், பொதுமக்களுள் சிலர் கொடை வழங்கியதாகத் தெரிகிறது. இறைப்பற்று மேலோங்கிய நிலையில் இறைவனே வழங்குவோனாகக் கூறப்படுகிறான்.

பெறுவோருள் (பொருள் முதலியவை) புலவர், இரவலர், கலைஞர்கள், பொதுமக்கள் என வரும் வரிசையில் இரவலர்கள் மிகுதியாகக்

காணப்படுகின்றனர். இரவலர்கள் மிகுதியும் கொடுப்போர் வாழ்ந்த இடங்களிலேயே பொருள் பெற்றுள்ளனர். இரவலர்கள் குழுவாக வந்து பொருள் பெற்றுள்ளனர். புலவர்கள் ஒவ்வொருவரும் தனித்தனியாகச் சென்று கொடை பெற்றுள்ளனர். புகழ்தல் என்னும் செயலைப் புவலர்களே செய்துள்ளனர்.

கல்வி, கேள்வி என்பன புலவர்க்கும், மன்னர்க்கும் பொதுவில் அமைந்திருந்தன. மிகுந்த மதிப்புடனும், அன்புடனும் போற்றப்பட்டுப் புலவர்கள் பொருள் பெற்றுள்ளனர். பரிசில் பெறும் புலவர்கள் சிலரின் பெயர்கள் வெளிப்படையாகத் தெரிகின்றன. ஔவையார், பரணர், பெருஞ்சித்திரனார் போன்றோர் இவர்களுள் சிலர்.

கூத்தர் போன்ற கலைஞர்கள், கலை நிகழ்ச்சிகள் நிகழ்த்தியும், வறுமையைக் கூறியும் பொருள் பெற்றுள்ளனர். புலமை வாய்ந்த புலவர்கள் மற்றும் வீரர்கள் ஆகியோர் போர் நடக்கும் இடங்களில் மன்னர்களிடத்துப் பரிசு பெற்றுள்ளனர். மற்றவர்கள் சென்றதாகக் குறிப்பு இல்லை.

பொதுமக்களாகச் சுட்டப்படுவோர் மன்னர் அல்லாத மற்றவரிடத்துப் பொருள் பெற்றதாகத் தெரிகிறது. இறைவனே பொருள்களைப் (படையல், தேவதானம்) பெறுவதாகக் கூறப்பட்டிருக்கிறது.

பரிசுப் பொருட்களில் உணவும் உணவு சார்ந்த பொருட்களும் வழங்கப்பட்டுள்ளமை பல இடங்களில் பதிவாகியுள்ளன. உணவு கொடைப் பொருளாகப் பொருள் பெறுவோர் அனைவருக்கும் கிடைத்துள்ளது. கொடை வழங்கும் மனப்பான்மையுடன் உணவும் இணைத்துக் கொடுக்கப்பட்டதால் உணவும் உணவுப் பொருள்களும் பரிசுப் பொருளாகக் கருதுவதற்கு இடமுண்டு.

பசிபோக்கும் உணர்வில் வழங்கப்பட்டது உணவாகவும், பின் பயன்பாட்டிற்கு வழங்கப்பட்டது உணவுப் பொருள்களாகவும் அமைந்திருந்தன.

கரும்பு, அரிசி, சமைத்த அரிசி உணவு, ஊன் போன்றவை வழங்கப்பட்டமை கொண்டு அப்பகுதி நல்ல விளைநிலமாக இருக்கலாம் என்று தோன்றுகிறது.

சாமை, தினை, வரகு ஆகியவை புன்செய் நிலப்பயிர்களாக உள்ளவை. இந்நிலப்பகுதிகளில், தேன், பால், கள் போன்றவையும் கிடைத்துள்ளன. இவற்றை குறிஞ்சி முதலிய நால்வகை நிலங்களில் விளைந்த பொருள் என அடையாளம் காண முடிகிறது.

பொன் அணிகலன்கள் புலவர்களுக்கும், கூத்தர் முதலான கலைஞர்களுக்கும் மிகுதியாகத் தரப்பட்டிருக்கின்றன. இவை இரவலர்களுக்கு அரிதாகத் தரப்பட்டுள்ளன. பொற்காசுகள், பொன் அணிகலன்கள், யானை முதலான விலங்குகளுக்கு அணிவிக்கப்பெறும் பொன் அணிகலன்கள் பரிசில்களாகத் தரப்பட்டுள்ளன.

பரிசுக்குத் தரப்பட்ட யானை போன்ற விலங்குகளும் மதிப்புடைய பொருள்களாகக் கொடுக்கப்பட்டுள்ளன. ஆடை வழங்கல் இரவலர்க்கு மிகுதியாக வழங்கப்பட்டுள்ளன. வரலாற்றில் அது மதிப்புடைய பரிசிலாகக் கருதப்பட்டுள்ளது. உடுத்தும் உடை கொடுப்பது பண்பாட்டின் அடையாளமாக வரலாற்றில் அமைந்துள்ளது.

ஊர், நாடு என்பன பரிசுப் பொருளாகத் தரப்படுதல், அப்பகுதியிலிருந்து வரும் வருவாயை உரிமையாக்கியது எனத் தெரிகிறது. கல்வி, கேள்வி, பண்பாட்டுக் கூறுகள் (இறைவனை வணங்குதல்), பழக்கவழக்கங்கள் (மகட்கொடை) போன்றவையும் கொடைப் பொருள் போலப் புனைவது இலக்கிய மரபாக உள்ளது.

பரிசு வழங்கலுக்குரிய காரணங்களுள் புகழ்ந்து பாடுதற்குத் தரப்பட்ட பரிசில்கள் முக்கிய இடம்பெறுகின்றன. வீரத்தைப் பாராட்டி வழங்குதல் வீரர்களுக்கு உரியதாகக் காணப்படுகின்றது. நட்புக் கருதிப் பரிசுகள் வழங்குவது புலவர்களுக்கு உரியதாகிறது.

பரிசுகள் வழங்கிய இடம் பெரும்பகுதியும் மன்னர் முதலானோர் தங்கியிருக்கும் அரண்மனை முதலான இடங்களில் நிகழ்ந்துள்ளது. பொருள்கள் உற்பத்தியாகும் இடங்களில் அவ்விடத்திலேயே வேண்டியோர்க்கு மக்கள் வழங்கியுள்ளனர் (கடற்கரை, விளைநிலம்).

கொடை அளித்தலில் மன்னர்கள் நேரம், பொழுது பாராது, புலவர் முதலானோர் வரும் போதெல்லாம் பொருள் வழங்கியுள்ளனர். பொருள் பெறுவோரிடம் ஏற்பட்ட இரக்கம், நட்பு, கல்வி ஆற்றலைப் போற்றல் ஆகியவை கொடுப்போர்க்கும் கொள்வோர்க்கும் உள்ள உறவின் தன்மைகளாக அமைந்துள்ளன.

மன்னர்களை வகைப்பிரித்து அவர்கொடுத்த பொருளையும் பொருள் பெற்றோரையும் ஆராய்ந்து பழங்கால அரசியல் சமூகப் பொருளாதார நிலையைத் தனித்துக் கூறுவதற்கு மேலும் இவ்வாய்வில் இடம் இருக்கிறது.

# துணைநூற் பட்டியல்

## முதன்மை ஆதாரம்


*பரிமணம், அ.ம., பாலசுப்பிரமணியன், கு.வெ., (தலைமைப் பதிப்பாசிரியர்கள்),* அகநானூறு மூலமும் உரையும், *நியூ செஞ்சுரி புக்ஹவுஸ் (பி) லிட்., சென்னை, மூ.அ., 2007.*

---. ஐங்குறுநூறு மூலமும் உரையும், *நியூ செஞ்சுரி புக்ஹவுஸ் (பி) லிட்., சென்னை, மூ.அ., 2007.*

---. கலித்தொகை மூலமும் உரையும், *நியூ செஞ்சுரி புக்ஹவுஸ் (பி) லிட்., சென்னை, மூ.அ., 2007.*

---. குறுந்தொகை மூலமும் உரையும், *நியூ செஞ்சுரி புக்ஹவுஸ் (பி) லிட்., சென்னை, மூ.அ., 2007.*

---. நற்றிணை மூலம் உரையும், *நியூ செஞ்சுரி புக்ஹவுஸ் (பி) லிட்., சென்னை, மூ.அ., 2007.*

---. பத்துப்பாட்டு முதற்பகுதி, இரண்டாம் பகுதி, மூலமும் உரையும், *நியூ செஞ்சுரி புக்ஹவுஸ் (பி) லிட்., சென்னை, மூ.அ., 2007.*

---. பதிற்றுப்பத்து மூலமும் உரையும், *நியூ செஞ்சுரி புக்ஹவுஸ் (பி) லிட்., சென்னை, மூ.அ., 2007.*

---. பரிபாடல் மூலமும் உரையும், *நியூ செஞ்சுரி புக்ஹவுஸ் (பி) லிட்., சென்னை, மூ.அ., 2007.*

---. புறநானூறு மூலமும் உரையும், *நியூ செஞ்சுரி புக்ஹவுஸ் (பி) லிட்., சென்னை, மூ.அ., 2007.*

**துணை ஆதாரங்கள்**


*அருணாசலம், ப.,* — **பக்தி இலக்கியம்,** *முல்லை நிலையம், சென்னை, ம.ப, 2007.*

*அனந்தராமையர், இ.வை., (ப.ஆ.)* — **கலித்தொகை மூலமும், நச்சினார்க்கினியர் உரையும்,** *தமிழ்ப் பல்கலைக்கழகம், தஞ்சாவூர், 1984.*

*ஆனந்தன், சு.,* — **தமிழ் இலக்கிய வரலாறு,** *கண்மணி பதிப்பகம், திருச்சி, இருபதாம் பதிப்பு, 2012.*

*இராமசாமிப்புலவர், சு.ஆ. (ப.ஆ.)* — **நீதி நூல்வரிசை,** *பாரி நிலையம், சென்னை, ஆண்டு இல்லை.*

*இராமலிங்கம், அரங்க.,* — **சங்க இலக்கியத்தில் வேந்தர்,** *பாரதி புத்தகாலயம், சென்னை, 2006.*

*இராமலட்சுமணன் (ப.ஆ.)* — **பாரதிதாசன் கவிதைகள்,** *உமா பதிப்பகம், சென்னை, ஐந்தாம் பதிப்பு, 2009.*

*இளவரசு. சோம. (ப.ஆ.)* — **நன்னூல் விருத்தியுரை,** *அண்ணாமலைப் பல்கலைக்கழகம், சிதம்பரம், 1981.*

*உலகநாதன், செ. (உ.ஆ.)* — **முத்தொள்ளாயிரம்-தெளிவுரை,** *முல்லை நிலையம், சென்னை, ம.ப., 2006.*

*கணேசையர், சி. (ப.ஆ.)* — தொல்காப்பியம் பொருளதிகார மூலமும் நச்சினார்க்கினியர் உரையும், *உலகத்தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை, இ.ப., 2007.*

| | |
|---|---|
| *கணேசையர், சி.*<br>*(ப.ஆ.)* | **தொல்காப்பியம் சொல்லதிகார மூலமும் சேனாவரையருரையும்,**<br>*உலகத்தமிழாராய்ச்சி நிறுவனம்,*<br>*சென்னை,*<br>*2007.* |
| *கதிர் முருகு,*<br>*சுபாஷிணி, கு.*<br>*(உ.ஆர்.)* | **காரைக்காலம்மையார் படைப்புகள்,**<br>*சாரதா பதிப்பகம்,*<br>*சென்னை,*<br>*2007.* |
| *கமலக்கண்ணன்,*<br>*(உ.ஆ.)* | **நாலாயிர திவ்வியப்பிரபந்தம், மூலமும் தெளிவுரையும்,**<br>*தொ.2, 3, 4,*<br>*வர்த்தமானன் வெளியீடு,*<br>*சென்னை,*<br>*2011.* |
| *குருசாமி, ம.ரா.போ.*<br>*(ப.ஆ.)* | **பாரதி பாடல்கள் (ஆய்வுப்பதிப்பு),**<br>*தமிழ்ப் பல்கலைக்கழகம்,*<br>*தஞ்சாவூர்,*<br>*இ.ப., 1989.* |
| *குருசாமி, ம.ரா.போ.*<br>*(உ.ஆ.)* | **கபிலம்,**<br>*நியூ செஞ்சுரி புக்ஹவுஸ் (பி) லிட்.,*<br>*சென்னை,*<br>*2010.* |
| *குருநாதன், வ.,* | **சங்க கால அரச வரலாறு,**<br>*தமிழ்ப் பல்லைக்கழகம்,*<br>*தஞ்சாவூர்,*<br>*2001.* |
| *கைலாசபதி, க.,* | **வீரயுக கவிதைகள் (மொ.பெ.),**<br>*நியூ செஞ்சுரி புக்ஹவுஸ் (பி) லிட்.,*<br>*சென்னை,*<br>*இ.ப., 2009.* |
| *கோபாலையர், தி.வே.*<br>*அரணமுறுவல், ந.*<br>*(ப.ஆர்.)* | **தொல்காப்பியம், சொல்லதிகாரம், சேனாவரையம்,**<br>*தமிழ்மண் பதிப்பகம்,*<br>*சென்னை,*<br>*2003.* |
| *கோவிந்தன், புலவர் கா.,* | **சங்ககால அரசர் வரிசை (பகுதி-க),**<br>*திருநெல்வேலித் தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம்,*<br>*சென்னை,*<br>*ம.ப., 1956.* |

*கௌமாரீஸ்வரி, எஸ்.,*
*(ப.ஆ.)*
தொல்காப்பியம், எழுத்து-சொல்-பொருள் மூலமும் உரையும், இளம்பூரணர் உரை,
*சாரதா பதிப்பகம்,*
*சென்னை,*
***2010.***

---.
வளையாபதி, குண்டலகேசி மூலமும் உரையும்,
*சாரதா பதிப்பகம்,*
*சென்னை,*
***2009.***

---.
சீவகசிந்தாமணி மூலமும் உரையும்,
*சாரதா பதிப்பகம்,*
*சென்னை,*
***2011.***

---.
சங்க இலக்கியம் – பதினெண் கீழ்க்கணக்கு நூல்கள் மூலமும் உரையும்,
*சாரதா பதிப்பகம்,*
*சென்னை,*
***2012.***

*சங்கரவள்ளிநாயகம், அ.,*
நாட்டுப்புறத்தமிழ்,
*அகரம் வெளியீடு,*
*கும்பகோணம்,*
***1996.***

*சக்திவேல், சு.,*
தமிழ்மொழி வரலாறு,
*மணிவாசகர் பதிப்பகம்,*
*சென்னை,*
*ஆ.ப., **2006.***

*சண்முகசுந்தரம், சு.*
*(தொ.ஆ.)*
சங்க இலக்கிய ஆய்வும் அட்டவணையும்,
*காவ்யா,*
*சென்னை,*
***2010.***

*சாமிநாதையர், உ.வே.*
*(உ.ஆ.)*
சிலப்பதிகார மூலமும் அரும்பதவுரையும் அடியார்க்கு நல்லாருரையும்,
*உ.வே.சாமிநாதையர் நூல் நிலையம்,*
*சென்னை,*
*ப.ப., **2001.***

சாமிநாதையர், உ.வே. (உ.ஆ.) — **புறநானூறு மூலமும் உரையும்,** *டாக்டர் உ.வே.சாமிநாதையர் நூல் நிலையம், சென்னை, எ.ப., 2014.*

சிவத்தம்பி, கா., — **அகத்திணைக் கோட்பாடு,** *நியு செஞ்சுரி புக்ஹவுஸ் (பி) லிட்., சென்னை, 2009.*

சுந்தரமூர்த்தி, க., — **சிற்றிலக்கியத் திரட்டு, தொகுதி 1, 2,** *சென்னைப் பல்கலைக்கழகம், சென்னை, 2001.*

சுப்பையா, அரங்க., — **நன்னூல் களஞ்சியம்,** *ராஜேஸ்வரி புத்தக நிலையம், சென்னை, 2003.*

சொக்கப்ப நாவலர் (உ.ஆ.) — **தஞ்சைவாணன் கோவை,** *பாரி நிலையம், சென்னை, 2004.*

சோமசுந்தரனார், பொ.வே. (உ.ஆ.) — **பத்துப்பாட்டு, பகுதி 1, 2,** *திருநெல்வேலி, தென்னிந்திய சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம், சென்னை, 2007.*

சோமசுந்தரனார், பொ.வே. (உ.ஆ.) — **பதிற்றுப்பத்து, ஆறாம் பத்து,** *திருநெல்வேலி, தென்னிந்திய சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம், சென்னை, ம.ப., 2007.*

---. — **புறப்பொருள் வெண்பாமாலை,** *திருநெல்வேலி, தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், சென்னை, 2000.*

தட்சிணாமூர்த்தி, அ., — **சங்க இலக்கியங்கள் உணர்த்தும் மனித உறவுகள்,** *மங்கையர்க்கரசி பதிப்பகம், தஞ்சாவூர், 2001.*

*தமிழண்ணல்,*
**நன்னூல்,**
*சொல்லதிகாரம்,*
*மீனாட்சி புத்தக நிலையம்,*
*மதுரை,*
*2004.*

*திருஞானசம்பந்தம், ச.*
*(உ.ஆ.)*
**அகப்பொருள் விளக்கம்,**
*கதிர் பதிப்பகம்,*
*திருவையாறு,*
*2005.*

*திருநாவுக்கரசு, ஏ.*
*(ப.ஆ.)*
**பாரதியார் கவிதைகள்,**
*வானதி பதிப்பகம்,*
*சென்னை,*
*பதினாறாம் பதிப்பு, 2012.*

*திருவேங்கட இராமானுஜதாசன், த.*
*(உ.ஆ.)*
**நாலாயிர திவ்யப் பிரபந்தம்**
**மூலமும் உரையும்,**
**முதல் ஆயிரம், தொகுதி இரண்டு,**
**மூன்று, நான்கு,**
*உமா பதிப்பகம்,*
*சென்னை,*
*இ.ப., 2014.*

*துரைசாமிப்பிள்ளை, ஔவை சு.*
*(உ.ஆ.)*
**பதிற்றுப்பத்து, மூலமும் உரையும்,**
*திருநெல்வேலி, தென்னிந்திய சைவ*
*சித்தாந்த நூற்பதிப்புக் கழகம்,*
*சென்னை,*
*ம.ப., 2007.*

---.
**புறநானூறு, பகுதி I, II,**
*தென்னிந்திய சைவ சித்தாந்த*
*நூற்பதிப்புக் கழகம்,*
*சென்னை,*
*ம.ப., 1996.*

*நச்சினார்க்கினியர்,*
*(உ.ஆ.)*
**கலித்தொகை மூலமும் உரையும்,**
*தென்னிந்திய சைவ சித்தாந்த*
*நூற்பதிப்புக் கழகம்,*
*சென்னை,*
*ம.ப., 2007.*

*நடராஜன், பி.ரா.*
*(உ.ஆ.)*
**சுந்தரமூர்த்தி சுவாமிகள், தேவாரம்,**
*உமா பதிப்பகம்,*
*சென்னை,*
*நா.ப., 2010.*

*நாராயணசாமி ஐயர், பின்னத்தூர் அ.,* **நற்றிணை நானூறு,**
*திருநெல்வேலி தென்னிந்திய சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம்,*
*சென்னை,*
*நா.ப., 1967.*

*நீலகண்ட சாஸ்திரி, K.A.,*
*இராமன், K.V.*
*(மொ.பெ.),* **சோழர்கள், புத்தகம் 1, புத்தகம் 2,**
*நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட்.,*
*சென்னை,*
*மூ.ப., 2009.*

*பழனியப்பா பிரதர்ஸ்,*
*(ப.ஆ.)* **திருக்குறள் பரிமேலழகர் உரை,**
*பழனியப்பா பிரதர்ஸ்,*
*சென்னை,*
*நா.ப., 1994.*

*பாலையன், அ.,*
*புலியூர்க்கேசிகன்,*
*(உ.ஆர்.)* **சங்க இலக்கியம், அகநானூறு, புறநானூறு, மூலமும் உரையும்,**
*சாரதா பதிப்பகம்,*
*சென்னை,*
*2012.*

*புலியூர்க்கேசிகன்*
*(உ.ஆ.)* **அகநானூறு,**
*கங்கை புத்தக நிலையம்,*
*சென்னை,*
*2010.*

---. **நன்னூல் காண்டிகையுரை, சொல்லதிகாரம்,**
*முல்லை நிலையம்,*
*சென்னை,*
*ம.ப., 2001.*

---. **மணிமேகலை,**
*பாரி நிலையம்,*
*சென்னை,*
*ம.ப., 2011.*

*மகாதேவன், மேஜர் கதிர்,* **பழந்தமிழர் வீரப்பண்பாடு,**
*ஏரக வெளியீடு,*
*மதுரை,*
*1980.*

*மறைமலை அடிகள்,*
*(ஆராய்ச்சியுரை)* **முல்லைப்பாட்டு,**
*ராமையா பதிப்பகம்,*
*சென்னை,*
*2006.*

*மாணிக்கம், வ.சுப.,* **தமிழ்க்காதல்,**
*சாரதா பதிப்பகம்,*
*சென்னை,*
***2007.***

*மாதையன், பெ.,* **அகத்திணைக் கோட்பாடும், சங்க அகக்கவிதை மரபும்,**
*பாவை பப்ளிகேஷன்ஸ்,*
*சென்னை,*
***2009.***

*மீனாட்சிசுந்தரம் பிள்ளை,* **சேக்கிழார் பிள்ளைத்தமிழ்,**
*திருவாவடுதுறை ஆதினம்,*
***1966.***

*முரளி, சதுரா, ஜீ.ச.,* **பன்னிரு திருமுறை,**
*சதுரா பதிப்பகம்,*
*சென்னை,*
***2006.***

*மோகன், இரா. (உ.ஆ.),* **பத்துப்பாட்டு மூலமும் உரையும்,**
*நியூ செஞ்சுரிபுக்ஹவுஸ் (பி) லிட்.,*
*சென்னை,*
***2004.***

*ராஜ்கௌதமன்,* **பாட்டும் தொகையும் தொல்காப்பியமும் தமிழ்ச் சமூக உருவாக்கமும்,**
*தமிழினி பதிப்பகம்,*
*சென்னை,*
***2006.***

*வல்லிக்கண்ணன்,* **பாரதிக்கு பின் உரைநடை வரலாறு,**
*ஜெகநாதன் புத்தக நிலையம்,*
*திருச்சி,*
***2012.***

*வெள்ளைவாரணர், க., (உ.ஆ.)* **பன்னிருதிருமுறை, முதல்பாகம்,**
*அண்ணாமலைப் பல்கலைக்கழகம்,*
*சிதம்பரம்,*
***1961.***

*வேங்கடராமன், எச்.,* **நற்றிணை மூலமும் உரையும்,**
*டாக்டர் உ.வே.சாமிநாதையர் நூல் நிலையம்,*
*சென்னை,*
***1997.***

*ஜம்புலிங்கம், அ.,* **சங்க கால வேந்தர்களின் சமுதாயப்பணி,** *இந்துமதி பதிப்பகம், சிதம்பரம், 2003.*

**ஆங்கில நூல்கள்**

Debiprasad Chattobodhyaya, **Philosophy science and Social Progress,** People Publishing House, New Delhi, 1992.

Thomas Lehmann and Thomas Malten, **A Word Index of Old Tamil Cankam Literature,** Franz Steiner Verlag Stuttgart, 1992.

Winslow, M., **A Comprehensive Tamil and English Dictionary,** Asian Educational Services, New Delhi, Sixth Edition, 1989.

**அகராதிகள்**

*கதிரைவேற்பிள்ளை, நா.,* **தமிழ்மொழியகராதி,** *வித்தியாரத்நாகர அச்சுக்கூடம், இலங்கை, 1898.*

*கோபாலையர், தி.வே.,* **தமிழ் இலக்கணப் பேரகராதி, பொருள்., அகம்.4,** *தமிழ்மண் பதிப்பகம், சென்னை, 2005.*

*சுப்பிரமணியன், பா.ரா., (முதன்மை ஆசிரியர்),* **க்ரியாவின் தற்காலத் தமிழ் அகராதி,** *தமிழ்-தமிழ்-ஆங்கிலம், சென்னை, ம.ப., 1997.*

*பவானந்தம்பிள்ளை,* பவானந்தர் தமிழ்ச்சொல்லகராதி, *நியூ செஞ்சுரி புக்ஹவுஸ் (பி) லிட்., சென்னை, **1925.***


**களஞ்சியங்கள்**


*அருணாசலம், ப., (முதன்மைப் பதிப்பாசிரியர்),* சங்க இலக்கியப் பொருட்களஞ்சியம், தொகுதி மூன்று, *தமிழ்ப் பல்கலைக்கழகம், தஞ்சாவூர், ம.ப., 2001.*

*இராசேந்திரன், ச.,* தற்காலத் தமிழ்ச் சொற்களஞ்சியம், *தமிழ்ப் பல்கலைக்கழகம், தஞ்சாவூர், **2001.***

*சாரங்கபாணி, இரா. (ப.ஆ.)* சங்க இலக்கியப் பொருட்களஞ்சியம், தொகுதி ஒன்று, *தமிழ்ப் பல்கலைக்கழகம், தஞ்சாவூர், ம.ப., 2001.*

*சிங்காரவேலு முதலியார், அ.,* அபிதானசிந்தாமணி, *சீதை பதிப்பகம், சென்னை, **2004.***

*பரிமணம், அ.மா. (மு.ப.)* வாழ்வியற் களஞ்சியம், தொகுதி 3, *தமிழ்ப் பல்கலைக்கழகம், தஞ்சாவூர், **1994.***

*பாலுசாமி, நா. (மு.ப.)* வாழ்வியற் களஞ்சியம், தொகுதி 2, *தமிழ்ப் பல்கலைக்கழகம், தஞ்சாவூர், ம.ப., 2001.*

*வையாபுரிப்பிள்ளை, எஸ்.,* தமிழ் லெக்சிகன், தொகுதி I, IV, V, *சென்னைப் பல்கலைக்கழகம், சென்னை, ம.ப., 1982.*